# தமிழகச் செப்பேடுகள்

## தொகுதி - 1

பதிப்பாசிரியர்

**தி.ஸ்ரீ. ஸ்ரீதர்,** இ.ஆ.ப.

சிறப்பு ஆணையர்

உதவி பதிப்பாசிரியர்

முனைவர் சு. இராஜகோபால்

வெளியீடு

தமிழ்நாடு அரசு தொல்லியல்துறை

**2005**



# BIBLIOGRAPHICAL DATA


| | | |
|---|---|---|
| Title | : | **Tamilaka Seppedukal Vol. 1** |
| Editor | : | Spl. Commissinor |
| Copy Right | : | T.N. State Dept. of Archaeology |
| Subject | : | **Epigraphy** |
| Language | : | Tamil |
| Edition | : | First |
| Publication No. | : | 157 |
| Year | : | 2005 |
| Type Point | : | 11 |
| No. of Pages | : | xxvi+238 |
| Paper Used | : | 100 Gsm Maplitho |
| Printer | : | Attractive Printers<br>Thiruvalluvar Nagar<br>Kottur, Chennai - 85 |
| Publisher | : | **State Dept. of Archaeology**<br>Tamizh Valakam, Halls Road<br>Egmore - 600 008 |
| Price | : | Rs.52/- |

# பதிப்புரை

தமிழகத்தில் எழுதப்படும் பொருள்களாகக் கல், ஓலை, உலோகம், மரம், சங்கு, துணி, காகிதம், சுடுமண் எனப் பல்வகைப் பொருள்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இவற்றில் கல், ஓலை, செம்பு ஆகியவற்றின் பயன்பாடு மிகுதியாகும். இந்திய அளவில் 1987ல் எடுக்கப்பட்ட ஒரு புள்ளிவிவரப் பட்டியல், தமிழகக் கல்வெட்டுகளின் எண்ணிக்கையை முதல் இடத்தில் காட்டுவது போலவே தமிழகச் செப்பேடுகளின் எண்ணிக்கையும் முதலிடத்தில் காட்டுவது குறிப்பிடத்தக்கதாகும்.

இவை எண்ணிக்கையில் மட்டுமல்லாமல் வெளிப்படுத்தும் வரலாறு, பண்பாடு, கலை, சமயம், சமுதாயம் மற்றும் பொருளாதாரச் செய்திகளிலும் வளமானவை. இவற்றின் எண்ணிக்கை மற்றும் சிறப்பினைக் கருத்தில் கொண்டு இவற்றைச் சேகரிப்பது, படிப்பது, வெளியிடுவது தொடர்பாக ஆகஸ்ட் 2004 திங்களில் தமிழ்நாடு அரசு தொல்லியல் துறை ஒரு முனைப்புத் திட்டத்தை உருவாக்கியது. பணிகள் விரைவுபடுத்தப்பட்டன. அதன்விளைவாக இந்த பிப்ரவரி 2005, திங்களில் தஞ்சாவூர் வட்டக் கல்வெட்டுகள், தமிழகச் செப்பேடுகள் தொகுதி-1, தரங்கம்பாடி ஓலை ஆவணங்கள், கோவை மாவட்டத் தொல்லியல் கையேடு, ஜம்பை - ஓர் ஆய்வு என ஐந்து நூல்கள் தமிழில் வெளிவருகின்றன.

தமிழகச் செப்பேடுகள் தொகுதி-1 என்னும் இந்நூலில் 40 செப்பேடுகள் இடம் பெறுகின்றன. இவற்றில் ஒன்று வெள்ளிப்பட்டயம். இரண்டு தெலுங்கு எழுத்து மற்றும் மொழியில் உள்ளவை.

மதுரை நாயக்கர் மன்னர்கள், சேதுபதி மன்னர்கள், அரியலூர் மழவராயர்கள், நத்தம் பாளையப்பட்டு நாயக்கர், கூளப்பநாயக்கர், தென்காசி சீவல்லப் பாண்டியன், வீரபாண்டிய கட்டபொம்மன், விக்டோரியா மகாராணியார், ஆங்கிலேய அரசுத் தளபதி பானர்மேன் ஆகிய ஆட்சியாளர்கள் இச்செப்பேடுகளில் குறிக்கப்படுகின்றனர். ஒரு பகுதிச் செப்பேடுகளில் ஆட்சியாளர்கள் பெயர்கள் இல்லை. பிற்காலச் செப்பேடுகளான இவற்றின் காலக்கணிப்பு இவற்றில் சொல்லப்படும் தமிழ் மற்றும் சக ஆண்டுக் குறிப்புகளைச் சார்ந்துள்ளது.

இச்செப்பேடுகள் கோயில்களுக்கான நில மானியம்; கோயில் வழிபாட்டிற்காக ஒதுக்கப்பட்ட சந்தைகளின் வரி வருமானங்கள்; 24 மனைச்செட்டிகள், உலோகமாதேவிபுரம் செட்டிகள், செங்குந்தர், பன்னாட்டார், கற்பூரச் செட்டிகள், அம்பலக்காரர், குயவர், கார்காத்த வேளாளர், ஆசாரிமார், மள்ளர், குடும்பர், பள்ளு, பண்டாரம் முதலிய சமூகத்தவருக்கான மட அமைப்புகள்; சமூகத் தலைவர்களுக்கான விருதுகள்; நாட்டாண்மைச் சிறப்புகள்; குறிப்பிட்ட சமூகத்தாரிடையிலான மணஉறவு நெறிமுறைகள் எனப் பல்வேறு செய்திகளைக் கொண்டுள்ளன. இஸ்லாமியர் பற்றிய குறிப்புகளும் இரண்டு செப்பேடுகளில் உள்ளன.

கி.பி.16ஆம் நூற்றாண்டு முதல் கி.பி.19ஆம் நூற்றாண்டு வரையிலான சமுதாய ஆய்வு, மொழியியல் ஆய்வு, வரலாற்றாய்வு எனப் பல்முனைப்பட்ட ஆய்வுச் சான்றுகளுடன் விளங்கும் இச்செப்பேடுகள் ஆய்வாளர்களுக்கும், தொல்லியல் ஆர்வலர்களுக்கும், மாணவர்களுக்கும் நன்கு பயன்படக்கூடியவை. இவ்வாய்வுகளால் தமிழக வரலாறும் பண்பாடும் மேலும் பொலிவு பெறும் என்று உறுதியாக நம்பலாம்.

தமிழகச் செப்பேடுகள் தொகுதி - 1 என்னும் இந்நூலின் தலைப்பே இன்னும் செப்பேட்டுத் தொகுதிகள் வெளிவரவுள்ளதைக் காட்டி நிற்கிறது. இத்தொகுதி, தமிழ்நாடு அரசு தொல்லியல் துறை அலுவலர்களின் ஒருங்கிணைந்த முயற்சியின் வெளிப்பாடாகும். இத்துறையின் மாவட்ட அலுவகங்களில் உள்ள அலுவலர்கள் செப்பேடுகளைத் தேடிச் சேகரித்துப் படித்து, இயன்றவரை மைப்படியும், நிழற்படமும் எடுத்து அனுப்பியுள்ளனர். துறையின் நிழற்படப் பிரிவினர் படமெடுத்தும், படங்களையும் மைப்படிகளையும் கணிப்பொறியில் உள்ளிட்டும் அச்சிட உதவியுள்ளனர். இந்நூல் வெளியீட்டிற்கான ஒருங்கிணைப்பு மற்றும் பதிப்புப் பணியினை முனைவர் சு. இராசகோபால் மேற்கொண்டுள்ளார். இவர்கள் அனைவரையும் பாராட்டி மகிழ்கின்றேன்.

இத்துறையின் வெளியீடுகளுக்கு நிதியுதவி நல்கி பணிகளை ஊக்குவித்து வரும் தமிழ்நாடு அரசிற்கு எனது மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

23-2-2005
சென்னை - 113

சிறப்பு ஆணையர்

# முன்னுரை

தமிழகத்தில் முதலில் கல்வெட்டுகளைத் தொகுக்க ஆரம்பித்த ஆங்கிலேய அதிகாரிகள் தங்கள் கள ஆய்வுகளிலும், புதையல்களாகவும் செப்பேடுகளை அறியத் தொடங்கினர். வரிவிலக்கு அளிப்பது தொடர்பாக ஆங்கிலேய அரசு பழைய ஆவணங்களைப் பெற்றுக் கொண்டு புதிய வடிவில் தாள் ஆவணங்கள் வழங்கிய போது ஏராளமான செப்பேடுகள் அரசின் கருவூலங்களைச் சென்றடைந்தன. வரிவிலக்குத் தொடர்பாகச் செப்பேடுகள் தேவைப்பட்டதால் குடிசைத் தொழில் போல 19 ஆம் நூற்றாண்டு இறுதியில் செப்பேடுகள் தயார் செய்யப்பட்டதாகவும் கூறுவர்.

தமிழகத்தைச் சேர்ந்த சுமார் 400 செப்பேடுகள் இந்தியக் கல்வெட்டு ஆண்டறிக்கையில் ஆங்கிலக் குறிப்புகளுடன் பதிவாகியுள்ளன. பல செப்பேடுகள் படங்கள், வாசகம், எழுத்துப்பெயர்ப்பு, மொழிபெயர்ப்பு ஆய்வுக்குறிப்புகளுடன் எபிகிராபிகா இன்டிகா தொகுதிகளில் வெளிவந்துள்ளன. இந்தியன் ஆன்டிகுவரி தென்னிந்தியக் கல்வெட்டுத் தொகுதிகள் ஆகியவற்றிலும் சில வெளிவந்துள்ளன.

சிதறல்களாக அங்கங்கு வெளியிடப்பட்டுள்ள இச்செப்பேடுகளைத் தேடி ஆய்வு செய்வதில் உள்ள சிரமங்களைக் கருத்தில் கொண்டு தி.நா. சுப்பிரமணியன் பல்லவர் செப்பேடுகள் 30, பாண்டியர் செப்பேடுகள் 10 என்ற இரு தொகுதிகளை தமிழ் வரலாற்றுக் கழகம் வரியிலாக 30ஆண்டுகளுக்கு முன் வெளியிட்டார்.

இராமேசுவரம் கும்பாபிஷேக மலர் தொகுத்த சோம.லெ., இராமநாதபுரம் அரண்மனையில் இருந்த செப்பேடுகளைத் தமிழ்நாடு அரசு தொல்லியல் துறை கல்வெட்டுப் பயிற்சி நிறுவன மாணவர்களைக் கொண்டு படித்து அவற்றின் (சுமார் 30) வாசகங்களை வெளியிட்டார். இதன் காரணமாக ஒரு விழிப்புணர்வு ஏற்பட்டு பலரும் செப்பேடுகளைத் தேடி இதழ்களில் வெளியிடும் போக்கு முனைப்புப் பெற்றது. 'மராட்டியர் செப்பேடுகள்', 'சேதுபதி செப்பேடுகள்', 'கொங்கு நாட்டு சமூக ஆவணங்கள்', 'திருவாடுதுறை

ஆதினச் செப்பேடுகள்', 'திருப்பனந்தாள் ஆதீனச் செப்பேடுகள்' எனத் தொகுதிகளாகச் செப்பேடுகள் வெளியிடப்பட்டன.

தமிழ்நாடு அரசு தொல்லியல் துறை 'வேளஞ்சேரி திருத்தணி செப்பேடுகள்', திருமலை நாயக்கர் செப்பேடுகள் ஆகிய இரு தொகுதிகளை வெளியிட்டதோடு கல்வெட்டுக் காலாண்டிதழ், கருத்தரங்கு கட்டுரைத் தொகுதி, மாவட்டக் கையேடு ஆகியவற்றில் அவ்வப்போது செப்பேட்டு வாசகங்களை வெளியிட்டுள்ளது. இதன் தொல்லியல் செய்தி மடலில் ஐந்து செப்பேடுகள் பற்றியி குறிப்புகளும் வெளியிட்டுள்ளது.

கடந்த மூன்று திங்கள்களில் இத்துறையின் சென்னை மற்றும் மாவட்ட அலுவலர்கள் செப்பேடுகள் பற்றிய செய்திகளைத் தொகுக்கத் தொடங்கினர். இதுவரை ஏறத்தாள 100 செப்பேடுகள் தொகுக்கப் பட்டுள்ளன. இத் தொகுதியில் கல்வெட்டு இதழ்களில் சிதறல்களாக வந்த செப்பேடுகள் 26ம் பிற 14ம் ஆக 40 செப்பேடுகள் தொகுப்பாக வெளியிடப்படுகின்றன. தொகுப்பு என்பதால் ஒவ்வொரு செப்பேட்டிற்கும் ஒரே அளவாக முன்னுரை புதிதாகச் சேர்க்கப்பட்டுள்ளது. ஏற்கனவே வெளியான விரிவான ஆய்வுக் கட்டுரைகளை அடிக்குறிப்புகளில் சொல்லப்படும் தகவல்களின் மூலம் அறிந்து கொள்ளலாம்.

இத் தொகுதியில் மதுரை நாயக்க மன்னர் தொடர்பான செப்பேடுகள் பத்தும், சேதுபதிகள் தொடர்பானவை ஐந்தும் உள்ளன. மேலும் நத்தம் பாளையப் பட்டுகள் - 3, கூளப்பநாயக்கர் - 2, அரியலூர் மழவராயர் - 2, தென்காசிப் பாண்டியர் - 1, வீரபாண்டிய கட்டபொம்மன் - 1, விஜயநகரர் நாயக்கர் - 1, ஆங்கிலேயர் - 2, என மொத்தம் 27 செப்பேடுகளில் ஆட்சியாளர்கள் பற்றிய குறிப்புகள் உள்ளன. ஏனைய 13 ஆட்சியாளர் பெயரில்லாதவை. இவ்விரு வகையில் கால அடிப்படையில் இத் தொகுதியில் செப்பேடுகள் வரிசைப் படுத்தப்பட்டுள்ளன.

இச்செப்பேடுகள் அனைத்தும் ஒரு ஏட்டில் மட்டும் வாசகம் உடையவை. மயிலாடுதுறை, சேடப்பட்டி, மேல்சேவூர் ஆகிய செப்பேடுகள் வார்ப்பு முறையில் செய்யப்பட்டவை. ஏனையவை செப்புத்தகடுகளாக உள்ளவை. முன்னதில் உருவங்கள் வார்ப்பு முறையில் புடைப்பாக உள்ளன. தகடுகளாக உள்ள பலவற்றில் உருவங்கள் கோட்டுருவமாக உள்ளன.

பெரும்பாலான செப்பேடுகள் தமிழகத்தின் தென்பகுதியைச் சேர்ந்தவை. திருவண்ணாமலை, மேல் சேவூர், நெய்வேலிச் செப்பேடுகள் வட பகுதியைச் சேர்ந்தவை. இச்செப்பேடுகள் பலவும் பல தமிழகச் சமூகங்கள் தொடர்பானவை. சமூகங்களின் தோற்றம் பற்றிய விரிவான புராணங்கள் நெய்வேலி, மானூர், திருவண்ணாமலை போன்ற செப்பேடுகளில் சொல்லப்பட்டுள்ளன.

கோயில்களுக்குக் கொடை என்ற வகையில் திருமானூர், அரியலூர், நத்தம், மேல்சேவூர், திருவாடுதுறை செங்கல்பட்டு (வெள்ளிப் பட்டயம்), திருநெல்வேலி -1, 2, மானூர், இராமநாதபுரம் மூலைக் கொத்தளம் - 2, முசிறி ஆகிய செப்பேடுகள் சேர்கின்றன. அரியலூர், நத்தம் ஆகிய செப்பேடுகள் பேட்டைகளின் (சந்தை) வரி வருமானம் கோயிலுக்குத் தரப்பட்டதைச் சொல்கின்றன. நத்தம் செப்பேடு பேட்டைகளில் உள்ள வணிகர்களில் இந்துக்கள் மட்டுமல்லாது இஸ்லாமியரும் வரி வருமானத்தைத் தர ஒப்புதல் தந்ததைக் காட்டுகிறது. இந்துக் கோயில்களுக்கான இஸ்லாமியர் பங்களிப்பு உத்தரகோசமங்கை, திருநாகேஸ்வரம், நயினார் குப்பம் ஆகிய ஊர்க் கல்வெட்டுகளில் ஏற்கனவே அறியப்பட்டுள்ளது. இதுபோன்ற செய்திகள் இன்று நிலவும் சமயப் பூசல்களைக் குறைத்துச் சமயப் பொறையை ஏற்படுத்தக் கூடியவை. மேல்சேவூர் செப்பேடு கோயில் வழிபாட்டிற்குச் செட்டிகள் தங்கள் சமூகத்திடையே நிகழும் நன்மை நிகழ்வுகளில் விதிக்கப்படும் கட்டணங்கள் வாயிலாக வருவாய் ஏற்படுத்தியதைக் காட்டுகிறது.

இதுபோலவே பலசாதி சமூகங்கள் தங்களுடையதாக மடங்கள் ஏற்படுத்திக் கொள்வதையும் அவற்றின் நடவடிக்கைகளையும் திருவண்ணாமலை 24 மனை செட்டிகளது செப்பேடு, மதுரை ஆரப்பாளையம் குயவர் - செட்டியார் செப்பேடு, சேடப்பட்டி அம்பலக்காரர் செப்பேடு, ஆகிய செப்பேடுகள் காட்டுகின்றன.

அரசனால் பாராட்டப்பட்டு ஒரு பகுதி நாட்டாண்மைத் தலைமை பெறுவதை சந்தையூர், தாருகாபுரம், பாலக்கோம்பை ஆகிய செப்பேடுகளும், சமயத் தலைவர் ஒருவரால் நாட்டாண்மைச் சிறப்பு தரப் பட்டதை பள்ளப்பட்டிச் செப்பேடும் காட்டுகின்றன.

தங்கள் சமூகமாகிய கைக்கோள சமூகத்தைப் புகழ்ந்து பாடியவருக்குக் கொடுத்த மரியாதைச் சிறப்புகளை மயிலாடுதுறைச் செப்பேடு காட்டுகிறது. இடங்கை, வலங்கைப் பிணக்கில்

இடங்கையினருக்குச் சாதகமான உண்மைகளை வெளிக் கொண்டு வந்த பிராமணரைப் பாராட்டி மரியாதைகள் செய்யப்பட்டதை நெய்வேலி பண்ணாட்டார் செப்பேடு காட்டுகிறது. பஞ்சமாசப்த வாத்தியக் கருவியை இயக்குபவர்களான நாகாபாசத்தார் தங்களுக்கென்று தலைவரைத் தேர்வு செய்து அவருக்கு மரியாதைச் சிறப்புகள் செய்வதை ஆழ்வார்பேட்டை செப்பேடு - 1 காட்டுகிறது.

பாளையப்பட்டுப் பாளையக்காரர்கள் பொது நடவடிக்கைகளில் ஈடுபட்டிருந்ததை நத்தம் பாளையக்காரர் மூவர் வழங்கிய மூன்று செப்பேடுகளான நத்தம், வேலன்பட்டி, பழனிச் செப்பேடுகள் காட்டுகின்றன. பாஞ்சாலங்குறிச்சி பாளையக்காரனாகிய வீரபாண்டிய கட்டபொம்மன் திருச்செந்தூர்க் கோயில் திருப்பணிக்குக் கொடுத்த தன் ஆளுகைப் பகுதி வரிவருமானத்தைத் திருவாடுதுறை செப்பேடு காட்டுகிறது.

பாளையப்பட்டுக்களை அடக்கி ஆங்கிலேயர், கம்பெனி ஆட்சியை நிறுவிய அரசியல் நிகழ்வுகளை எட்டயபுரம் விளம்பரச் செப்பேடு தெளிவாகக் காட்டுகிறது. ஆங்கிலேய ஆட்சி நிலைபெற்றதும் கடல் கடந்து வெகு தொலைவில் உள்ள அரசுத் தலைமையைப் போற்றித் தமிழகத்தில் அன்னதானம், இலவச ஆடைகள் மற்றும் தெய்வத்திற்கு அணிகலன் வழங்கியதை செங்கல்பட்டு வெள்ளிச் செப்பேடு வெளிப்படுத்துகிறது.

மீனாட்சிபுரம் செப்பேடு குடும்பர் சமுதாயப் பெண்களின் மானத்தைக்காப்பாற்றிய 'தீண்குலச் சமயத்தை'ச் சேர்ந்த இஸ்லாமியரைப் போற்றுவதைப் பார்க்கிறோம். சமயங்களிடையே சமயப் பொறை மட்டுமின்றி சகோதரத்துவமும் இருந்தமைக்கு இச்செப்பேடு நல்ல எடுத்துக் காட்டாகும்.

இச்செப்பேட்டுத் தொகுதி 16 முதல் 19 முடிய உள்ள இலக்கியமல்லாத பொதுமக்களின் பேச்சு மொழி நடை மற்றும் ஆவண மொழி நடையை அறிந்து கொள்ள பெரிதும் உதவக்கூடியது.

அன்று வழக்கில் இருந்த வராகன், பணம் முதலிய செலாவணிகளும், பேட்டைகளிலும், துறைமுகங்களிலும் வந்து சென்ற சரக்குகளும் அவற்றிற்கான வரிவிதிப்புகளும், சமூகத்தினர் ஒவ்வொரு நிகழ்விற்கும் விதித்துக் கொண்ட கட்டணங்களும் பொருளாதாரச் செய்திகளை அறிந்து கொள்ளப் பெரிதும் உதவுபவை.

வெண்பக்கோட்டைச் செப்பேடு அரசின் ஆதரவோடு எப்படிச் சமூகத்திற்கு எதிராக வரிவிதிப்பு உண்டாக்கப்பட்டது என்பதையும் எப்படி அது தவிர்க்கப்பட்டது என்பதையும் காட்டுவதாக உள்ளது.

வெள்ளிக்குறிச்சி செப்பேடு பண்டாரம் உறவின் முறையார் தங்களிடையே மண உறவுகள் பற்றிய நெறிமுறை ஏற்படுத்திக் கொண்டதையும், வேளாண்தரவை - இளமநேரி செப்பேடு ஆண் பெண் உறவு சமூகம் தாண்டி நிகழ்ந்ததைச் சரி செய்ய எடுத்த நடவடிக்கையும் காட்டுவதாக உள்ளன..

சமூகத்தினர் வாழுமிடங்களைச் சொல்லவரும் போது ஏராளமான நாட்டுப் பிரிவுகளும், ஊர்ப் பெயர்களும் அறிய வருகின்றன. இவை ஊர்ப் பெயராய்வுக்கு நல்ல தரவுகளாகும்.

பொதுவில் இச்செப்பேட்டுத் தொகுதி அரசியல், சமுதாயம், பொருளாதாரம், மொழிநடை எனப் பல்முக ஆய்வுகளுக்கு நல்ல தரவாகப் பயன்படும் என்பதில் ஐயமில்லை.

# உள்ளடக்கம்


முன்னுரை

Summary of Copper Plates

| | | |
|---|---|---|
| 1. | வீரபாண்டிச் செப்பேடு | 1 |
| 2. | வெண்பக்கோட்டை செப்பேடு | 7 |
| 3. | வன்னிவலம்பட்டி செப்பேடு | 13 |
| 4. | பாலக்கோம்பை செப்பேடு | 17 |
| 5. | திருநெல்வேலி செப்பேடு - 1 | 20 |
| 6. | திருநெல்வேலி செப்பேடு - 2 | 23 |
| 7. | முசிறி செப்பேடு - 1 | 31 |
| 8. | முசிறி செப்பேடு - 2 | 37 |
| 9. | நங்கவரம் செப்பேடு | 43 |
| 10. | மதுரை ஆரப்பாளையம் செப்பேடு | 49 |
| 11. | சந்தையூர் செப்பேடு - 1 | 53 |
| 12. | சந்தையூர் செப்பேடு - 2 | 59 |
| 13. | வேள்ான்தரவை - இளமநேரி செப்பேடு | 64 |
| 14. | வெள்ளிக்குறிச்சி செப்பேடு | 71 |
| 15. | இளையான்குடி செப்பேடு | 78 |
| 16. | இராமநாதபுரம் மூலைக்கொத்தளம் செப்பேடு - 1 | 82 |
| 17. | இராமநாதபுரம் மூலைக்கொத்தளம் செப்பேடு - 2 | 89 |
| 18. | வேலன்பட்டி செப்பேடு | 96 |
| 19. | நத்தம் செப்பேடு | 101 |

| | | |
|---|---|---|
| 20. | பழனி செப்பேடு | 107 |
| 21. | நெய்வேலி செப்பேடு | 113 |
| 22. | அரியலூர் செப்பேடு | 127 |
| 23. | திருமானூர் செப்பேடு | 133 |
| 24. | தாருகாபுரம் செப்பேடு | 138 |
| 25. | திருவாடுதுறை செப்பேடு | 142 |
| 26. | எட்டயபுரம் செப்பேடு | 146 |
| 27. | செங்கல்பட்டு வெள்ளிப் பட்டயம் | 150 |
| 28. | பள்ளப்பட்டி செப்பேடு | 152 |
| 29. | மயிலாடுதுறை செப்பேடு | 156 |
| 30. | மேல்சேவூர் செப்பேடு | 162 |
| 31. | நெற்குப்பை செப்பேடு | 167 |
| 32. | திருவண்ணாமலை செப்பேடு | 171 |
| 33. | சேடப்பட்டி செப்பேடு | 178 |
| 34. | ஆழ்வார்பேட்டை செப்பேடு - 1 | 182 |
| 35. | கோடியக்காடு செப்பேடு | 186 |
| 36. | நந்தனூர் செப்பேடு | 193 |
| 37. | மானூர் செப்பேடு | 198 |
| 38. | மீனாட்சிபுரம் செப்பேடு | 208 |
| 39. | மேலப்பனையூர் செப்பேடு | 215 |
| 40. | ஆழ்வார்பேட்டை செப்பேடு - 2 | 218 |
| | சொல்லடைவு | 222 |

# Summary of Copper Plates

### 1. Veerapandi Copper Plate

Vishvanatha Nayak of Madurai Nayak dynasty had donated some lands to one Bullan Chetti, S/o. Dhasan Chetti for the expenses of the festival of the Mariyamman temple at PullaiNallur. Eventhough the content of this copper plate is datable to 16th century, AD, this copper plate seems to be a re-copy done in the 20th century.

### 2. Venbakkottai Copper Plate

One Accharamakkavundar of Siruvalai, was permitted by Virappanayakkar of Madurai Nayak dynasty (1572 – 95 AD) to collect some tax (*Inavari)* from the Goundas of Kambalam sect residing in the region between Gundaru, Thamiraparani, Rameshwaram and Thenkasi. But one Bulla Goundar of Venbakkottai tried his best and succeeded in getting relief from this tax. Praising this, the Goundas residing in the above said area decided to collect 1500 *pon* to donate it to Bulla Gounder.

### 3. Vannivelampatti Copper Plate

One Alagan Muththiri gave an animal sacrifice for the well being of Thirumalai Nayak of Madurai Nayak dynasty, in front of the King himself while he was at the South Gate of the Place. Noticing this the king immediately announced that Alagan Muththiri can enjoy the Nattanmai rights of the villages of Devan Kuruchi and Vannivelampatty. This Copper plate is dated in 17th Century.

---

*Summary prepared by: Thiru P.Rajendran, Spl. Grade Epigraphist and Dr. C.Santhalingam, Archaeological officer, Madurai.*

## 4. Palakkombai Copper plate

This plate is dated to 1654 AD. Some Vellala Community people served in the military service of Kamayanayakkar in Sadhuragiri region. They defeated one Thulluk kutti Nayakar who acted against Kamayanayakkan. In order to reward this bravery Kamyayanayaka donated 8 villages and some more wet and dry lands for the vellala people. *Nattanmai* right also was conferred on them and some temple *manyams* were also given. Date of this copper plate is 1654 A.D.

## 5. Thirunelveli Copper Plate

Thalaivamar Community People endowed one mid day *sandhi pooja* for the merit of Thiruvenkatanathar and Ranga Krishna Muthu virappa Nayakkar. For this they have sold a land for 5 *pon*. The land boundaries are described in the plate. This plate belongs to 1682 A.D.

## 6. Thirunelveli Copper Plate

This Copper Plate dating back to 1700 AD, records the donation of Palaiyapettai to a Sankara sastri by Renga Krishna Muthu Verrappa Naick. The expenses of Midnight puja and food offerings were met out with the taxes levied on various people at Palayapettai .

## 7. Musiri Copper Plate -1

This Copper plate is dated back to 18th century AD. Records certain additional gifts made to the temple of Cholesvaramudaiyar at Musiri alias Mummudi Cholappettai.

## 8. Musiri Copper Plate -2

This Copper Plate dating back to the period of Muthu Veera Chokkanatha Nayakkar (1706 – 32 AD) of Madurai Nayak dynasty records the gift of 72 *varakan pon* annually from Koodalur Kaval Thirvai for the expenses of the festivals

of Karpura Valliyamman in Musiri Choleesvaramudaiyar, by one Kampaya Nayakkar of ValanthaNagaram. The Musiri Chandramoulessvarar temple authorities now preserve this copper plate.

**9. Nangavaram Copper Plate**

Karpoora Chettys like Ankemara Naidu Celebrated the special occasion when the king was seated in the 'Navaratri Kolu', with crackers. Pleased with their performance, the king donated certain lands to them to maintain a community mutt.They also have to supply gun powder(veti uppu) regularlyo to the palace. This Copper plate is dated in 1716 A.D.

**10. Madurai - Arappaliyam Copper Plate**

This plate belongs to potter's community of Madurai region. They levied themselves 5 *panam* per potter's wheel and donated that money for the renovation of Thirupparankundram Temple. Date of this Copper plate is 1760 A.D.

**11. Santhaiyur Copper Plate - 1**

Virannan Servai who served as a security staff under Santhaiyur chief Peththanna Chetti, beheaded his master and surrendered his master's region to Kulapp Nayakkan. Kulappan appreciated his bravery as a reward Nattanmai rights, land donations and temple respects etc. Date of this Copper plate may be 17th Century.

**12. Santhaiyur Copper Plate -2**

Mentions the confirmation of Nattammai rights towards 18 villages to Viranan Servai, a sub-ordinate of Kulappa Nayaka. Viranna Servai with this right served as a village jury and settled petty disputes. For this 5 *panam* was given by tne villages as a mark of respect. This Plate belongs to 1675 A.D.

## 13. Velan Tharavai - Ilamaneri Copper Plate

One Veerayi of Velantharavai became pregnant due to her illegal relationship with one Nayina Kutti Servaikaran of Ilamaneri. Her family members and relatives refused to accept this illegal relationship. So, she committed suicide. When this matter was brought to the notice of the king, the king decided that some one from the side of the Nayina Kutty should be scarified for this. Nayina Kutti's sister Udaiyakkal was the choice for this sacrifice. Finally the Valaiyars decided to accept Udaiykkal as a member of their caste, instead of sacrificing her. This Copper plate also records some agreements reached by the members of the 8 sects of Valaiyar Community. This Copper plate is dated in 1691 A.D.

## 14. Vellikkurucchi Copper Plate.

This Copper Plate which can be dated to 17th century AD seems to be the record of an agreement reached between the members of the Pandaram Community, residing in the 69 villages located in the old Ramnad District and Thirunelveli region, towards their matrimonial relationships.

## 15. Ilayankudi Copper Plate

In this eighteenth century copper plate, which is now being protected by Sri A. Rajabhattar of Ilayankudi, it is mentioned that, Vijayaraghunatha Sethupathi, had donated Thiru Udaiyapuram as *Sarvamanya* to one Subramanya Nambiyar to meet the day to day expenses for the worship of Rajendra Choleeswarar and Mannul Makilntha Isvarar temples. This Copper plate is dated in 1733 A.D.

## 16. Ramanathapuram Moolaikkoththalam Copper Plate-1

This plate mentions about the donation of Sirukompoothi village for Srikanta Deva Mudaliyar mutt for

the merit of Kumara Muthu Vijayaragunatha Sethupathi Katha Devar. One Ramalingam Pillai, the Pradani of the Sethupathi made this donation. This Copper plate is dated in 1759 A.D.

**17. Ramanathapuram Mulaikkoththalam Copper Plate-2**

SethuRamalinga swamy temple at Sethukkarai was built by Ramalingam pillai, the *pradhani* of Kumara Muthu Vijaya Regunatha Sethupathi Kaththa Thevar (1730-40 AD.) To meet out the day to day expenses of this temple, a portion of the taxes levied on the vessels at Pampan and Rameshwaram harbours were permitted to be utilized.

**18. Velanpatty Copper Plate**

This Copper plate is now in the custody of the Regisering officer, Thirucchirapalli. Muthulingayya Nayakkar of Nattam Palayam established a Mutt at Velan Patty and donated certain lands located in Boothakudi to meet the day to day expenses of that Mutt. This plate is dated 1648 A.D.

**19. Natham Copper Plate**

This copper plate dating back to 1741 AD records that certain expenses of Sri Kailasanathar temple at Natham Koyilpatty, were met out from certain taxes collected at Natham *pettai(market)*, and Chokkalinga puram *pettai* on certain commodities.

**20. Palani Copper Plate**

The Nattam *palayakara* chief, Kumaralingama Nayak, in memory of his Parents Eruthathu Lingama Nayak and Dhadhammal constructed two choultries. For the maintenance of these choultries, villages namely, Erakkapatty, Karaikundu, and Ammapatti were donated. The boundary stones are numbered and mentioned in the

plate. The text of this plate is also inscribed in a slab at Uralipatty village near Natham in Dindigal District. This Copper plate belongs to 1781 A.D.

**21. Neyveli Copper Plate**

This plate elobarates the dispute between the Valangai, Idangai Pallis (Vanniyas) regarding the right of *Panchavarnappavadai.* One Rajanarayana Iyer helped to settle the problem in favor of Idangai Pallis. As gratitude for this Idangai Pallis donated every year certain *panam* as a Guru Dhakshinai. People of 62 villages took this decision. This Copper plate belong to 1633 A.D.

**22. Ariyaloor Copper Plate**

This Copper Plate dating back to 1703 AD records the gift made for the benefit of Oppilla Mazhavarayar and his heirs. Certain amount of tax was collected for all items that were brought for sale at Ariyaloor *Pettai* (market/sandai) and certain amount of rent was collected for the shops located within this *pettai.* This amount was utilized for conducting Gurupooja and Mahesvara pooja in the Ambalaththadum Ayyar Mutt, (Most probably a VeeraSaiva Mutt located at Chidambaram)

**23. Thirumanur Copper plate**

This Copper plate is in the coustody of Thiru. D. Sambandham, the trustee of sri Kailasanatha temple at Thirumanar in Ariyalur Taluk. One Sri Kumara Oppillatha Mazhavarayar had donated some lands as *Srothriya Dhanam* to Srikailasanatha temple at Thirumanallur around 1790 AD.

**24. Dharukapuram Copper Plate**

Refers to a *sarvamanya* land donated to one hero Thiruvannath Devar, for his successful killing of a robber

cum royal enemy, Santhiran by name. The donated villages and their boundaries were mentioned. Some royal rights umbrella, flag, fly whisk, torch and other temple respects were also conferred on Thiruvannath Devar. This Copper plate may belong to 18th Century.

**25. Thiruvavaduthurai Copper Plate**

This plate belongs to Virapandya Katta bommu Chief and dated to 1779 AD. It states about the taxes levied from the people of certain villages for the renovation of Subramanya temple at Thiruchendur. The taxes were collected from all community people at the rate of one measure (குறுணி) per year.

**26. Ettaiyapuram Copper Plate**

This Copper plates is a public notice issued by the British authorities. Veerapandiya kattabomman was hanged in the year, 1779 AD. Four days after this event, Bannerman has issued this notice. Panchalankurichi, Ezhayirampannai, Nagalapuram, Golarpatti, Kadalkudi, and Kulathur palayams were taken under their control by the British. The forts in these palayams were completely destroyed and the weapons in these areas were taken away by the British.The British also warned the public not to have any weapon with them.

**27. Silver plate from Chengalpattu**

This plate describes the celebration of 50th anniversary of Queen Victoria and the food and cloth distribution on that day. In commemoration of this event the temple trustee and District judge Mr. Ramanuja Naidu son of Kuppusamy Naidu had donated a golden *kasu malai* at the cost of Rs.300/- This Silver Plate is dated 16-2-1887.

## 28. Pallapatti Copper Plate

This plate mentions about the title conferred on Thottaya Goundan, *Nattanmai* of Pallapatti village by a Vaishnava mutt pontiff Sri Vedaviyasa battar Ayyankar According to this title, he was allowed to carry certain flags and other symbols and paraphernilia with him during festive occasions. This Copper plate is dated to 1507 A.D.

## 29. Mayiladuthurai Copper Plate

This Copper plate is now under the worship by Thiru V.S. Gurusamy Desikar, (the retired principal) at his Mayiladuthurai residence. In the front page, the images of Shiva, Uma, Subramanya with Valli and Deivanai, Vinayka, the nine Sakthis, the nine heroes (Navavirar) etc., are in bas-relief. In the backside the text of the copper plate is engraved in 45 lines. Even though the date given in this plate goes back to 1185 AD, from the content of this plate we can safely date this plate to 16th century. From this copper plate we come to know that one Kandapuranam was sung by Gnānapprakkasha Swāmigal of Thiruch Cheygnaloor. In this Kandapuranam, he has praised the Kaikkolars (the weavers) also to some extent. So the Kaikkolars of the 72 nadus decided to contribute certain yearly revenues to him from their looms and during their wedding and other rituals.

## 30. Melsevur Copper plate

From this copper plate, which is now under the protection of the Gurukkal of Sri Rishabeshwarar temple at Melsevur in Senji Taluk of Villupuram district, it is understood that the chettiyars of Ulagamadevipuram made some arrangements to meet the expenses of the daily worship of the God Iranki meeta Swamiyar from the amount collected annually from their members. It is said that once

the God safeguarded them from evils and in lapse of time they forgot it and their spiritual leaders reminded it. This copper plate can be dated to 16th 17th centuries.

**31. Nerkuppai Copper Plate**

Oliyur (Ollaiyur of Sangam age?) was the capital of Ponnamaravathi region, which included 7 *Pattams*, 7057 *Nathams*, 1511 *Kudikadus*, 21 *Brahmadeyams* and 212 *Devadhanams*. The Puraiyamar of 4 karai enjoyed the Kaniyatchi of this region. This matter was also engraved in the inscriptions at Kudymiyanmalai, Poolankuruchi, Kannimalai and Poovalaikkudi. This Copper plate belongs to 17th Century.

**32. Thiruvannamalai Copper Plate**

This 17th Century A.D. Copper plate is under the possesion of 24 Manai Chettis Community. They have established a mutt and flower garden at Thiruvannamalai and appointed pontiff Vasantharayar Pandaram by name. For the maintains of this mutt marriage tax and personal taxes were collected from the members of this community.

**33. Sedapatty Copper Plate**

Refers to an establishment of a mutt by certain Ambalakarar Community people at Periyakulam region. They appointed one Sankaramurthy son of Paniparthipa Araiyan as the Pontiff of the mutt and for his maintenance certain amount of grains were donated every year. This Copper plate belongs to 17th Century.

**34. Alwarpet Copper Plate**

This Plate dated to 1733 A.D, belongs to the musician Community named as Nagapasaththar. They had assembled at the temple of Papanasam in Ambasamudram taluk at Tirunelveli Dt and taken a decision. Accordingly they

conferred a title *'Nagapasa Naralankaraiyan'* on one Virapathra Vinothiyar son of Madhavan Pillai who hailed from Aththazhanallur .Certain taxes were collected from the members of this Community.

**35. Kodiyakkadu Copper Plate**

Mentions the donation of Thiruvasi village to one Saiva Sikamani alias Vairavanambi pillai of Thirukkalahasthi in the name of Adhi Chandesvara. This seems to be a collective decision taken by Adhisethu mata Mudalis, Mahesvaras, Koyilar Rajaharar (royal officials) and resident of five localities (அஞ்சுதேசம்). Islands, saltpans and some mutts are mentioned in the plate. Date of the Copper plate may be 18th Century.

**36. Nanthanur Copper Plate**

The purpose of the plate is not clear. Seems to be a land donation by Vettuva community people. Boundaries of the lands were mentioned abruptly. This Copper Plate may be dated to 18th Century.

**37. Manur copper Plate**

One Velayuthaswamy established Subramanya swamy temple at Manur village. For the daily offerings and rituals of this temple all the Visvakarma families , Malla Kudumpa / pallu community families around this area had paid one *panam* per family. This decision is inscribed on this plate. This plate is dated to 1759 A.D.

**38. Meenakshipuram Copper Plate**

This Copper plate is now in the hands of Sri Abdul Raheem of Meenakshipuram near Bodi. When some V*alanga*i sects tried to capture ladies of certain Idankai sects, one Pakkiriva Servai Ravuthar intervened and saved

those ladies from captivity. To honour this heroic deed, the title '*Manankatha Thakappan*' was conferred on him. Further, during the marriage celebration of these Idankai ladies, certain amount of money and some quantity of rice and grins were also given to him as a mark of respect. This plate is dated to 1873 A.D.

**39. Melappanaiyur Copper Plate**

One Venru Malaiyittan who was with a concubine by name Naga Manickathal Azhagiya Nallal, died while both of them were worshipping in a *pidari* temple. Nagamanickathal committed Sati. One forth of the lands of Malaiyittan were donated to this temple in her memory. This Plate is dated to 1759 A.D.

**40. Alwarpettai Copper Plate-2**

Mrs. Lilly Viyayaragahavan at Alwarpettai, Chennai is now preserving this Copper Plate. This copper plate dating back to $19^{th}$ century AD records that the Kavarai Chettiyars belonging to all the 364 groups, and the Chettiyars of many *rasis* like *Mithunam, Mesam* etc. collectively selected Krishnama chetty alias Krishnama Nayakkar, as their Chief (அதிபதி) in the presence of Sri Vedantha swami.

# 1. வீரபாண்டிச் செப்பேடு

## *மாரியம்மன் கோயில் வழிபாடு முதலிய தர்மங்களுக்குக் கொடை*

தேனி மாவட்டம், போடி நாயக்கனூர், பெருமாள் கோயில்சாலை, பெத்தணன் செட்டி சந்தில் உள்ள திரு. கே. தனராஜ் என்பவரிடம் இச்செப்பேடு உள்ளது. 34.5 x 22.5 செ.மீ. அளவுடையது. இச்செப்பேடு முன்பக்கம் தலைப்பில் துளையும் அதன்கீழ் சங்கு, சக்கரங்கள் அவற்றினிடையே திருமண் (நாமம்) ஆகியவை கோட்டுருவமாக உள்ளன.

சகவருடம் 1490 (கி.பி.1568), கலிவருடம் 4660 (கி.பி.1568) தமிழ் வருடம் சுக்கில (கி.பி.1568-69) ஆகியவை குறிக்கப்பட்டுள்ளன. மதுரை நாயக்கர் மன்னர் விசுவநாத நாயக்கர் (கி.பி.1529-64) குறிக்கப் பட்டுள்ளார். காலம் பொருந்தி வரவில்லை. மெய் எழுத்துக்கள் புள்ளியிடப்பட்டுள்ளன. 'பட்டா', 'பரிசோதனை விபரம்', ஒப்புவித்தல், நாள் என்ற சொற்கள் உள்ளமையும், நா. விசுவநாதவநாயக்கர் என்ற கையொப்பம் உள்ளதும் இச்செப்பேடு 20ஆம் நூற்றாண்டில் எழுதப்பட்டது என்பதைக் காட்டுகின்றன.

மதுரையிலிருந்து கம்பம் செல்லும் சாலையில் தேனி அடுத்து சுருளி ஆற்றங்கரையில் உள்ள ஊர் வீரபாண்டி. இங்கு பாண்டியனுக்கு கண்பார்வை கொடுத்தவராகக் கருதப்படும் கண்ணீச்வரம் உடையார் கோயில், பிற்காலப் பாண்டியர் கல்வெட்டுகள் மற்றும் கலைப்பாணியில் உள்ளது. காமட்சியம்மன் பக்தர்களாகிய 'யாகசத்திரிய தெலுங்க தேசாதிபதிகள்' வம்சத்தில் வந்த புல்லன் செட்டி வழியினர் வடக்கில் உள்ள

---

*கல்வெட்டு இதழ்* எண்.21, ரக்தாட்சி ஆண்டு புரட்டாசித் திங்கள் (10/1984), பக்.6-13, 'வீரபாண்டி செப்பேடு' என்ற தலைப்பில் கட்டுரையாக எழுதியவர் திரு. இரா. ப. கருணானந்தன், காப்பாளர், தஞ்சாவூர்.

கண்ணனூரிலிருந்து கௌமாரியம்மனை தங்களுடன் மதுரைக்குக் கொண்டு வந்து. பின்னர் வீரபாண்டியில் புல்லை நல்லூர் என்ற ஊரினை ஏற்படுத்தி அங்கு கோயில் கட்டி மாரியம்மனை வைத்து வழிபடத் தொடங்கினர். இத் தெய்வம் நோய்கள் தீர்க்கும் சக்தியும் அறுந்த தலையைச் சேர்த்துவிடும் சக்தியும் உடையதாக இருந்தது.

போருக்குச் சென்று இவ்வூர் வழியாகத் திரும்பிய விசுவநாத நாயக்கர் இவ்வூர் சிவபெருமான் மற்றும் மாரியம்மனின் சிறப்புக்களை அறிந்து வழிபட்டு மகிழ்ந்தார். மேலும் இம்மாரியம்மனுக்குச் சீதனமாக புல்லை நல்லூர் நான்கு எல்லைகளையும் ஒட்டி $3^3/_4$ நாழிகை அளவுதூரம் விரிந்த எல்லைப் பரப்பு நிலங்கள், மற்றும் அதனைச் சேர்ந்த நீர் நிலைகளை தாசன் செட்டி மகன் புல்லன் செட்டிக்குக் கொடுத்து மாரியம்மனுக்குத் திருவிழா நடத்தி வரச் செப்புப் பட்டையம் கொடுத்துள்ளார்.

மேலும் இவர்கள் பிற தெய்வங்களுக்கு நடத்தி வருகின்ற தர்மங்களும், குளம் முதலிய தர்மங்களும் சொல்லப்பட்டு அவற்றிற்கு உள்ள மான்யங்களும் நடந்து வர, பொன்தீர்வை நீக்கப்பட்டதும் சொல்லப்படுகிறது. மாரியம்மனுக்கும் 'கம்பம்' நட்டு நீர் ஊற்றி வழிபடும் திருவிழா விவரமும் பிறவும் சொல்லப்பட்டுள்ளன.

## செப்பேடு

1. சாலியவாகன சகாப்தம் 1490 கலியுகாதி 4669க்குச் சரி
2. யா னிகளும் தமிள் சுக்கில வரு மாசிமீ 6 உ யன்று நெடிய கட சூள்ந்
3. த உலகத்தில் மதுறைக்கரசராகிய ராஜாதி ராஜ ராஜ மார்தண்டன் வில்லுக்கு விஜய
4. ன் சொல்லுக்கு அரிச்சந்திரன் குடைக்கி கற்னன் சந்திர கு சேகரன் சத்துறு சங்கார
5. வீராதி வீரன் வீரகண்டாமணி பொற் கிரீட சக்ரவர்த்தியாடெப்பை யெளு
6. பத்திரண்டு அரசர்களும் பணியப் பெற்ற நீர்வழம் நிலவழத்தி சிரந்த வைகை ந
7. தி வாசமான மதுரை மீனாக்ஷி சுந்தரேஸ்பரர் பக்த்தரான கோடியம் நாகமாநாயக்

8. கரவர்க திவ்விய குமரன் ராஜாதிராஜர் மகாமண்டலேஸ்ப ராகிய விசுவநாத
9. நாயக்கரவர்கள் திவ்விய மநோகரப்படி யெளுதிக் கொடுத்த செம்புப்பட்டயம் யெ
10. ன்னவென்றால் யென் மதுரை யெல்கையைச் சேர்ந்த மேல் சராங்க பூமியில் வெ
11. ங்கலப் பிரதலை வழநாட்டில் சேரநாட்டு யெல்லைக்கும் வழ்ழன் நதியென்னும் வ
12. றுசை நாட்டுக்கு மத்தியில் வறுகிற சுறுளிநதி வைகையை யடுத்து தெற்கிருக்கும் புல்ல
13. நல்லூரான வழநாட்டில் குடியிருக்கிர காமாக்ஷியம்மன் பக்த்த ராகிய யாகச் சத்ரிய தெ
14. லுங்க தேசாதிபதிகள் வம்மிசத்தார்கள் தலமை புல்லன் செட்டிக்கி வுங்கள் முன்னோ
15. ர்கள் காலந்தொட்டு வுங்களுக்குள் கட்டுப்பட்டு சத்தியங் காப் பாற்றும் வண்ணா
16. ன் அம்பட்டன் சாம்பான் வகை கீழ் குலத்தார்கள் வேலைகளுக் குள்ளாக்க கட்டு
17. ப்பட்ட ஜாதியர்களுக்கும் ஜாதி யாசார தேச விசாரணைகள் செய்து ரண்டக் கம்
18. பழி பிடிசெம்பு கம்பழிக்கயர் கோலும் பெற்று நடத்தி வருகின்ற முதன்மை தே
19. சத்தாறான தாசுசெட்டி மக்கள் புல்லன்செட்டி அரிய்ணன் செட்டி தாசுசெட்டி வைகுமா
20. நி செட்டி பெத்தன் செட்டி யென்ற பேர்கள் வைத்து வரா நின்ற வழி வம்ச விருத்தி
21. யான புல்லன்செட்டி வகையறா முன்னாதியில் வடக்கே கண்ண னூறிலிருந்து கெ
22. ள மாரியம்மனை குலதெய்வமாக வைத்துக்கொண்டு வந்து மதுறையில் தங்கி
23. ப் பின் மேல்சராங்க நாட்டில் தாசுசெட்டி மகன் புல்லன் செட்டி யே மூலபுருசநா

24. க புல்லை நல்லூறையும் கட்டி விசாலமாக வூர்க்கு மத்தியில் தன் குலதேவதை மா
25. ரியம்மன் விங்கமாக அமைந்து கொள்ள அதன்பின் உன் சிரத்தையால் அம்
26. மனுக்குக் கோவில் கட்டி அம்மனை தானும் தன் பங்காளிகளும் சம்மந்தகாரர்க
27. ளும் பல குடிகளும் வெள்ளி செவ்வாய் தினங்களில் ஆண்டாண்டு சித்திரை மாச
28. த்தில் செவ்வாய் முதல் 22 நாள் வரைக்கும் குமுளியாய் கும் பிட்டு அத்திமரத்து மு
29. க்கவர் கம்பம் நட்டு தண்ணீர் சுமந்து வூற்றி கண்ணடைக்கம் தாலி சேலைகள் வை
30. த்து கும்பிட்டு வருங்காலத்தில் இதற்கு முந்திய ராஜாங்கத்தாறுக் கும் வேண்டி
31. ய பரிசோதனை வரங்கள் கொடுத்த பாண்டியனுக்குக் கண்ணும் புத்திர பாக்கிய
32. முங் கொடுத்து அவறால் சிவாலையமும் அதற்கு வேண்டிய மானுவ பூமிகளும் பெ
33. ற்று யெனக்கும் வேண்டிய வரங்களும் அறுத்தலைகளைப் பொருதச் செய்து உ
34. ள் தேகநோய் சகலபிணி பாவங்களை நீக்கக்கண்ட விசுவநாத நாயக்கரவர்
35. கள் ஆயிரங்கண்ணுடைய கௌமாரியம்மாளுக்கு நான் கொடுக் கும் சீதனமாக (மா)
36. னுவபூமிகள் புல்லை நல்லூறுக்கு தெக்கு மேர்க்கு வடக்கு கிழக்கு நாலு திக்கிலும் தி
37. க்குக்கு மூனேமுக்கால் நாளிகை தூர சதுர யெல்கைக்குள் ளடங்கிய பூமிக்குள் சுருளி நதி
38. வைகை யிருபக்கங்களில் முந்தின ராஜாங்கத்தாறால் உன் முன்னோர்களுக்கும் உன்
39. க்கும் கிடைத்தும் கிடைக்கிர முன் பின்னோர்ப்படும் அணைகள் வூரணி கால்வாய் மடா

40. லைய தர்மசாலை ஆலையங்கள் பற்றிய விருச்சங்கள் யாவையும் நீயும் உன் வ

41. ார்சுகள் வகையறா புத்திர பரபௌத்தர பரம்பரையர்களுக்கு உன் சகோரன்

42. தாசு செட்டிக்கி இந்த வூர்க்கு மேர்கே சேரநெல்கை ராசிமலைக் கி வடக்கு உன்னால்

43. கட்டிய புல்லனூரனை பாத்திய பூமியெல்லை கிழக்கு மரக்கா மலைக்கி மேர்கடியில்

44. தாசு செட்டி வழிநடை தர்மவூரணிக்கி ஒரு னாளிகை வளி தூரச் சதுர பூமியும்

45. விருச்சங்களும் யெக்கால தருமம் நடத்தவும் கொடுத்தேன் உன் சகோதர

46. ன் அரியணன் செட்டிக்கி அவரே மூலபுருசநாக தென்கிழக்கில் சேர நெல்கைக்கிப்

47. பால் வருசை நாட்டு தண்டியலூர் கிராமங்களில் உங்களால் உற்பத்தி குல

48. தேவதைகள் சவரிமலையாண்டி பச்சைமலையாண்டி பெருமாள்சாமி பால்வ

49. ண்ண சாமிகளுக்கு வேண்டிய மானுவ பூமிகள் உங்கள் வம்ச கோவில்கள் செட்டி வெ

50. ட்டிய கோவிலன் குளம் பஞ்சந்தாங்கி குளம் இது மத்தியில் உள்ள நாலு நாளிகை

51. சதுரவன பூமிகளும் காறகம் பசுப்பெறுக்க நீண்ட பூமி புல்செடி கநி விருச்சங்க

52. ளும் உங்களுக்கு சமுத்திர உப்பாழத்து தலைவு வில்லைச் சேவுகாளும் வழித்துணை தெ

53. ய்வங்கள் இஸ்ட்டப்படி நீங்கள் நடந்து பூசை தர்மங்கள் நடத்தி வரவென்று யோ்

54. ப்பட்டிருக்கும் முந்தின றாஜாங்க நிருபாதாரங்களை நீங்கள் மூன்று போ்களும் ஒரு

55. தினத்தில் யென்னிடம் ஒப்பிக்க நான்பார்த்து தேவாலைய தர்மங்களையும் ஆனைக்கன்

56. றுகள் நதிகள் 3ம் யன்று நானும் தே தீர்மானப்படி கொடுத்த செம்புப் பட்ட
57. யம் புல்லைநல்லூர் பக்கம் பாண்டியறால் சிவனாலையத்தில் கல்லில் சில விபரமி
58. ருக்கு இதுமாதிரிக் கல்லில் யெளுதி மாரியம்மன் முன்பக்கத்தில் வைத்துக் கண்பார்த்து
59. நான் வந்துதிரும்பி பாண்டி நாடாகிய மதுரைக்கிப் போகிர படியால் இனிமேல்
60. கல்லுங் காவேரி புல்லும் பூமி சந்திர சூரியாள் உள்ள வரை இதிலுள்ள பிர
61. காரம் பொன் தீர்வை நீக்கி உன் வார்சுகளும் அனுபவித்துக் கொள்ளவும் யென
62. க்குப் பின் றாஜாங்கத்தார்கள் யிதைப் பார்த்தாலும் இதுக்கு யாது தடையன்னி
63. யில் உங்க வார்சுகளுக்கு விடாதபடி தடுத்து மோசம் செய் வாறாகில் அவர்கள்
64. வழிவம்ச றாஜா(ங்க)ங்களை இழந்து தாய் தந்தை குருக்களைக் கொன்ற பாவ
65. மும் காறாம் பசு தோசத்துக்காழகி தீரா நரகத்தி லழுந்துவார்கள் யென்று இந்
66. த ஒரு பட்டாவில் மூன்று போ்களும் மதுரை மீனாக்ஷி சொக்க நாதர் சுறுளி முப்
67. பத்தி முக்கோடி தேவர்கள் நவக்கிரகங்களாணைப்படி ஆகாய வாணி சரஸ்வதி யரிய
68. பஞ்ச பூத சாச்சியாய் நான் கொடுத்த பட்டயம் இதை நிலை நிருத்துபவர்கள் றாஜங்கம்
69. நீடுளி வாழ்கயென்று பாண்டியனுக்குப் பிந்தி இரண்டாவது நா. விசுநாதவ நா
70. யக்கரவர்கள் கையொப்பம் உத்திரவுயெளுதியது முத்து வேலாசாரி.

# உ. வெண்பக்கோட்டை செப்பேடு

*இனவரி நீக்கம் பெற வாதாடியவருக்கு வெகுமதி*

விருதுநகர் மாவட்டம் சாத்தூர் வட்டம் திருத்தங்கலில் உள்ள திரு.எஸ். பாலசந்திரன் கூட்டுறவு வங்கி மேலாளரிடம் இச்செப்பேடு உள்ளது. இதன் மைப்படியை அண்மையில் அனுப்பி வைத்தார்.

35X15 செ.மீ அளவுள்ள இச்செப்பேட்டில் முன்பக்கம் 16 வரிகளும் பின்பக்கம் 17 வரிகளுமாக 33 வரிகளில் வாசகம் உள்ளது.

செப்பேட்டில் 'பிறசோற்பத்தி' தமிழ் ஆண்டும் மதுரை நாயக்க மன்னர் வீரப்ப நாயக்கரும் (கி.பி.1572-95) குறிப்பிடப்படுவதால் கி.பி.1574ல் வந்த பிறசோற்பத்தி ஆண்டாகக் கொண்டு இச்செப்பேடு கி.பி.1574ல் வெளியிடப்பட்டது எனலாம்.

மதுரை அருகிலுள்ள சிறுவாலை அச்சராமக் கவண்டர் என்பவர் வீரப்ப நாயக்கரிடம் ஆணை பெற்று குண்டாறு, தாமிரபரணி, இராமேசுவரம், தென்காசி ஆகியவற்றிற்கிடையே உள்ள கம்பளத்துக் கவண்டர்களிடம் இனவரி வசூலிக்கும் உரிமைக்கு ஆணை பெற்றார், அதனை நிறைவேற்ற தென்காசி அதிவீரராம பாண்டியர் அரசிடம் சென்று நடவடிக்கை மேற்கொண்டார். வெண்பக்கோட்டை புல்லா க வண்டர் அதிவீரராம பாண்டியன் பண்டாரத்தில் வாதாடி இனவரி இல்லாது தடுத்தார். இவரது சேவையைப் பாராட்டி மேற்சொன்ன நான்கு எல்லைகளுக்குட்பட்ட கம்பளக் கவண்டர்கள் ஒன்றுகூடி இவருக்கு வெகுமதியாக 1500 பொன்கொடுக்கத் தாங்கள் ஒவ்வொருவரும் வில்லுக்கு ஒருபணம் வீதம் வரி வசூலித்துக் கொடுப்பதாக முடிவுசெய்தனர். மேலும் தங்கள் மீது இனவரி வசூலிக்க முயன்ற அச்சராம கவண்டனை எதிரியாக அறிவித்து அவருடன்

---

*கல்வெட்டு* இதழ் எண்.29 பிரமோதூத ஆண்டு மாசித் திங்கள் (1991, பிப்ரவரித் திங்கள்) பக்.6-11. வெண்பக்கோட்டை செப்பேடு என்ற தலைப்பில் கட்டுரையாக எழுதியவர் டாக்டர் எஸ்.எம்.கமால், இராமநாதபுரம்

யாரும் சேரக்கூடாது என்றும் முடிவு செய்தனர். இச்செய்திகளை இச் செப்பேடு குறிப்பிடுகிறது.

## செப்பேடு

### முன்பக்கம்

1. பிறசோற்பதி ஆனி மாதம் ரு உ வெண்பக்கோட்டை புல்லக்கவண்டருக்கு சாதியார் அனைவரு
2. ங்கூடி ஒப்பு முறிப்பட்டைய மெழுதிக் குடுத்தோம் குண்டாத்துக்கு தெக்கு இராமேசுரத்
3. துக்கு மேற்குத் தாம்பிறவெனிக்கு வடக்குத் தென்காசிக்குக் கிளக்கு யிந்த நாங்கெ
4. ல்கைகுள்ப்பட்ட கம்பளத்துக் கவண்டர்களாவது கூத்திபாறை சந்தைய் செ
5. காண்டப்பக் கவண்டர் கெச்சண கொண்டப்பக் கவண்டர் வடபட்டி மல்லப்பக் கவ
6. ண்டர் மாறனேறி திருமலைக் கவண்டரு மகனாரு மலகோதண்டராமக் கவண்டர் குண்டா
7. த்தங்கரையிலுள்பட்டக் கவண்டர்களும் தென்சீமைக்குறியக் கவண்டரும் கல்லா
8. த்தங்கரையிலுள்ப்பட்டக் கவண்டர்களும் இந்த நாங்கெல்கைக்குள்ளப்பட்ட பேரனைவ
9. ருங்கூடி ஒப்பிட்டு பட்டைய மெழுதிக் குடுத்தபடிக்கு சிறுபாலை அச்சராமக் கவண்டர் வீர
10. ப்பனாயக்கரையனைக் கண்டு குண்டாத்துக்குத் தெக்குச் சாதியுள்பட்ட கம்பள
11. த்தாரை யினவரி வாங்க வேணுமென்று னாயக்கரைய னிரூபமும் வாங்கி யூளிய
12. க்காறரையுங் கூட்டிக்கொண்டு அதிவீரராம ராசா வையன் பண்டாரத் திருமுன் வந்த

13. து கரையேறினபடியினாலே யிது காரியத்துக்கு வெண்பக்கோட்டை புல்லக்கவண்டர் ர

14. ராசாவையன் பண்டாரத் திருமுன்னே கரையேறி இனவரிக்கு வந்த அச்சராமக் கவண்ட

15. ருடனே பேசி யினவரி தட்டிவிச்சதே யுண்டானால் புல்லக்கவண்டர் பண்டார வா

16. தத்துக்குப் பரிதான

பின்பக்கம்

17. மாக ஆயிரம் பொன் அஞ்ன்று பொன் கைக்கூலி குடுத்துச் சிலவிட்ட சம்மந்தமெல்லா மிந்த நாங்கெ

18. கல்கைக்குள்பட்ட சாதியாரெல்லாருங் கூடி வில்லுக் கொரு பணம் வரிப்போட்டு புல்லக்கவ

19. ண்டருக்கு யிருத்துக் குடுபோமாகவும் இந்தபடிக்கு ஒப்பிட்டுக் கூடின கம்பளத்திலே யாதா

20. மொருதன் அச்சராமக்கவண்டருடனே கூடினதே உண்டானாலவனை மேலக்கோட்டை வா

21. சலிலே குத்தி கீளக்கோட்டை வாசல்லே யிகுத்துப் போடுவோமாகவும் அவன் வீட்டையுங் கொ

22. ள்ளையிட்டுப் போடுவோமாகவும் அவனைச் சாதிக்கு பிறம்பு பன்னி தீய்த்துறைத் தண்ணீர்த் து

23. றையம் மாத்தி யவன் வீட்டிலே மாடெலும்புங் கட்டிவிப்போமாகவும் இந்த நாங்கெல்கைக்குள்ப

24. ட்ட சாதியாரெல்லாரும் கொண்டாடப்பட்ட குல தம்பிரானானையே ராசாவையன் பண்டாரப் பா

25. தத்தானையே ஞாயக்கரையன் பாதத்தாணையே சாதியார் தப்பாது யிதுக்கு

26. யாதொருவாகிலும் கிறுத்தவம்[1] பண்ணினால்க் கெங்க கரையில்க் காராம்பசுவைக் கெ

# 3. வன்னிவலம்பட்டி செப்பேடு

*திருமலைநாயக்கர் நலனுக்காக் கிடாய்ப் பலி கொடுத்தவர்க்கு காவல்கார மானியம்*

இச்செப்பேடு மதுரை மாவட்டம் பேரையூர் வட்டம் வன்னிவலம்பட்டி புலவர் சு. சங்கரன் என்பவரிடம் உள்ளது.[1] வன்னிவலம்பட்டி மதுரை - செங்கோட்டைச் சாலையில் உள்ள தே.கல்லுப்பட்டியிலிருந்து பேரையூர் செல்லும் வழியில் உள்ளது.

இச்செப்பேடு 22X15 செ.மீ. அளவுடையது. முன்பக்கம் 29 வரிகளும் பின்பக்கம் 27 வரிகளும் பொறிக்கப்பட்டுள்ளன. தலைப் பகுதியின் நடுப்பகுதியில் அரைவட்ட அமைப்பு துளையுடன் உள்ளது. நஞ்சை, புஞ்சை என்ற சொற்கள் குறியீடுகளாக உள்ளன.

செப்பேட்டில் தமிழ் ஆண்டு 'குரோதன' குறிக்கப்படுகிறது மதுரை நாயக்க மன்னர் திருமலை நாயக்கர் குறிக்கப்படுகின்றார். இச்செப்பேட்டின் காலம் கி.பி.1625 எனலாம்.

காவல்காரர்கள் மதுரை கச்சேரியில் பணம், காணிக்கைகள் செலுத்திக் கொண்டிருந்த போது திருமலை நாயக்கர் நடைமேடையில் தெற்குப் பகுதியில் வந்து நின்று கவனித்துக் கொண்டிருந்தார். இதனைப் பார்த்த அளகன் முந்திரி என்பவர் தான் கொண்டு வந்திருந்த ஆட்டுக் கிடாயை தென்முகமாகத் திருப்பி அதன் தலையை முறித்துப் பலிகொடுத்தான். அரசனின் நலனுக்காகக் கொடுக்கப்பட்டபலி என்பதை உணர்ந்து அரசன் தேவயன்குறிச்சி வன்னிலம்பட்டி என்ற இரு கிராமங்களை அவனது நாட்டாண்மை கிராமங்களாக்கி மானியம் கொடுத்தான். இவ்விரு கிராமங்களின் எல்லைகளும், அளவுகளும் சொல்லப்பட்டுள்ளன.

---

*கல்வெட்டு* இதழ் எண்.53, திருவள்ளுவர் ஆண்டு 2030-31 பிரமாதி, மார்கழி - தைத்திங்கள் (200 சனவரி) பக்.1-8. 'வன்னிவலம்பட்டி செப்பேடு' என்ற தலைப்பில் கட்டுரையாக எழுதியவர் டாக்டர் வெ. வேதாசலம், கல்வெட்டாய்வாளர், மதுரை.

## செப்பேடு

1. ௨ ராமசெயம்
2. அதிதமான மதுறாபுரித் தலத்தில் யெ
3. ளுந்தறுளிய மீனாட்ச்சி சொக்கலிங்
4. கத் திருவுளத்தின் அனுக்கிரகத்தினாலே பா
5. ண்டி மண்டலம் பதினாறு முடிபொருத்த த
6. ளரி[2] கற்த்தறாகிய திருமலை நாயக்கறவர்
7. கள் விடையருளியது தேவயன்குரிச்
8. சி கிறாமத்துக்கு மகமகனாக காவலுக்கு நே
9. முகஞ் செய்த தாம்பூர சாதின காணிகா
10. ச்சிப் பட்டயம் யென்னவென்றால் குறோ
11. தன ௵ மாசி மீ ம் ௨௰௭ ௨ யிந்த கிறா
12. மம் காவல் யிளவறசு துடிஅளகன் முத்
13. திரி மகன் அளகன் முத்திரி[3] கிறாமம் தெ
14. ன் வடல் கீள் மேன் மால் உள்ளதுக்கெ
15. ல்லாம் கட்டின வீட்டுக்கு பணம்*க தவச முக்
16. குருணி விபசகாயமில்லா வீட்டு(க்கு)* பணம்*க
17. கட்டின கடை ஒன்று(க்கு)* பணம்*ய ௨ ஆடி தீவாளி
18. பண்டிகைக்கி ௨ க்கு ஆட்டு கிடாய் ஈ நஞ்சை
19. மானியம் வெங்கிஷ்ட கிட்டணய்யன் ந
20. ஞ்சை(க்கு)* -நஞ்சை(க்கு)* மே(ற்கு)*கருப்பன் முத்திரி
21. ற்-கொப்பூரய்யன் நஞ்சை(க்கு)*தெ(ற்கு) (கிழக்கு)* முத்தற
22. சன் செட்டி நஞ்சை(க்கு)* வட(க்கு)*
    விரையடி ஈருா[4]
23. பிஞ்சை[5] மானியம் கிறமாகத்து(க்கு)* கிளற்கு ரெங்க
24. மனாக்கன் (பிஞ்சைக்கு)*-கிள(ற்கு)* திருவய்யன் பிஞ்சை (க்கு)*
25. மே(ற்கு)* -குருவா ரெட்டி (பிஞ்சைக்கு)* தெ(ற்கு)* - கா
    வெட்டி
26. அய்யன் (பிஞ்சைக்கு)* வட(க்கு)* -எ-கயத்து நிலம் கா

27. வல்மானியம் - யென்க விசலான கிராம
28. ம் வன்னிலாம்பட்டி (க்கு)* நாட்டாமைக்கி
29. றாசா உத்தரவு ஆனது யிந்த துடிஅளகள்

பின்பக்கம்

30. மகன் அளகன் முத்திரிக்கி கிராமம் நஞ்சை
31. யில் தெலுகறாமன்செட்டி (நஞ்சைக்கு)* கிளற்கு ம
32. ாற வேலுக்கவுண்டன் நஞ்சைக்கு வடக்கு அளகுரெட்டி
33. நஞ்-தெற்(கு) விரையாடி வா-மானிபம் பிஞ்
34. சை மானிபம் கிறாமத்துக்கு தென்மேற்கு கலி
35. யாணி செட்டி (பிஞ்சைக்கு)* கிளக்கு பொன்னம்பலஞ்
36. செட்டி (பிஞ்சைக்கு)* மேற்கு ஆள்வாற் னாக்கன் (பிஞ்சைக்கு)*
37. தெக்கு அனமேலு கவண்டன் (பிஞ்சைக்கு)* வடக்கு அ
38. றசமறத்து பிஞ்சை - கயற்று நிலம்
39. நாட்டாமைக்கி யாதொரு முதமையும் அள
40. கன் முத்திரி றாசா உத்தறவு ஷெ கிறாமம் வகை
41. ரெண்டுக்கு புத்திறாள் புத்திறாள் உள்ளவரைக்கும்
42. ஆண்டு வருவானாகவும் யிதுயெதுக்கெ
43. ன்றால் மதுறாபுரி பட்டணம் கச்சேரியில்
44. காவல்க்காறன் பணஞ்செலுத்தும் போது
45. றாசா நடைமேதைகையின் பேரில் வந்து தெக்கு
46. வாசலில் நிற்கும் போது தெஞ்சிறாகாக[6] கிடா
47. யை தலையை முரிச்சு அளகன்முத்திரி சுட்ட
48. படியினாலே நாட்டாமைக்கி காவலுக்கு உத்த
49. றவு யிதுக்கு சாச்சி சதுரகிரிக் காமய னாக்
50. கன் சின்னமறவன் சகுவற்னதேவன் ஒன்பது
51. கூத்தன் வகை சாட்சி பட்டயத் தயா-ர்
52. செய்தவன் மாணிக்க கொட்டகன் ஷெ ஒ

53. ன்பது கூத்தன் வகைக்கி பெருகோல் அடைக்கன்.

54. தச்சுவீரன் நீர்மகன் பூமாலை - குடிமகன் பூமுத்

55. தன் மாதாரி திருமன் நீராணி கருப்பக்கு

56. டும்பன் உ

1. இச்செப்பேட்டை இக்கட்டுரையாசிரியரும் காப்பாட்சியர் திரு. செ. போசு அவர்களும் கண்டறிந்தனர்.
2. 'தளத்துக்கு' என்று படிக்கவும்
3. 'முத்திரியற்கு' என்று படிக்கவும்
4. 'மூன்றுகலம்' என்று படிக்கவும்
5. இச்செப்பேட்டில் புஞ்சை, நஞ்சை என்ற சொற்கள் பீசை என்றும் ந என்றும் குறிப்பிடப்பட்டுள்ளன.
6. 'தென் சிரசாக' என்று படிக்கவும்.

* இவை செப்பேட்டில் குறியீடாக உள்ளன.

# 4. பாலக்கோம்பை செப்பேடு

## *ஆரியவம்ச வேளார்க்கு மங்கலரேவு நாட்டாண்மை வழங்கியமை*

தேனி மாவட்டம் ஆண்டிப்பட்டி வட்டம் பாலக்கோம்பை திரு. கே. முருகேசன் என்பவரிடம் இச்செப்பேடு உள்ளது.

21 X 14.5 செ.மீ அளவுடைய இச் செப்பேட்டில் முன்பக்கம் 33 வரிகளும், பின்பக்கம் 14 வரிகளுமமாக 47 வரிகளில் வாசகம் உள்ளது.

தமிழ் வருடம் 'செயா' குறிப்பிடப்பட்டுள்ளது. மதுரை நாயக்க மன்னன் திருமலை நாயக்கர் (கி.பி.1629-1659) சதிரகிரி காமய நாயக்கர் பெயரும் குறிப்பிடப்படுகின்றன. இதனில் குறிக்கப்படும் ஜெய வருடம் கி.பி.1654ல் வந்த ஜெயவருடம் எனக்கொண்டு இச் செப்பேட்டின் காலம் கி.பி.1654 எனலாம்.

மதுரையில் ஆரியவம்ச மல்லினாக்கன் மகன் ராமலிங்கம் பிள்ளை, சென்னைப்பிள்ளை மற்றும் இவர்களைச் சேர்ந்த 7 குடும்பங்கள் வசித்து வந்தபோது திருமலை நாயக்கர் இவர்களிடம் பெண் கேட்டதால் இவர்கள் மதுரையை விடுத்து முரிஞ்சு நாடு சென்று ஆரியபட்டி என்று ஊரமைத்து இருந்தனர். அங்கு கள்ளர் தொந்தரவு இருந்தது. அங்கிருந்து மேல் மங்கலரேவு வந்து குடியிருந்தனர். அப்போது சதுரகிரி காமய நாயக்கரிடம் சக்கரை வெத்திலை, பாக்கு, தட்சினை வைத்து மரியாதை செய்து காமய நாயக்கரின் கீழ்ப்படிந்தவர்களானார்கள். காமயநாயக்கரும் தன்படையில் கூடுதலாகச் (சேவுகா விருத்தி) சேர்த்துக் கொண்டு படி, பாற்சீலை, துப்பட்டி, தலைப்பாகை ஆகிய மரியாதைகள் கொடுத்தார். இச்சமயத்தில் கரட்டுமுந்தல் என்ற இடத்தில் துள்ளுக்குட்டி

---

*கல்வெட்டு* இதழ் எண்.49. தாது ஆண்டு தை - மாசித் திங்கள் (1997 ஜனவரித் திங்கள்) பக்.20-26. 'பாலக்கோம்பை செப்பேடு' என்ற தலைப்பில் கட்டுரையாக எழுதியவர்கள் முனைவர் வெ. வேதாசலம் கல்வெட்டாய்வாளர் திரு. செ. போசு, காப்பாட்சியர், மதுரை

நாயக்கர் என்பவர் காமயநாயக்கருக்குக் கட்டுப்படாமல் இருக்கவே, காமயநாயக்கரின் ஆணைப்படி இந்த ஆரியவம்சத்தினர் அவனைக் கொன்று வெற்றிகண்டனர். இதற்காக காமயநாயக்கன் இவர்களுக்கு மங்கலரேவைச் சேர்ந்த எட்டுப்பட்டி கிராம நாட்டாண்மை தந்துச் செப்புப்பட்டயம் வழங்கினார். பாறைக்குளம் மஞ்சள் மடைப்பாசனத்தில் 7 காளி நஞ்சைநிலம், ஆற்றுக்கு வடக்கில் 10 சங்கிலி புன்செய் நிலம், பெருமாள் கோயில், விநாயகர் கோயில் மானியங்கள் ஆகியவையும் வழங்கப்பட்டன.

## செப்பேட்டு

1. உ றாமசெயம்
2. செயா ஹூ ஆவணி மீ ம் மதுரைக்கோட்டை
3. டயில் ஆரியவம்சமும் மல்லினாக்கன் மகன் றா
4. மலிங்கம்பிள்ளை சென்னப்பபிள்ளை யிவாளை
5. ச் சேற்ந்த -எ- வீட்டுக்காறரை கற்த்தாக்கள் திரு
6. மலைநாயக்கர் பெண் கேட்டாற்கள்ளென்று
7. முரிஞ்சு நாட்டுப் புறத்தில் ஆரியபட்டி யென்று முளை
8. முளைப் பிடிச்சு ஊறுகட்டிக் குடியிருந்ததில் கள்
9. ளற் சில்லரை கூடி வறாமல் மேல்மங்கரேவி
10. ல் வந்து குடியிருந்தார்கள் அப்போது அரம
11. னையாரைக் கண்டுகொள்ள வேணுமென்று
12. சக்கரை பாக்கு வெத்திலை தெச்சனை ஷ ஙம
13. பொன் வச்சு சதுரகிரிக் காமயனாக்க றவற்கள்
14. சமூகத்தில் வச்சு கண்டு கொண்டாற்கள் அரம
15. னையாருக்கு சந்தோசமாகி ஆற் யெவடமென்று
16. கேள்க்க நடந்த வற்த்தமானங்களைச் சொன்னா
17. ற்கள் படி பாற்க்கிலை துப்பட்டி தலப்பால் குடுத்
18. து சேவுகாவிருத்தி மனுசாளென்று அரமனைய
19. ாற் வச்சிருந்தாற்கள் துள்ளுகுட்டி னாக்கரென்
20. று கறட்டுமுந்தலில் ஊறுகட்டி யிரருந்தான்
21. சதிரகிரிக் காமயனாயக்கருடனே எதிரி பண்ணி

22. னான் அரமனையாற் ஆரியவம்முசத்தைக் கூப்பிட்

23. டு துள்ளுகுட்டினாக்கனைச் சங்கா றம் பண்ணி வந்

24. தியானால் கேட்ட வற்ந் தாறோமென்று உத்தறவாச்

25. சுது ஆரிய றாமலிங்கம்பிள்ளை சென்னப்பபிள்ளை யி

26. ருபேரும் படையைப் பெருக்கி ஆயுதபாணியுடனே

27. ஊரை வளைஞ்சு துள்ளுகுட்டி னாக்கனைப் பிடிச்சு

28. சங்காறஞ்செய்து அவன் ஊரையும் பிடித்து வ

29. ந்தாற்கள் றாசாவுக்குச் சந்தோசமாகி உங்களுக்கு

30. யென்ன வேணுமென்று கேட்டாற் யெங்களுக்கு

31. மேல்மங்கரேவைச் சேற்ந்த யெட்டுப்பட்டிக் கிறாம

32. த்துக்கு நாட்டாமை கணக்குந் தாம்பூரசாதினப் பட்ட

33. யத்துக்கு உத்தறவாக வேணுமென்று சொன்னாற்கள்

34. அந்தப்படிக்கி உத்தறவாச்சுது பாரைக்குளம் மஞ்

35. சையில் மடைக்குங் கிளக்கு -எ-காணி-பிஞ்சை

36. ஆத்துக்கு வட்க்கு-஌-ச் சங்கிலி ஆக யிவளவு மானி

37. பம் - பெருமாள் கோவில் மானிபம் வ |உ ஌ பெ

38. ான் வினாயகன் கோவில் மானிபம் வ ஌ பொ

39. ன் மதுரை ஆரிய கருப்பசாமி கோவில்க் கட்டி

40. கும்பிடவும் யிதற்கு சாட்சி ஆனைவெட்டித் திருமா

41. ல்தேவன் சலுப்பட்டி குமாறு சேறுவைகாற

42. ன் யிந்தபடிக்கிச் சதிரகிரிக் காமயனாக்கறவ

43. ற்கள் திருக்கறத்தில் ஒப்பம் யிந்தப் பட்டயஞ்

44. செய்தவன் காமயனாக்கற் குமறாண்டி ஆசா

45. ரி யிதை யாதாமொருத்தற் அடி அளித்தால் சதி

46. ரகிரி மகாலிங்கம் குத்துறாயப்பெருமாள்

47. கேள்ப்பாற் வ

# 5. திருநெல்வேலிச் செப்பேடு-1

## *தலைவர்மார், அறக்கட்டளைக்கு நிலம் விற்ற விலை ஆவணம்*

திருநெல்வேலி நெல்லையப்பர் கோயிலில் இச் செப்பேடு உள்ளது.

சகவருடம் 1604(கி.பி.1682) கொல்லம் 858 (கி.பி.1682) தமிழ் வருடம் துன்முகி (கி.பி.1682) ஆகியவை குறிப்பிடப்பட்டுள்ளன. மன்னர் ரங்க கிருட்டிண முத்து வீரப்ப நாயக்கர் (கி.பி.1682-1689] குறிப்பிடப்பட்டுள்ளார். எனவே இச்செப்பேடு கி.பி.1682ல் பொறிக்கப்பட்டது என்பது தெளிவு.

குடநாட்டு வள்ளிக்குட்டத்து தலைவர்கள் மன்னன் ரங்க கிருஷ்ண முத்து வீரப்ப நாயக்கர் மற்றும் திருவேங்கடநாதர் ஆகியோர் நலமாக இருக்க வேண்டுமென்ற வேண்டுதலின் பேரில் திருநெல்வேலி நெல்வேலிநாதசுவாமி - வடிவம்மன் கோயிலில் உச்சி கால பூசையாக அறம் வளர்த்துக் கட்டளை ஒன்றினை ஏற்படுத்தியுள்ளனர். அதற்காக அவர்கள் பலகாலமாக அனுபவித்து வருகிற தரிசைக்காடு ஒன்றினை தன்மதானமாக 5 பொன் காசுக்கு விற்றுக் கொடுத்து ஆவணம் எழுதிக் கொடுத்துள்ளனர். வன்னிக் குட்டத்தில் உள்ள இந்நிலத்தின் நான்கு எல்லைகள் இச்செப்பேட்டில் சொல்லப்பட்டுள்ளன. கோயில் காரியம் செய்யும் சக்கரவற்த்திகள் பேரில் இவ்வாவணம் எழுதப்பட்டுள்ளது.

### செப்பேட்டு

### முன்பக்கம்

1. சகாத்தம் ௲௬௱௪க்கு மேல் செல்லாநின்ற கொல்ல அா

---

*நெல்லை மாவட்ட கையேடு* தொல்பொருள் ஆய்வுத்துறை சென்னை, 1997. பக்.78-80ல் இச்செப்பேட்டு வாசகம் வெளியிடப்பட்டுள்ளது. ஆசிரியர் தே. கோபாலன், பொறுப்பாசிரியர் நடன காசிநாதன். மேலும் ஸீவல் பட்டியலில் (Swell List) செப்பேடு எண்: 167 ஆக ஆங்கிலக் குறிப்பு வெளியிடப்பட்டுள்ளது.

2. ருயஅ (ஷு) துன்முகி ஷு பங்குனி மீ ௩௨ பூறுவ பட்சத்துத் திசமியும்

3. ஆதித்தவாரமும் சுபயோக சுபகரணம் பெற்ற ரேபதி நட்செத்தி

4. ரத்தில் (அரு]ளிச் செய்த உதகதன்மதான விலைப்பிராமணம் ஆ

5. வது கீள்வேம்புநாடு திருநெல்வேலி உடைய நயினார் நெல்வே

6. லிநாத சுவாமி வடிவம்மன் உச்சந்தி அறம்வளர்த்த கட்டளை

7. க்குக் காரியஞ் செய்யும் சற்க்கரவற்த்தியவர்களுக்கு குட

8. னாடு வன்னிக்குட்டத்து தலைவமாரோம் தன்மதான விலைப் பிர

9. மானம் ஆவது சவ்வதுரங்க கிட்டிணமுத்து வீரப்பனாயக்க

10. ர் வர்களுக்குப் புண்ணியமாகவும் திருவேங்கிடநாதர்

11. யவர்களுக்குப் புண்ணியமாகவும் நாங்கள் ஆற்சந்திராற்

12. கம் சந்ததிப் பிரவேசம் ஆண்டனுபவித்து வருகிற யெங்க

13. ள் வகையான காடு தரிசு வன்னிக்குட்டத் தென்யெல்

14. கைத் தரிசைக்காடு கிரையம் பொன் ரு-ன் இந்தப் பொன் அஞ்

15. சுக்கும் கிரையமாகக் குடுத்த தரிசுக் காட்டுக்கு யெல்

16. கையாவது கீழ் யெல்கை பெரும்படைச் சாத்தாவின் கோ

17. யிலுக்கு மேற்க்கு தென்யெல்கை ஆறுமுகமங்கலதார்

18. யெளுதிக் குடுத்த கட்டளை யெல்கைக்கு வடக்கு மேல் யெல்

19. ல்கை [ந]ட்டாத்தி யெல்கைக்கும் கிழக்கு வடயெல்கை ம

20. றுகாலுக்கு ஓடைக்கும் வெள்ளையன் செல்வல் விளைக்குந்

21. தெற்கே இந்நான்கு யெல்கைக்குள்பட்ட காட்டில் ந

22. ஞ்சை புஞ்சை பயிரிட்டுக்கொண்டு அறம்வளத்து உச்சந்தி

23. கட்டளைக்கு ஆதித்த சந்திரார்க்கம் சந்ததிப் பிரவேசம் ஆ

24. ண்டனுபவித்துக் கொள்வாராகவும் இந்நிலத்திலுள்ள நி

25. தி நிச்சய சேப தரு பரகானம் அட்ட வற்சன்னியா சாமியா

26. சித்த சா த்த மென்னப்பட்ட போக தெச்சு உள்ளிய
27. ங்களுக்கும் இவரே யோக்கியர்ராக செம்பிலுஞ் சிலையி
28. லும் வெட்டி ஆற்சந்திராக்கம் அனுபவித்துக் கொள்வரா
29. கவும் இப்படிச் சம்மதித்து இந்த தன்மதானம் விலைப்
30. பிரமாணம் சாதனம் யெழுதிக் குடுத்தோம் வன்னிக்குட்
31. டத்துத் தலைவமாரோம் திருநெல்வேலி நெல்வேலிநாத சுவாமி வ
32. டிவம்மன் அறம் வளர்த்த கட்டளைக் காரியஞ் செய்யும் ச
33. ற்க்கரவற்த்தியாரவர்களுக்கு இந்தபடிக்கு இந்த தன்மத்தை பரிபாலி
34. னம் பண்ணினபேர் கெங்கைக் கரையிலே அநேக
35. கோடி சிவலிங்கப் பிறதிட்சை பண்ணின பலத்தையு

பின்பக்கம்

36. ம் அநேக அசுமேதி யாகம் பண்ணின பலத்தையு பெ
37. றுவாராகவும் இந்த தன்மத்துக்கு யாதாமொருதர் விகா
38. தம் பண்ணினபேர் கங்கைக் கரையிலே காராம்
39. பசுவைக கொன்ற தோசத்திலே போவாராக இந்தப்படிக்கு இந்த சாதகம் யெழுதினேன் சிதம்பர
40. நாதன் யெழுத்து

# 6. திருநெல்வேலிச் செப்பேடு-2

*திருநெல்வேலி காந்திமதி அம்மனுக்கு அர்த்தசாம வழிபாட்டுக்கு அளித்த பட்டயம்*

திருநெல்வேலி நெல்லையப்பர் கோயிலில் உள்ள செப்பேடுகளின் தொகுதியில் ஒன்றாக இச்செப்பேடு உள்ளது.

21.5 x 19.5 செ.மீ. அளவுள்ள இசசெப்பேட்டில் முன்பக்கம் 31 வரிகளும் பின்பக்கம் 28 வரிகளுமாக வாசகம் பொறிக்கப்பட்டுள்ளது. தெலுங்கு எழுத்தில் தெலுங்கு மொழியில் உள்ள இச்செப்பேட்டில் 51 முதல் 59 முடிய உள்ள வரிகளில் தெலுங்கு எழுத்தில் சமஸ்கிருதச் சுலோகங்கள் உள்ளன. இறுதியில் பெரிய எழு-த்தில் 'ஸ்ரீரெங்கனாதா' என்று எழுதப்பட்டுள்ளது.

சகவருடம் 1622 (கி.பி.1700) தமிழ் வருடம் விக்கிரம (கி.பி.1700) ஆகியவை குறிப்பிடப்பட்டுள்ளன. கனககிரி பட்டணத்தில் முடிசூட்டிக் கொண்ட நரசிம்ம தேவ மகாராயர் மற்றும் விசுவநாத நாயக்கர் மகன் ரங்ககிருஷ்ண முத்துவீரப்ப நாயக்கர் ஆகியோர் குறிப்பிடப்படுகின்றனர்.

இரங்ககிருஷ்ணமுத்து வீரப்ப நாயக்கர் சங்கர சாஸ்திரிகளுக்கு பழைய பேட்டையினைக் கொடையாகக் கொடுத்து அதனில் உள்ள பலதரத்து மக்கள் மீது விதித்துள்ள வரிவருவாயினைக் கொண்டு திருநெல்வேலி ஸ்ரீகாந்திமதி அம்மனுக்கு அர்த்தஜாம பூசை செய்யவும் நாள்தோறும் அன்னதானம் வழங்கவும் செய்தமையை இச்செப்பேடு குறிப்பிடுகிறது.

---

இச்செப்பேட்டினை அமரர் திரு ச.ஹரிஹரன் பதிவு அலுவலர் தலைமையில் முனைவர் சு. இராசகோபால் முனைவர் வெ. வேதாசலம் ஆகியோர் 12 ஆண்டுகளுக்கு முன் படியெடுத்தனர். இச் செப்பேட்டினைப் படித்து தெலுங்கு எழுத்துப் பெயர்ப்பும் தமிழ் மொழி பெயர்ப்பும் செய்தவர் திருமதி ஜெயம்மா, தெலுங்கு பண்டிதர். மொழிபெயர்ப்புக்கு உதவியவர் முனைவர் சௌந்திரபாண்டியன், காப்பாட்சியர். அரசு கீழ்த்திசைச் சுவடிநூலகம் மற்றும் ஆய்வு மையம், சென்னை.

செப்பேடு

(தமிழ் எழுத்துப் பெயர்ப்பு)

முன்பக்கம்

1. சுபமஸ்து ஸ்ரீராமஜெயம்
2. ஸ்வஸ்திஸ்ரீ சாலீவாகன சகாப்தம்புலு 1622 விக்ர
3. ம நாம சம்வத்ஸரம் பால்குன சுத்த 15 புத வாரமு
4. ன்னு வ்ருத்தி நாமயோகமுன்னு வனிஜ கரணமுன்னு உத்த
5. ர பல்குனி நட்சத்திரமுன்னு சுபயோக சுபகரமுன்னு கல
6. சுபதினமந்து காஷ்யப கோத்ர ஆபஸ்தம்ப சூத்ர யஜுஸ் யாகா
7. தியாயிலைன தியாகராஜ காஸ்துரிலவாரி பௌத்துருலைன ராமாதீட்சிது
8. லவாரி புத்ருலைன சங்கரகாஸ்து குலவாரிக ராஜாதிராஜ ராஜ
9. பரமேஸ்வர நரசிம்மதேவ மகாரஸலைய வாரு கனகிரி
10. நகரமநது பட்டாபிஷித்துலை ரத்னசிம்மாசனாதி ரூடுலை ப்ருத்வீ
11. சாம்ராஜ்ய மேலுசுண்டகாநு காஷ்யபகோத்ரம் மகாராஜ மான்ய
12. ராஜஸ்ரீ விஸ்வநாத திருமல நாயனய்யகாரி புத்ருலைன ரங்க
13. கிருஷ்ண முத்து வீரப்பனாயனய்யகாரு பூமி தான தாம்ரசாச
14. னமு விராசி இச்சின கிரமம் மாகு ராஜஸ்ரீ தேவ திவ மகாரா
15. யலையகாரு மன்னிஞ்ச்சி அமரானரு பாலிச்சின மதுர சம
16. ஸ்தான மந்தலி தட்சிணதேசம் திருநெல்வேலி சமஸ்தான மந்து ராஜ
17. ஸ்ரீ காந்திமத்யம்மவாரிகி அர்த்தஜாம கட்லகுன்னு தமகுநி
18. த்யான்னதானம் சேசேடந்துகுன்று பாதபேடலோ நேலலகுவி
19. வரம் தூர்ப்பு எலுக அனவரத தான சம்வாகள்ளகு படமர
20. தட்சிணம் எலுக மொத ஒகன்னோதரு உத்தரம் பட்சிம எலுக
21. ஓடகு தூர்ப்பு உத்தரவு எலுக மூடோ கன்னோருகு தட்சிண

22. ஈ நால்கு எல்ல சதுரஸ்ர மத்யமந்தலி கலகொளதகு

23. இரவை சாட்டல உத்தனமுன்னு படமர தூர்ப்பு எலுக கம்

24. டிய சைரிசெருவு கொளலுகுன்னு நீள்ள பட்டுகுன்னு. படமர தட்சி

25. ணம் எலுக தெங்காசி பாடகு உத்தரம் படமற எலுக த

26. க்ஷிணம் உத்தரம் ஸாய்யே தோவகுன்னு அபிஷேக பண்டாரம் பூமி

27. கின்னி தூர்ப்பு உத்தரமு எலுக கண்டிய பைரி செலுவு நில்ல

28. குன்னு கியாலைவாண்டல இட்லகுன்னு தட்சிணம் ஈ நால்கு எல்ல ச

29. துரஸ்ர மத்யமந்தலிகல தந்துவாயலு காவு கவலுன்னு

30. இந்துலோகல காடிஇடலு பலபட்டட சுவர்ணாதயம் சக

31. லனமுதாயமுன்னு இந்துலோ சேகரம் சங்கர நைனாரு குடி

பின்பக்கம்

32. பாடகு தூர்ப்புன்னு கல்வட்டம் குண்டகு தட்சிணம் கொத்தருவு காலு

33. கு படமர மஞ்சனாதி கொளம் செருவு தாடி கடம ஆகு மாள்ள ஐது

34. . . .லுன்னு பின்னேரி அடிவி ஆறுமாள்ளுன்னு அந்துலோ சேகரம் ஆட்டு வாணியம்

35. . . .ர்மானிகி தூர்ப்பு ஓடகுமுன்னு காங்கயம் குளம் ஸருபு முல் ஆ

36. றுமாள்ளுன்னு னனை பண்டாள செருவுலோ நஞ்சபதி கொலுல வித்தனம்ச

37. . . .முன்னு இந்துதோ சேகரம் கண்டி மப்பெரகவுள்ளகு படமர தட்சிணம்

38. ரட்டக அளகப்பமொதல்லியாரி கட்னவீதிகி உத்தரம் படமர எலுகு சொக்கனா

39. தம் பெத்த காள்ளகுன்னு உபயமார்க்கம் பாட்டகுன்னு தூர்ப்பு உத்தரகு எல்கு கொத்த

40. வாலபள்ளகு படமர பட்சேரின்னி தெங்காசி பாடரு தூர்ப்பு வெலம் தாம்

41. ட இன்ட்லு காடி கடலு பலபட்டட சொற்ணதாய முன்னுபாட

42. கு தட்சிண மத்ய வீதின்னி இஞ்சகு உத்தரம் இந்துலோ சேரின பலபட்டட

43. காடி கடலு சொற்ணாதாயம் சகலசமுதாயகமுன்னு சகிரண் யோத

44. க தாராயூர்வமுக வ்ராசி இச்சினாகெனுக இந்துனகல நிதி நிட்சேப ஜ

45. ல தருபாஷாணா நீண்யாகாமிய இத்தசாத்யமுலைன அஷ்டபோகதேஜஸ்வ

46. ம்யமுலகுன்னு தா்னாதி வினிமய விக்கிரயமுல்குன்னு யோக்யலு

47. கானு ஆசந்திராற்க்மு கானு தம உடத்ர பௌத்ரபாரம் பர்யமுலு

48. கானு அனுபவிஞ் சுகோ கலவாடு இடனி சம்பதிஞ்சி பூமிதான

49. தாம்ரசாசனமு வ்ராசி இப்பிஞ்சிளாரமு ரங்ககிருஷ்ண முத்துவீர்ப்பனா

50. யனய்யகாரு சங்கர சாஸ்துருலவாரிகி ஈதாம்பர சாசனமு ரா

51. யசம் நாரணப்பய்ய வ்ராறு ||* சொதத்தா த்விகுணம் புண்யம் பரதத்தா

52. னு பாலனம் | பரதத்தா பாகாரேண சொதத்தம் நிஷ்பலம் பவேத் ||

53. பாலனயோர் பத்யே தானாத் சிரேயோனு பாலனம் | தானாத் சொற்க்கமவாப்புனோ

54. தி பாலனா தட்சுதம் பதம் || ஏகைவ பகிநீ லோகே சர்வேஷாமேவ பூபு

55. ஜாம் | நவோஜ்யா நகரகிராஹ்யா விப்ரதத்தா வசுந்தரா ஈ தர்மானிகிஅ

---

* இதிலிருந்து மூன்று வடமொழிச் சுலோகங்கள் உள.

56. னுகூலம் சேனிவார்லு கங்கா சரஸ்வதி தீர்த்த ஸ்நான பலமுன்னு குருசேன

57. த்ராதி புண்யசேஷத்திரமுலயந்து அஷ்லமேதாதி சகல கிரதுவுலுன்னு

58. ஜேசின பலமுலு ஸாந்தகல வாருலு || தர்மமே பரிபாலயா

59. மி || தர்மமே ஜெயம் || சுபமஸ்து || . . . ||

ஸ்ரீ ரங்கனாதா

## செப்பேடு

தமிழ் மொழி பெயர்ப்பு

சுபமஸ்து ஸ்ரீ ராமஜெயம்

ஸ்வஸ்தி ஸ்ரீ சாலிவாகன சகாப்தம் 1622 விக்ரம வருஷம், பங்குனி சுக்கிலபட்சம் 15, புதன்கிழமை, விருத்தியோகமும் வனிஜ கரணமும் உத்தர நட்சத்திரமும், சுபயோகமும் சுபகரணமும் உள்ள, சுபதினத்தில், காஷ்யபகோத்ரம் ஆபஸ்தம்ப சுத்ரம் யஜுர்வேதம் படிக்கும், தியாக ராஜசாஸ்திரிகளுடைய பேரனும், ராமாதீட்சிதர் அவர்களுடைய மகனுமான, சங்கரசாஸ்திரி அவர்களுக்கு, ராஜாதிராஜ, ராஜ பரமேஸ்வர நரசிம்ம தேவமகாராயர் கனகிரி பட்டணத்தில் பட்டாபிஷேகம் செய்யப் பெற்று, ரத்ன சிம்மாசனத்தில் அமர்ந்தவராய் பூமியை பரிபாலித்து வரும் சமயத்தில்,

காஷ்யப கோத்திரம், மகாராஜமான்ய ராஜஸ்ரீ விசுவநாத நாயக்கருடைய மகனான, ரங்ககிருஷ்ணமுத்துவீரப்ப நாயகன், பூமிதானம் செய்த செப்புப் பட்டயத்தின் விவரம்.

எங்களுக்கு, தேவதேவ மகாராயர் மன்னித்துக் கொடுத்த, மதுரை சமஸ்தானத்திலுள்ள, தட்சிண தேசத்தில் திருநெல்வேலி சமஸ்தானத்தில், ஸ்ரீ காந்திமதி அம்மாளுக்கு அர்த்தஜாம கட்டளைக்கும் தினப்படி அன்னதானம் செய்வதற்கும், பழையபேட்டையில் கொடுத்த பூமி விவரம்.

(இந்த நிலத்துக்கு நான்கு எல்லைகள் கூறப்பட்டுள்ளன)

இந்த நான்கு எல்லைகளுக்குட்பட்ட நிலத்திலுள்ள நெசவாளர்கள், விவசாயிகள், தங்கவேலை செய்பவர்கள் ஆகியோரிடமிருந்து சேகரிக்கும் பணமும்,

சங்கரநைனார் கோயிலுக்குக் கிழக்கேயும், கல்வட்டம் குளத்துக்கு தெற்கேயும், கொத்தருவு கால்வாய்க்கு வடக்கேயும், மஞ்சனாதி குளத்துக்கு மேற்கேயும், உள்ள நிலம் காடு முதலியனவற்றிலிருந்தும் பெறும் பணமும்,

ஆட்டுவாணியத்துக்கு கிழக்கும், பண்டாள ஓடைக்குக்கீழ் உள்ள நஞ்சை நிலமும், அதில் வரும் பணமும்,

கண்டிப்பேரி கவுளுக்கு மேற்கும், அழகப்பமுதலியார் கட்டளை வீதிக்கு வடக்கும், சொக்கநாதம் பெத்தகாள் இரு வீதிகளுக்கு கிழக்கும் வடக்கும், கொத்தவாள கிராமத்துக்கு மேற்கும், தென்காசி சாலைக்கு கிழக்குமாக உள்ள விவசாயிகள், பொற்கொல்லர், முதலியோரிடமிருந்து வரும் பணமும்,

வழிக்குத் தெற்கே நடுவீதி ஒன்று உண்டு. அந்த வீதிக்கு வடக்கிலுள்ள விவசாயிகள், பொற்கொல்லர் முதலியோரிடமிருந்து பெறும் பணமும்,

தங்களுக்குத் தானம் அளித்துள்ளோம்.

ஆகவே,

இந்த நிலத்திலுள்ள நிதி, புதையல், நீர், மரங்கள், கற்கள் ஆகியவையும், நீங்களே அனுபவித்துக்கொள்ளுங்கள். நீங்கள் அனுபவித்துக்கொள்ளவோ விற்கவோ முழு உரிமையுண்டு. இதை நீங்களும் உங்கள் மகன் பேரன் முதலானோரும் அனுபவித்து வரவேண்டியது.

இப்படி, ரங்ககிருஷ்ண முத்துவீரப்ப நாயகர், சங்கர சாஸ்திரிகளுக்கு எழுதிக்கொடுத்த பூமிதானச் செப்புப் பட்டயம்.

இச் செப்புப் பட்டயம் எழுதியது நாரணப்பய்யா.

(இதன் பிறகு மூன்று வடமொழிச் சுலோகங்கள் உள)

இந்த தர்மத்துக்கு அனுகூலம் செய்தவர்களுக்கு கங்கை சரசுவதி நதியில் ஸ்நானம் செய்த புண்ணியமும், குருக்ஷேத்திரம் முதலிய புண்ணிய தலங்களில் அஷ்வமேதயாகம் செய்த புண்ணியமும், கிடைக்கும்.

தர்மத்தைக் காப்பாற்று, தர்மத்துக்கே வெற்றி

சுபமஸ்து, ஸ்ரீரங்கநாதா

# 7. முசிறி செப்பேடு - 1

*கோயில், பூசகர் மற்றும் தேவரடியாருக்கு காணிப் பட்டயம்*

இச்செப்பேடு திருச்சிராப்பள்ளி மாவட்டம் முசிறியில் உள்ள அருள்மிகு சந்திர மௌலீஸ்வரர் கோயிலில் உள்ளது. இத்துடன் மேலும் மூன்று செப்பேடுகள் இக்கோயிலில் உள்ளன.

31 x 22செ.மீ அளவுள்ள இச்செப்பேட்டில் முன்பக்கம் 42 வரிகளும் பின் பக்கம் 11 வரிகளுமாக மொத்தம் 53 வரிகளில் வாசகம் உள்ளது. பின்பக்கம் நின்ற நிலையில் காளையின் (நந்தி) உருவம் திருவாச்சியுடன் உள்ள மேடையில் கோட்டுருவமாக உள்ளது.

இதனில் சக வருடம் 1631 (கி.பி.1709) தமிழ் வருடம் விக்ருதி (கி.பி. 1710) ஆகியவை குறிப்பிடப்பட்டுள்ளன. மதுரை நாயக்கர் முத்து வீர சொக்கநாத நாயக்கர் (கி.பி 1706 - 32) குறிப்பிடப்படுகிறார்.

முசிறியான மும்முடிச் சோழ பேட்டை சோழிஸ்வர முடையார் கோயிலுக்கு ஏற்கனவே மானியமாக இருந்த ஏழரைக் காணியுடன் கூடுதலாக கிருஷ்ண சமுத்திர மகாசனங்கள் 2 காணியும் சுண்டக்காய் மகாசனங்கள் 2 காணியும் மானியம் கொடுத்துள்ளனர். ஆகக் கோயிலுக்குரிய 11 ½ காணியினை சோழீஸ்வர முடையார் - கற்பூர வல்லியம்மனுக்கு 8 ½ காணி, தலத்தார் - நம்பியார்க்கு 1 காணி, தாசிகளுக்கு (தேவரடியார்) 2 காணி எனப் பிரித்து மாணியமாக்கப் பட்டுள்ளது. இச்செப்பேடு கோயில் சண்டேஸ்வரர் பெயரில் வழங்கப்பட்டுள்ளது.

---

*கல்வெட்டு* இதழ் 16; நள ஆண்டு தைத்திங்கள், பக் 32-34. 'முசிறி சந்திரமௌலீசுவரர்கோயில் செப்பேடு' என்ற தலைப்பில் கட்டுரையாக எழுதியவர் திரு. அ. அப்துல் மஜீத், பதிவு அலுவலர், திருச்சிராப்பள்ளி. இச்செப்பேட்டின் மைப்படி, நிழற்படம், மறுவாசிப்புத் தந்தவர் திரு நாக. கணேசன், காப்பாட்சியர், கரூர்.

## செப்பேடு முன்பக்கம்

1. சுபமஸ்த்து ஸ்ரீமகா மண்டலேசுரன் அரியராய விபாட
2. ன் பாஷைக்குத் தப்புவராய கண்டன் கண்டனாடு கொண்டு
3. கொண்டனாடு குடாதான் பூறுவ தெட்சண பச்சிம உத்த சத்த சமுத்திராதிப
4. தி ஈளமுதலாய எண் மண்டலமுந் திறை கொண்டருளிய
5. ராசாதி ராசன் ராசபரமேசுரன் ராசாமாத்தாண்டன் ராசாவே
6. சியர் புசங்கன் மேதினி மேசூர கண்டன் கட்டரிச் சாழுவன் பர
7. ராசதிமிரசூரியன் கெடியங்க வீமன் துலுக்கத் தள விபாட
8. ன் துலுக்கர் மோகந் தவிள்த்தான் ஒட்டிய தள விபாடன் ஒட்
9. டியர் மோகந் தவிள்த்தன் ஈளமுந் திறை கொண்டு ராட்பா
10. ணாயன் பட்டணமு மளித்து சமனொளியுந் திருக்கோணா
11. மலையுங் கொண்டருளிய அசுபதி கெசபதி நரபதி நவ கோடி நாராய
12. ணன் சொழ மண்டலப் பிறதிஷ்ட்டாப னாசாரியன் பாண்டிம
13. ண்டலப் பிறதிஷ்ட்டாப னாசாரியன் தொண்டலாதிசுரன் இரவி
14. நாராயண(ன்) உரிகுல சுரத்தான் துட்டராய கண்டன் தேவமகாரா
15. யர் புசபெலராயர் வீரவசந்த ராயர் விருபாட்சி ராயர் மல்லிகாற்சு
16. ன ராயர் வீர நரசிங்க ராயர் கொண்டப்பள்ளி வீரர் குருதுறை கல்லு
17. வாதாவி திசை வாடையுங் கொண்டு துர்க தம்பமும் போட்டு திக்கு
18. விசையம் பண்ணிய ஸ்ரீவிரகிஷ்ட்டண தேவ மகாராயர் அச்சுத தே
19. வ மகாராயர் சதாசிவ தேவமகாராயர் விபுதிருத்தி ராட்சககைய
20. சசீர்ரங்க தேவ மகாராயர் கிஷ்ட்டண தேவ மகாராயர் ராம தேவ

21. மகாராயர் சீரங்கர்ராமாகாராயர் வேங்கிடபதி ராயர் மகாராயர் பெ

22. ரிய வேங்கிடபதி ராயர் மகாராயர் பிறிதிபுராச்சியம் பண்ணி அ

23. ருளா னி(ன்)ற சகாற்த்தம் ஆசுாாஙடயக உ மிதன் மேல் செல்லா நின்ற வி

24. குறுதி ௵ ஆவணி ௴ ருஉ சுக்கிர வாரமும் திருவோண நட்செத்திரமும் பஞ்(ச)

25. மியும் பெத்தன்ாள் சுபதினத்தில் ஸ்ரீமகா மண்டலே சுர விசுவனாத னா

26. யக்கர் திரும்லை நாயக்கர் முத்துவீரப்ப னாயக்கர் சொக்கனாத னாயக்கர் ரங்க

27. கிஷ்ட்டண முத்து வீரப்ப னாயக்கர் விசையரங்க கிஷ்ட்டண முத்துவீர சொ

28. க்கனாத நாயக்கரய்யனவர்கள் புண்ணியமாக ஸ்ரீதுப்பாக்கு லு ராம

29. கிஷ்ட்டணப்ப னாயக்கரய்யனவர்கள் னாளையில் நயினாத் தை முதலிய

30. ாரவர்கள் குமாரன் த(ா)ண்டவராய முதலியாரவர்கள் புண்ணிய ம(ா)க

31. கட்டளையிட்ட தன்மம் திருச்சிலாபள்ளிக்கு வடகரை ராச வளனாடு பாச்

32. சில்க் கூத்தத்தில் திருவெள்ளரை மேற்படாகையில் ஆமூர் நாடு

33. முசுறியான மும்முடி சோளப்பேட்டை சோழீசுர முடை

34. யார் சன்னதிக்கு அதிபதியான தண்டேசுர சுவ(ா)மியாரவர்க

35. ளுக்கு மெற்படி முசுறிக்கு பிறிதி நாமமான கோபால கிஷ்ட்ட

36. ண சமுத்திரம் அஷேவித்து மாகாசனங்கள் அனவருங் கூடி

37. முன் மானிபம் விட்டது-காணி-எக்கு-நாளது-௵ விட்டது

38. காணி-உ-ஆக-காணி கூக்கு-சுண்டக்காய் அசேஷவித்து மகாச

39. ணங்கள் அனைவருங்கூடி விட்ட மானிபம், 1க(ா)ணி உ-ஆக க(ா)ணி

40. உ-ஆக. க(ா)ணி-யிக க்கு - சோழி சுரமுடையார்-கற்பூரவல்லி

41. யம்மன் மானிபம் -காணி அஇ-தலத்தார்-நம்பியார்-மானிபம் கா

42. ணி-க-தாசியள் மானியம்-க(ா)ணி உ ஆக காணி பதி நொண்

## இரண்டாம் பக்கம்

43. ணரையு மானிபம் விட்டபடியினாலே யிந்த தற்மம் புத்திர பௌ

44. த்திர கோத்திரப் பாரம்பரையாக-நடத்திவிக்க கொண்டு வருவோ

45. மாகவும்-யிந்தத் தன்மந்தை யாதாமொருவர் பரிபாலநம்

46. ணி நடத்திவிச்ச பேர்களுக்கு ஆயிசுவர்த்தனையும் அஷ்ட்ட லட்சுமி

47. கரமும் சந்தான லட்சுமியும்-சகல பாக்கியமும் மேன்மேலு மு

48. ண்டாவதாகவும்-யிந்த தற்மத்துக்கு யாதாமொருவர் அகுதம்

49. பண்ணின பேருண்டாகிலவர்கள் கெங்கைக் கரையிலே பு

50. ண்ணிய தலங்களிலே கா்ராம் பசுவைத் தன் கையினாலே கொ

51. ண்ண பாவத்திலே போ(க) கடவாராகவும் அசுவத்தி கோவத்தி பிறம

52. த்தி சிசுவத்தி-த்திரிவத்தி யிது முதலான பண்ணின தோஷத்தி

53. லே போகக் கடவார(ா)கவும் - கற்பூரவல்லியம்மன் துணை

உ 4. அஸ்வஹத்தி, கோஹத்தி, பிரம்மஹத்தி, சிசுஹத்தி, ஸ்திரீஹத்தி

# 8. முசிறி செப்பேடு - 2

*கோயில் திருவிழாவிற்கு காவல் தீர்வை*

திருச்சிராப்பள்ளி மாவட்டம் முசிறியில் உள்ள அருள்மிகு சந்திரமௌளீஸ்வரர் கோயிலில் இச்செப்பேடு உள்ளது.

34 x 22செ.மீ அளவுள்ள இச் செப்பேட்டில் முன்பக்கம் 45 வரிகளும் பின்பக்கம் 3 வரிகளுமாக 48 வரிகளில் வாசகம் எழுதப்பட்டுள்ளது. பின்பக்கம் திருவாச்சி (பிரபை)க்குள் நிறுத்தப்பட்ட சூலம் உள்ளது.

இச்செப்பேட்டில் சக வருடம் 1631 (கி.பி.1709) தமிழ் வருடம் விக்ருதி (கி.பி. 1710) ஆகியவை குறிப்பிடப்பட்டுள்ளன. விஜய நகர மன்னர் பெரிய வேங்கடபதி ராயர் குறிப்பிட்டுள்ளார். மதுரை நாயக்க மன்னர் முத்து வீர சொக்கநாத நாயக்கர் (கி.பி 1706-32] குறிப்பிடப்படுகிறார்.

இவரது ஆட்சியில் வீரமலைப் பாளையப்பட்டினைச் சேர்ந்த வளந்தந்கரம் கம்பயனாயக்கர் முசிறி சோழீஸ்வரமுடையார் கற்பூரவலியம்மான் திருவிழா பூசைக் கட்டளைக்கு நாள் ஒன்றுக்கு 2 பணம் வீதம் மாதம் 6 வராகன் பொன்னாக, வருடத்திற்கு 72 வராகன் பொன் கூடலூர் காவல் தீர்வையிலிருந்து கொடுக்க கற்பூரவல்லி அம்மனுக்கு நீர்வார்த்துச் சண்டேஸ்வரர் பெயரில் சாசனம் எழுதிக்கொடுத்ததை இச்செப்பேடு குறிப்பிடுகிறது.

---

*கல்வெட்டு* இதழ் 16; நள ஆண்டு தைத்திங்கள், பக் 32-37. கட்டுரையாக எழுதியவர் திரு. அ. அப்துல் மஜீத். பதிவு அலுவலர். திருச்சிராப்பள்ளி. மைப்படி நிழற்படம். மருவாசிப்பு அளித்தவர் திரு நாக.கணேசன். காப்பாட்சியர். கரூர்.

## செப்பேடு

### முதல் பக்கம்

1. சுபமஸ்த்து ஸ்ரீமகாமண்டலேசுரன் அரியராய விபாடன்பா
2. ஷைக்குத் தப்புவராய கண்டன் கண்டனாடு கொண்டு கொண்
3. ட னாடு குடாதான் பூறுவ தெட்சண பச்சிம உத்தர சத்த சமுத்திரா
4. திபதி ஈள முதலாய எண் மண்டலமுந் திறை கொண்ட ருளிய ராச(ா)தி
5. ராசன் ராச பரமேசுரன் ராச மாத்தாண்டன் ராச வேசி யா் புசங்கன்
6. மேதினி மேசூர கண்டன் கட்டாரிச் சாழுவன் பரராசதி மிரசூரிய
7. ன் கெடியங்க வீமன் துலுக்க தளவிபாடன் துலுக்கா் மோகந் தவி
8. ள்த்தான் ஒட்டிய தள விப(ா)டன் ஒட்டியா் மோகந் த விள்த்தான் ஈ
9. ளமுந் திறை கொண்டு ராட்பாணாயன் பட்டணமு மளித்து சமனொளி
10. யுந் திருகோணமலையுங் கொண்டருளிய அசுபதி செ[க]சபதி நரபதி ந
11. வ கோடி நாராயணன் சோள மண்டலப் பிறதிஷ்ட்டா பனாசாரியன்
12. பாண்டி மண்டலப் பிறதிஷ்ட்டாபனாசாரியன் இரவி நாராண உரி
13. குல சுரத்தான் துட்டராய கண்டன் தேவ மகாராயா் புசபெலராயா்
14. வீர வசந்தராயா் விருப்பாச்சிராயா் மல்லிகாற்சுன ராயா் வீரநரசி
15. ங்கராயா் கொண்டப்பள்ளி வீரா் குருதுறைகல்லு யாதாவி திசை
16. வாடையுங் கொண்டு துர்க தம்பமும் போட்டுத் திக்கு விசையம் ப

17. ண்ணிய ஸ்ரீ வீரகிஷ்ட்டண தேவ மகாராயர் ராம தேவ மகாரா

18. யர் சீரங்கர்ரா மாகாராயர் வேங்கிடபதி ராயர் மகாராயர் பெரிய

19. வேங்கிடபதிர் ராயர் மகாராயர் பிறிதிபுராச்சியம் பண்ணி அரு

20. ளானி(ன்)ற சகாற்த்தம்- சூசுாாஙடுயக உயிதன் மேல செல்ல (ா) நின்ற வி

21. குறுதி ஹூ ஆவணி மீ ரு உ சுக்கிர வாரமும் திருவேண நட்சத்திரமும்

22. பஞ்சமியும் பெற்ற னாள் சுபதினத்தில் ஸ்ரீமகா மண்ட லேசுர விசுவ

23. னாதனாயக்கர் திருமலைநாயக்கர் முத்துவீரப்பனாயக்கர் சொக்கனாத னாயக்கர் ர

24. ரங்க கிஷ்ட்ட முத்துவீரப்பனாயக்கர் விசையரங்க கிஷ்ட்டண முத்துவீர

25. சொக்கனாத நாயக்கரய்யனவர்கள் புண்ணியமாக ஸ்ரீதுப்பக்குலூர்

26. கிருஷ்ணப்ப னாயக்கராய் யனவர்கள் னாளையில் நயினாத்தை முதலியா

27. ரவர்கள் குமரன் தண்டவராய முதலியாரவர்கள் புண்ணிய ம(ா)க கட்டளை

28. யிட்ட தன்மம் திருச்சிலாப்பள்ளிக்கு வட்டக்ரை ராச வளனாடு பாச்சில்க் கூ

29. ற்றத்தில் திருவெள்வரை மேல்படாகையில் ஆமூர் ந[ா]டு முசுறியான

30. மும்முடி சோழப்பேட்டை சோழீசுரமுடையர் சன்னதிக்கு அதிப

31. தியான தண்டேசுர சுவாமியா்வர்களுக்கு வீர மலைப் பாளையம் வ

32. ளந்த நகரம் பெரியோபக் கம்பயனாயக்கர் குமாரன் சின்னோப

33. குமாரக் கம்பயனாயக்கர் சோழீசுர முடையார் கற்பூர வல்லியம்ம

34. ன் விளாபூசைக் கட்டளைக்கு உண்டு பண்ணின தன்மம் - நாளெ(ா)ன்று

35. க்கு இரண்டு பணம்-வீதம்-மாதமொன்றுக்கு வருஷமொ
36. ன்றுக்கு பொன் எயடூம் கூட்லூர்ப்பாதி காவல் பணத்திலே ஆயக்கம்
37. பண்ணிக்குடுத்து வருவோமாகவும் கற்பூரவல்லியம்மன் சன்ன
38. தியிலே தாரைவாத்துக் கொடுத்தபடிக்கு இந்த தற்மம்- புத்திர
39. பௌவுத்திர பாரம்பரையாய் நடத்திவிப்போமாகவும் - யிந்தத் த
40. ன்மத்தை யாதாமொருவர் பரிபாலநம் பண்ணி நடத்தி விச்ச பேர்
41. களுக்கு ஆயிசுவற்த்துணையும் அஷ்ட்ட லட்சுமி கரமும் சந்தான லட்
42. சுமியும் சகல பாக்கியமும் மேன்மேலு முண்டாவதாகவும்- யிந்
43. தத் தற்மத்துக்கு யாதாமொருவர் அக்குதம் பண்ணின பேருண்டாகி ல
44. வர்கள் கெங்கைக்கரையிலே புண்ணிய தலங்களிலே காராம்
45. பசுவைத் தன் கையினாலே கொண்ண பாவத்திலே போ(க)கடவா

இரண்டாம் பக்கம்

46. ராகவும் அசுவத்தி கோவத்தி பிரமத்தி சிசுவத்தி - த் திரிவத்தி யிது முதலா
47. ன பண்ணின தோஷத்தி(ல்) போகக் கடவாராகவும் கற்பூரவல்லியா
48. ம்மன் துணை உ

1. கெசபதி என்று படிக்கவும்
2. இக்குறியீடு வராஹனைக் குறிப்பதாக இருக்கலாம்.

# 9. நங்கவரம் செப்பேடு

*கற்பூரச் செட்டிகளின் வாணவேடிக்கைகண்டு மகிழ்ந்து தந்த நிலக்கொடை*

கரூர் மாவட்டம் குளித்தலை வட்டம் நங்கவரத்தைச் சேர்ந்த திரு வே. பெருமாளிடம் இச்செப்பேடு உள்ளது. தமிழ்நாடு அரசு தொல்லியல் துறை திருச்சிராப்பள்ளி பதிவு அலுவலர் அலுவலகத்தில் பதிவு செய்யப்பட்டுள்ளது.

22x16 செ.மீ. அளவுள்ள இச்செப்பேட்டில் தெலுங்கு எழுத்தில் தெலுங்கு மொழியில் முன்பக்கம் 23 வரிகளும் பின்பக்கம் 20 வரிகளுமாக 43 வரிகளில் வாசகம் பொறிக்கப்பட்டுள்ளது.

சகவருடம் 1638(கி.பி.1716) குறிக்கப்பட்டுள்ளது. மதுரை நாயக்க மன்னர் விஜய ரங்க சொக்கநாதர் (கி.பி.1706-32) குறிக்கப்பட்டுள்ளார்.

அரசன் நவராத்திரிக் கொலு வீற்றிருந்த போது நங்கவரம அங்கே மார நாயுடு முதலிய கற்பூரச் செட்டிகள் வாணவேடிக்கை நடத்தினர். மன்னர் மகிழ்ந்து அவர்களுக்கு திருவரங்கத்தில் ராயகோபுரத்தை ஒட்டி நிலம் வழங்கியுள்ளார். அதற்காக அவர்கள் வெடி உப்பு அரண்மனைக்கு தர இசைந்துள்ளார்கள். இச் செய்தி இச்செப்பேட்டில் சொல்லப்படுகிறது.

---

இச்செப்பேட்டின் செய்திச் சுருக்கம் பேரா. எ. சுப்பராயலு உதவியுடன் ஆவணம் இதழ் 10ல் வெளியிடப்பட்டுள்ளது. தொல்லியல் துறை பதிவு அலுவர் திரு கி. ஸ்ரீதரன் இதன் மைப்படி பெற்றுத்தந்தார். அரசு கீழ்த்திசைச் சுவடி தெலுங்குப்புலவர் திருமதி பி. ஜெயம்மாவால் தமிழ் எழுத்துப் பெயர்ப்பு செய்யப்பட்டுள்ளது.

செப்பேடு

முன்பக்கம்

தமிழ் எழுத்துப் பெயர்ப்பு

ஸ்ரீ ராமஜெய

1. சுவஸ்தி ஸ்ரீ விஜயாப்புத சாபித சம்ஹர சகாத்தம்
2. புலு 1638 அகுஅநேடி விந்தரதவ அஸ்டஜஅந
3. ரம்ப திநயந்து ஸ்ரீமத் ராஜாதிராஜ மஹாராஜ
4. ராஜ பரமேஸ்வர ஸ்ரீவீரப்ரதாப ஸ்ரீவீர ஸ்ரீரங்க
5. ராயலய்யவாரு கனகிரி நரகரமந்து
6. ரத்ன சிம்ஹாசனா சீனுலை ப்ர்த்வீ சாம்ராஜ்யம்
7. சேயுசுண்டகானு கோச்யபகோத்ரம்
8. சொக்கநாத நாயநய்யவாரி பொத்ருலையி
9. ன ரங்க க்ருஷ்ண முத்த வீரப்ப நாயநய்ய
10. வாரி புத்ருலையன விஸ்வநாதநாயனி விஜ
11. யரங்க சொக்க நாதநய்யவாரி யொக்க நக
12. ரி காம்புலைன பானபட்ர கர்பூர செட்லு நங்க
13. புரம் அன்கோமார நாயடு பர்ஹம் நாயடி
14. பாலெம் திம்மநாயுடு ஜெயங்கல கஸ்தூரி நா
15. யடு பெராட்டுரி ஸ்ரீரங்க நாயடு கொடுந்
16. தரி வடமலநாயடு விம்டலந்தரி பாணவி
17. த்தே நவராத்ரி கொலுவுண்டகாஜுசி எலிநவா
18. ரு சந்தோஸ படி பஹுமாநம் ஜேசிநப்புடு
19. கார்ய கொன்டலு அந்த்ரு பாதாகராந்துலை சுவாமி
20. மாகு ஸ்ரீரங்கமந்து தர்மம் சாயனு கொந்ச்சம் ஸ்தலம்
21. தயசேயவலநதி திவ்விய சுரோக அப்புடு எலி
22. நவாரு ஸ்ரீரங்க திவ்விய நகரமந்து திருமுக
23. த்வாரம் ராய கோபுரானிகி தூர்ப்பு ஜம்புரசீரிம் மா

பின்பக்கம்

24. ர்கமுன் 16 காழ்ழ மந்டபாநிகி 180 அடு
25. குலகு ஆவல நகரின்யால்லோ தூர்ப்பு பட
26. மர 100 அடுகுலு பாடதுகு உத்தரம் ப்ரகா
27. ராணிகி தக்ஷணம் யிந்துலோகல சதுரஸ்ரமுந
28. கு கூடித பூமி கர்பூர செட்லகு சலிபந்தலகி
29. ன்னி நந்தவனாநகின்னி நியமிஞ்சி நந்தவல்லமீ
30. ரு நகரிகி யிய்ய வலசின பாணம் புட்டு நூரு மணு
31. வுலு செல்லிஞ்சேடத்து லோசலி பந்தலிகி 15 ம
32. ணுவுலுன்னு
33. அந்து 30 மணுவுலுன்னு மேமுயிச்சிந பூ
34. மின்னி மீருமி வம்சஸ்துலுன்னு பிட்டபிட்டத
35. ராணிகி பாரம்பர்யந்தரமுகா அனுப பவிஞ்சு கொனுனு வார
36. லை வுந்டகலவாரு யீதர்ம சாசனமு தழவா
37. யி கோவிந்தய்யகாரி அனுமதிநி கொம்மல வெங்க
38. ட்ராமய்யவராசிநமூ | யிவி விர்த்தி
39. பொநதிஞ்சிவாரிகி அநேக யஜ்ன பரிபாலன புரியிந்துன
40. விருத்த மெஞ்சின வாரிகி அனேகயஜ்ன விகாத ப்ரோஹ
41. பஃலம்
42. ஸ்ரீ விஜயரங்க சொக்க
43. நாதய்யவராலூ

## தமிழ் மொழி பெயர்ப்பு

சகவருட்டம் 1638 பாத்ரபத மாதம் அஷ்டமி நாள் அன்று ஸ்ரீ வீரபிரதாப வீர ஸ்ரீரங்கராயர் கனகிரி நகரத்தில் ரத்ன சிம்மாசனத்தில் இருந்து பிரிதிவி ராஜ்யம் செய்த போது காசியப கோத்ரம் சொக்கநாத நாயக்கர் பேரனும் ரங்க கிருஷ்ண முத்து வீரப்ப நாயக்கரின் மகனுமான விஜய ரங்க சொக்கநாத நாயக்கர் நவராத்திரி கொலு வீற்றிருந்தார். அரண்மனைக் குடிகளான வாணபட்டரை கற்பூர

செட்டிகள் நங்கபுரம் அன்கேமார நாயுடு, பர்ஹும் நாயுடி பாளையம் திம்ம நாயுடு, ஜெயமங்கலம் கஸ்தூரி நாயுடு, பெரட்டூர் ஸ்ரீரங்க நாயுடு, கொடுந்தர வடமல நாயுடு ஆகியோர் வாண வேடிக்கை செய்து காட்டினர். மன்னன் இதனைக் கண்டு சந்தோஷமாகி அவர்களுக்கு வெகுமானமாக ஸ்ரீரங்கம் திருமுகவாசல் ராயகோபுரத்துக்குக் கிழக்கே ஜம்புகேசு வரத்துக்கு (திருவானைக்காவல்) போகும் வழியில் 16கால் மண்டபத்திற்கு 180அடி ஆவல நகரிக்கு கிழக்கு 100 அடி பாதைக்கு வடக்கு பிரகாரத்திற்கு தெற்கு ஆகிய எல்லைகளுக்குள் அடங்கிய நிலத்தினைக் கற்பூர செட்டிகளுக்கு தானமாக வழங்கினான். அதனில் நந்தவனம் சலிபந்தல் (மடம்) முதலியன அமைத்துக் கொண்டு பரம்பரை பரம்பரையா அனுபவித்துக் கொள்ள தர்மசாதன பட்டயம் கொடுத்தான். இதற்குக் கைமாறாக அரண்மனைக்கு வெடிஉப்பு 100 மணு எடையும், சலிபந்தலுக்கு 15 மணுவும், நந்தவனத்துக்கு 15 மணுவும் ஆக 130 மணுகொடுக்க வேண்டுமென நிச்சயிக்கப்பட்டது. இந்த தர்மசாசனம் தளவாய் கோவிந்தய்யன் அனுமதிக்கிணங்க வெங்கட்டராமய்யா எழுதினார். இத் தர்மத்தைப் பாதுகாப்பவர்கள் எல்லா நற்பலன்களும் பெறுவார்கள். ஸ்ரீவிஜயரங்க சொக்க நாதய்யன் எழுத்து.

# 10. மதுரை ஆரப்பாளையம் செப்பேடு

*திருப்பரங்குன்றம் திருப்பணிக்கு குயவர் உறவின் முறையார் கொடை*

மதுரை ஆரப்பாளையம் இராமலிங்க சுவாமிகள் மடாலயத்தில் இச்செப்பேடு உள்ளது.

32 x 19 செ.மீ அளவும் 800 கிராம் எடையும் உடையது. இருபுறமுமாக 80 வரிகளில் வாசகம் பொறிக்கப்பட்டுள்ளது.

சகவருடம் 1682(கி.பி.1760), கலிவருடம் 4861 (கி.பி.1760), தமிழ் வருடம் விக்கிரம (கி.பி.1760) ஆகியவை குறிக்கப்பட்டுள்ளன. மதுரை நாயக்க மன்னர்கள் (கி.பி.1529-1736) அனைவரும் சொல்லப்பட்டு நாவணப்ப நாயக்கர் என்பவர் குறிப்பிடப்படுகிறார்.

இச்செப்பேடு மதுராபுரி முதலான 56 தேசத்தாரும் ருத்திரப்பச் செட்டியார், அழகப்ப செட்டியார், குமரன் சின்ன முத்தழகிரி செட்டி, பெரிய முத்தழகிரி செட்டி, வெங்கிடாத்திரி செட்டியார் ஆகிய உறவின் முறையாரும் மதுரையில் உள்ள குசவரில் சகல உறவின் முறையாரும் சேர்ந்து எழுதிய தீர்மாணமாகும். திருப்பரங்குன்றத்தில் திருப்பணி முடியும் நிலையில் இருந்தபோது தங்களுக்கான வரி வருவாய்களைத் திருப்பணிக்கு கொடுப்பதன்றும், மண்டப வரியாக ஒரு மண்பாண்டம் செய்யும் சக்கரத்துக்கு 5 பணம் வீதம் கொடுப்பதென்றும் முடிவு செய்து அதனை இப்பட்டயமாக எழு-தியுள்ளனர். பட்டய வாசகம் மதுரைக் கோயில் கணக்கரால் சொல்லப்பட்டு மங்கைபாக ஆசாரியால் பொறிக்கப்பட்டுள்ளது.

---

*கல்வெட்டு* இதழ் எண்.54, பிரமாதி பங்குனித் திங்கள் (2000, ஏப்ரல்) பக்.31-34. 'குயவர் செப்பேடு' என்ற தலைப்பில் கட்டுரையாக எழுதியவர் திரு செ. போசு , காப்பாட்சியர், மதுரை

## செப்பேடு

1. சுபஷ்த்திறி மன் மகா மண்டலேசுரன் அரிய
2. தழ விபாடணன் பாசைக்கித் தப்புவராய
3. கண்டன் மூவர்ராயிர கண்டன் கண்ட
4. நாடு கொண்டு கொண்டநாடு குடாதான்
5. பாண்டி மண்டலத் தபனாசாரியன் சோள
6. மண்டலப் பிரதாப னாசாரியன் தொண்ட
7. மண்டலச் சண்டப் பிறசண்டன் பூறுவ(தெ
8. ட்) தெட்சண பட்சம யுத்(கூ)தர யீளங் கொ
9. ங்கு மலையா[ள] முள்பட சேர சோழன்
10. பாண்டிய மும்மண்டல முதல் எம்மண்
11. டலமுந் திறை கொண்டருழிய ராசாதிராசன்
12. ராசபரமேசுரன் ராசாமாத்தாண்டன்
13. ராசகெம்பீரன் ராசகோலாகலப் பிர
14. லழகர் ராசமனோபயங்கரன் மன்னரில்
15. மன்னன் மன்னராட்டந் தவிள்த்தான் துட்
16. டரில்த் துட்டன் துட்ட நெட்டூரன் சம்மட்டி
17. நாறாயணன் வில்லுக்கு விசையன் சொல்லு
18. க்கு அரிச்சந்திரன் குடைக்கிக் கர்னண் பரிக்கி
19. நகுலன் வீராதிவீரன் வீரவிற்க்கிரமாதித்தன்
20. உக்கி(ர) மான வீரபத்திரன் கச ரத துரக பதாதி
21. யளும் கொண்டருழிய அருச்சந்திர தேவர் ம
22. காராயர் திருசங்கு மகாராயர் அருச்சந்திர
23. ராயர் விருப்பராயர் தேச தர்மகாராயர் தன்
24. மராயர் கிஷ்னர்ராயர் புசபலராயர் பறாக்கிரம
25. ராயர் வீரநரசிங்கராயர் விருப்பாச்சிராயர்

26. மல்லிகாச்சின மகாராயர் பிறவுடதேவர்[ம]
27. காராயர் கெசப்பதிராயர் அசுபதிராயராயர்
28. நரபதி ராயர் யெருதிபம ராயர் அச்சுதராயர்
29. கோவிந்தராய சீரங்க ராயர் நாகமனாயக்கர்
30. விசுவநாத(ர)ர் முத்துக் கிஷ்ணப்ப னாயக்கர் முத்து
31. வீரப்பனாயக்கர் வீரராகுவ நாயக்கர் திருமலை
32. நாக்கர்முத்து வீரப்ப நாயக்கர் சொக்கநாதர் நா
33. யக்கர் விசைய ரங்கக் கிஷ்ட்டிண முத்துவீர
34. ச் சொக்கலிங்க நாயக்கர் காமாட்சியம்மன் வர
35. ய்பிரசாத்தரான ணார்வணப்ப நாயக்கரய்யனவர்
36. கள் செங்கோல் நடத்தும் பிறிதிவிராச்சியங்
37. சாலிவாகன சகாப்பத்தம் ௲௬௱அ௰௨ க்கு மேல்
38. கலியுக சாந்தம் ௪௲அ௱௬௰௧ க்கு மேல் செல்
39. ல்லா நின்ற விக்கிறம ஸ்ரீ காற்கிகை மீ உ உ௰௬
40. உ மதுராபுரி முதலன் பத்தாரு தேசத்தாரும் ருத்
41. திரப்ப செட்டியார் அழகப்ப செட்டியார் குமரன்
42. சின்ன முத்தழகிரி செட்டி பெரிய முத்தழகிரி செட்டி
43. வெங்கிடாத்திரி செட்டியாருள் பட்டாரு ஏம
44. ன் மதுராபுரியிலிருக்கும் சோமான் குசவரி
45. ல் பாநதாங்கி வேழான் ஒ எட்டு ஒடயர் வே
46. ளான் நிம்மா செட்டி வேளான் சொக்கநா
47. த வத்தியர் உள்பட உறவின் முரையார் சகல
48. சனங்களுக்கும் தற்மசபால சாதனப் பட்டையம்
49. எழுதிக் கொடுத்தபடி திருப்பறங்கிரியில் திருப்
50. பணி கட்டி முகிப்பிக்கிற படியினாலே அந்தத்தி[ருப்]
51. பணிக்கி தங்கள் வளியில்க் குசவர் சருவ
52. த்திராளுக்கும் நமக்குண்டான வரியிரையாதி

53. ந்தமும் விட்டு கொடுத்து சருவமானுபம் பண்ணி
54. விச்சபடியிநாலே தங்களுக்குள்ள வரி எல்லா
55. ம் திருப்பணிக்கிக் கொடுத்துக் கொண்டு மேல்ப்ப
56. டி மண்டப வரி நாலு தேசத்து உறவின் முறையா
57. ரனவரும் சக்கரத்துக்கு அஞ்சுபணம் குடுத்து சு
58. வாமி காரியத்துக்கு அட்டி சொல்லாமல் குடுத்து
59. நடத்து விப்பற[ா]கவும் மதுரபுரியில்த் தங்களுடன்
60. பங்காழி பண்டிக் குசவ ரொப்பந்தம் நடந்துகொள்
61. வராகவும் இந்த படிக்கு பட்டணசாமி வரி சறுவ மாணியப்பம
62. ாய் திருப்பணிக்கி விட்ட படியிநாலே சந்திறாதிர சந்
63. திரப் பிறவேசவரையும் கல்லும் காவேரியும் புல்லு
64. ம் பூமியுமுள்ள வரைக்கும் சறுப மாணிப உம்பள
65. மாய்த் திருப்பணிக்கி முதலிட்டுக் கொண்டு வருவா
66. ராகவும் யிந்தப் படிக்கித் தேசத்தாருமருகிறாப்ப செட்டி
67. யாரும் அழகப்ப செட்டியும் மேன்பாநதாங்கி வேள
68. ான் ஒட்டு உடையன் வேளாள் நிம்ம செட்டி வேளான் சொ
69. க்கநாத வத்தியாருள்பட்ட நாலு தேசத்து உரவின் முறையார்
70. அனைவருக்கும் சருவ மானிப சாதனப் பட்டயம் எளு
71. திக் கொடுத்தோம் யிந்த தர்ம்ம காரியம் வரியிறை
72. க்கி யாதாமொருத்தரடிமியளித்த துண்டானால் கெங்க க
73. ரையிலே காரம் பசுவை கொண்ட தோசத்திலேயும்
74. இந்தக் கரையிலே பிறாமணரைக் கொண்ட தோசத்திலே
75. யும் மாதாபிதாவைக் கொண்ட தோசத்திலேயும் போ
76. வாராகவும் யிந்தப் படிக்கி மீனாட்சியம்மன் சுந்த
77. ரேசுரர் காமாட்சியம்மன் மத்தியாய் மதுராபுரி
78. யில்க் கோவில்க் கணக்கு விளுப்பராய(ா)ர் சொல்ப்ப
79. டிக்கி மங்கபாக ஆசாரி எழுத்தினது உருத்திரப்ப
80. செட்டியார் அழகப்ப செட்டியார் ஒப்பம் உ.

# 11. சந்தையூர் செப்பேடு - 1

*காவல் நாட்டாண்மைக்குப் பட்டயம்*

மதுரை மாவட்டம் பேரையூர் வட்டம் சந்தையூரில் உள்ள தலையாரி திரு. வேல்சாமி மூப்பன் அவர்களிடம் உள்ள இரு செப்பேடுகளில் இது ஒன்று.

22 x 14செ.மீ அளவுள்ள இச்செப்பேடு தலைப்பகுதியில் துளையுடன் கூடிய அரை வட்ட அமைப்புடையது. முன்பக்கம் 35 வரிகளும் பின்பக்கம் 15 வரிகளுமாக 50 வரிகளில் வாசம் பொறிக்கப் பட்டுள்ளது.

செப்பேட்டில் தமிழ் வருடம் ராக்ஷச (ராச்சித) குறிப்பிடப் படுகிறது. மன்னர் பெயர் இல்லை. பாளையப்பட்டு கூளப்பநாயக்கர் பெயருள்ளது. ராணுவம், மணியக்காரர், சங்கிலி அளவு (Chain) ஆகிய ஆங்கிலேயர் காலச் சொற்கள் பயின்று வருகின்றன. கி.பி.17ஆம் நூற்றாண்டுச் செப்பேடாகக் கருதலாம்.

சந்தையூர் சலுப்ப பெத்தண்ண செட்டி அதிகாரம் (துரைத்தனம்) செய்து வந்தபோது அவனிடம் மாதம் 9 கலம் தானியக் கூலிக்கு வீரண்ணசேறுவை காவல்பணி செய்துவந்தான். சந்தையில் இருவருக்கும் சச்சரவு (சல்லியம்) ஏற்பட்டு வீரணன் சேர்வை சலுப் பெத்தண்ணனின் தலையை வெட்டி, ரத்தக்கைகளோடு இரவு நடுசாமத்தில் கூளப்ப நாயக்கர் முன்கொண்டு வந்து வைத்து சந்தையூரை கூளப்ப நாயக்கரின் பாளையப்பட்டு ஊராக்கினான். கூளப்ப நாயக்கரும், ராணுவமும் மகிழ்ந்து அவனுக்கு சத்தையூரைச் சேர்ந்த 18 பட்டி காவல் நாட்டாண்மை அளித்தனர். அவனது சாதி கம்பளக்காறனாகவும், தென்மலை குத்தகை, சாதிக் கம்பளக்காறனாகவும்

---

*கல்வெட்டு* இதழ் எண்.65, தாரண - மார்கழித் திங்கள் (ஜனவரி 2005) பக்.14-18. 'சந்தையூர் செப்பேடுகள்' என்ற தலைப்பில் கட்டுரையாக எழுதியவர்கள் திரு பொ. இராசேந்திரன், முனைவர் வெ. வேதாசலம், கல்வெட்டாய்வாளர்கள், மதுரை.

அங்கீகரித்து பட்டயம் எழுதிக் கொடுத்தனர். கூளப்ப நாயக்கர் பாளையப்பட்டு ஏரிகள் (கண்மாய்) பாசனத்தில் 30 கலம் விதைப்பாடு நஞ்சை நிலமும் 60 சங்கிலி புஞ்சை நில்மும் தரப்பட்டது. 18 பட்டி கிராமத்து வீடுகள் ஒவ்வொன்றும் 1 பணம். 3 குறுணி தானியம் தருவதென்றும். ஆடு உள்ளவர்கள் 1 கிடாய் தருவதென்றும். அரண்மனைக்கு அடுத்து இரண்டாவதாக. இவனுக்கு கோயில்களில் தீர்த்தம் திருமாலை தருவதென்றும முடிவாயிற்று.

சாட்சிகள். பட்டயம் எழுதியவர் பெயர்களும் ஓம்படைக்கிளவியில் சதிரகிரி சிவன், பெருமாள் கோயில்களும் சொல்லப் பட்டுள்ளன.

## செப்பேடு

### முன்பக்கம்

1. உ கிருஷ்ண
2. சகாயம்
3. றாச்சித ஸு ஆவணி மீ சந்தையூ
4. ரில் சலுப்ப பெத்தண்ணசெட்டி துரத்
5. தனம் பணம் பண்ணிக் கொண்டிருந்தா
6. ன் அவனிடத்தில் வீரண்ண சேறுவைகாற
7. ன் மாசம் களத் தவசத்துக்கு காவல்க்காறனா
8. க யிருந்தான் அப்போது சந்தையில் சலு
9. ப்ப செட்டிக்கும் வீரண்ணசேறுவைகாற
10. னுக்கு சல்லியம் வந்திது அப்படி ஒருனா
11. ள் வெள்ளிக்கிழமைத் தினத்தில் நடுச்சா
12. மத்தில் சலுப்பனை வெட்டி பச்சைக்கறங் கெ
13. ாண்டு ஒன்பது கம்பளம் கூளப்ப னாக்க
14. றிடத்தில் வய்த்து பட்டங்கட்டி கய்யெடுத்த
15. ான் சபையைப் பெருக்கி கூளப்பனாக்கற்
16. ரென்று பட்டங்கட்டி பாளையப்பட்டு ஊ(ற்)

17. றும் உண்டாக்கினான் வீரணன் சேறுவை
18. காறன் - கூளப்பனாக்கற் அரமனையாருக்கும் ஒ
19. ன்பது கம்பளத்துக்கும் - றாணுவத்துக்கு சந்தோ
20. சமாகி உனக்கு என்ன வேணுமென்று கேட்
21. டாற்கள் வீரணன் சேறுவைகாறன் சொ
22. ன்னது சந்தையூற் கூளப்பனாக்கரை சேர்
23. றந்த பதினெட்டுப்பட்டிக்கும் காவல் நாட்டா
24. மை சேறுவை என சாதிக் க்ம்பளிக்காறனாகவும்
25. ஷெ மலையில் தென்மலைக் குத்தகை க
26. ம்பளி-யிப்படி சாதினப்பட்டயத்துக்கு
27. உத்தறவாக வேணுமென்று கேட்டான் அந்த
28. ப்படிக்கி உத்தறவு குடுத்தாற்கள் யிந்த மூன்
29. ன்றுவகைக்கி மானிபம் நஞ்சை கூளப்பனாக
30. ற் பாளையப்பட்டைச் சேற்ந்த கம்மாயில்
31. ҧய கலம் - விரைப்பாடு பிஞ்சை கூய சங்கி
32. லி யிதுவும் காவலுக்கு விபறம் கூளப்பனா
33. க்கரைச் சேற்ந்த பதினெட்டுப்பட்டி கிறாமத்தி
34. லுள்ள குடியனாவன் கட்டின வீட்டுக்கு பணம் க
35. முக்குறுணி தானியம் ஆடு வச்சிருக்கப்பட்ட

பின் பக்கம்

36. வன் கும்பக்கு கிடாயி
37. தீத்தம்-திருமாலை காச்சி வருமானம் - அர
38. மனைக்கி முன்னையும் ரெண்டாவது வீரன
39. சேருவைகாறனுக்கு யிந்தப்படி வருசா
40. ந்திரம் நடக்கும்படிக்கி சாதினபட்டயம் எ
41. முதிக் குடுத்தது யிந்தப்படிக்கி றாசமனிய ஸ்ரீ
42. ரி கூளப்பனாக்கறவர்கள் கய்யி ஒப்பம்

43. யிதற்கு சாட்சி கணக்கு சுந்தரம்பிள்ளை ௨
44. சாச்சி கம்பளத்து பெரியமுத்து னாக்கற் -௩-
45. சாச்சி-சிவலிங்கம் மணியகாறன் யிளை
46. த யாதாமொருதற் அடி அடி அளித்தால்
47. சதிரகிரி சுந்தரமகாலிங்கம் கிஷ்ட்ட
48. ணமூர்த்தி கேள்ப்பாற் யிந்தப் பட்டயஞ்
49. செய்தவன் கானுசாபறம் ஆசா
50. ரி வேணுங் காமாட்சி அம்மம் துணை ௨.

# 12. சந்தையூர் செப்பேடு - 2

*வலையன் மூப்பன்மார் சாதி பட்டத்து மூப்பன் மரியாதை பட்டயம்*

மதுரை மாவட்டம் பேரையூர் வட்டம் சந்தையூரில் உள்ள தலையாரி திரு. வேல்சாமி மூப்பன் அவர்களிடம் உள்ள இரண்டு செப்பேடுகளில் இது இரண்டாவது செப்பேடாகும்.

22 x 14செ.மீ அளவுள்ள இச்செப்பேடு தலைப்பகுதியில் துளையுடன் கூடிய அரைவட்ட அமைப்புடையது. முன்பக்கம் 33 வரிகளும் பின்பக்கம் 13 வரிகளுமாக மொத்தம் 46 வரிகளில் வாசகம் பொறிக்கப்பட்டுள்ளது.

செப்பேட்டில் தமிழ் வருடம் ராக்ஷச (ராச்சிதா) மற்றும் மன்னர் திருமலை நாயக்கர் (கி.பி.1629-1659) பற்றிய குறிப்புகள் உள்ளன. இம்மன்னர் காலத்தில் ராக்ஷச தமிழ் வருடம் வரவில்லை. எனவே அவருக்குப் பின் கி.பி.1675ல் வந்த ராக்ஷச வ்ருடமாக இதனைக் கொண்டு அவருக்குப் பின் இச் செப்பேடு எழுதப்பட்டதாகக் கொள்ளலாம்.

திருமலை நாயக்கர் சந்தையூர் கிருஷ்ணர் கோயிலுக்கு வந்தபோது கூளப்பநாயக்கரும், வீரணன் சேருவையும் பாதகாணிக்கை வைத்து வணங்கி மரியாதை செய்தனர். வீரணன் சேர்வைக்கு 18 பட்டி கிராம காவல் நாட்டாண்மை, சாதி கம்பிளிக்கார அதிகாரம் ஆகியவை முன்பு கூளப்ப நாயக்கனால் தரப்பட்டிருந்ததை திருமலை நாயக்கரும் ஏற்று உறுதிசெய்தார். கூடலூர் கம்பம், உத்தப்ப நாயக்கன் வெள்ளைமலை, மதுரை மேலவாசல் ஆகிய எல்லைக்கு

---

*கல்வெட்டு* இதழ் எண்.65, தாரண - மார்கழித் திங்கள் (ஜனவரி 2005) பக்.14-18. 'சந்தையூர் செப்பேடுகள்' என்ற தலைப்பில் கட்டுரையாக எழுதியவர்கள் திரு பொ. இராசேந்திரன், முனைவர் வெ. வேதாசலம், கல்வெட்டாய்வாளர்கள், மதுரை.

உட்பட்ட வலையன் மூப்பன்மார் வாழும் பகுதிக்கு வீரணன் சேருவை சாதி மூப்பன் எனப் பட்டம் கொடுத்து அவ்வூர்களில் தீர்ப்புச் சொல்ல கம்பளி விரித்து பிடி செம்புடன் அமரும் அதிகாரமும் வழங்கப்பட்டது. அப்படி அமரும்போதும் தீர்ப்பளித்து எழும் போதும் அவருக்கு தட்டில் வெற்றிலைப் பாக்குடன் 5 பணம் வைத்து மரியாதை செய்ய வேண்டும் என்றும் உறுதி செய்யப்பட்டு பட்டயம் வழங்கப்பட்டது.

சாட்சிகள், பட்டயம் எழுதியவர் பெயர்களும் ஓம்படைக் கிளவியில் சதுரகிரி சிவன், பெருமாள் கோயில்களும் சொல்லப்பட்டுள்ளன.

## செப்பேடு

1. உ கிருஷ்ண
2. சகாயம்
3. றாச்சித ஷ ஆவணி மீ ஸ்ரீமது
4. து மதுறாபுரித் தலத்துக்கு கற்த்தறாகிய மகறா
5. ச மானிய ஸ்ரீரி திருமலைனாயக்கரவர்கள்ச்
6. சந்தையூர் கிருஷ்ட்டண சுவாமி கோவிலில்
7. சீமை பாற்க்க வந்திரங்கி யிருந்தார்கள் அ
8. ப்போது றாசமானிய ஸ்ரீரி சந்தையூர் கூளப்
9. பனாக்கரும் - வீரணன் சேருவைகாரனும் படி
10. பாற்க்கிலை பாதகாணிக்கை ரூய பொன்
11. வச்சு கண்டு கொண்டார்கள் றாசா சந்தோச
12. மாகி என்ன விபரமென்று கேட்டார் அப்பே
13. ாது கூளப்பனாக்கர் அரமனையாறும் வீரண
14. ன் சேறுவைகாரனும் - முன் சந்தையூர் கூள
15. ப்பனாக்கரை உண்டு பண்ணின விபரங்களைச்
16. சொன்னார்கள் சொன்னதின் பேரில் றாசா
17. சந்தோஷமாகி ஷெயான் சாதிக்கி பட்டத்து மூப்
18. பனென்றும் - சாதிக் கம்பளிக்கார னென்
19. றும் - சாதிக் கம்பிளிப் பட்டயத்துக்கும் ஊறு

20. ப் பதினெட்டுப்பட்டி கிறாமத்து தலங்காவல்
21. ப் பட்டயத்துக்கும் உத்தரவாச்சுது ஷெயான் சா
22. தி வலையன் மூப்பன்மாா் யிருக்கப்பட்ட யிட
23. த்துக்கு மால் மதுரை மேலவாசல் வரைக்கும்
24. வடக்குமால் உத்தப்பனாக்கன் வெள்ளைம[ா]லை
25. வரைக்கும் மேற்க்குமால் கூடலூா் கம்பத்து வ
26. ரைக்கும் யிந்த பூமிகளில் உள்ள வலை
27. யன் மூப்பன்மாா் சாதிக்கிப் பட்டத்து மூப்பன்
28. னே கம்பிளி போட்டு பிடி செம்பும் வய்த்து உ
29. ளுக்காந்தால் தலைகட்டுக்கு ௰௫ பணம் வச்சு
30. க் கண்டு கொள்கிரது எந்திரிக்கும் போது
31. ௰௫ பணம் தட்டு பாற்க்கு வெத்திலை வச்சு கும்பி
32. ட்டு எளுப்பவும் யிந்தப்படிக்கி ஆடி தீவாளிக்கி
33. கும்புக்கு கிடாயிக் குடுக்கவும் யிந்தப்படிக்கி

பின்பக்கம்

34. எங்கள் மனறாசியால் எழுதிக் குடுத்த சா
35. தனப்பட்டயம் யிந்தப் படிக்கி கா்தறாகிய
36. திருமலை னாயக்கரவற்கள் திருக்கறத்தினால்
37. ஒப்பம் யிந்தப்படிக்கி சந்தையூா் கூளப்
38. பனாக்கா் கய்யில் ஒப்பம் யிதை யாதாமொரு
39. ருதா் அடிஅளித்தால் சதிரகிரி சுந்தரம
40. காலிங்கம் கிருஷ்ட்டணமூற்த்தி கேள்ப்ப
41. ாா் யிதற்கு சாட்சி சந்தையூா் கணக்கு சுந்
42. தரம்பிள்ளை -உ- சாட்சி கம்பளத்து பெரியமு
43. த்து னாக்கா் -ரு- சாட்சி சிவலிங்க மணியகா
44. ரன் யிந்தப் பட்டயஞ் செய்தவன் கானுச
45. ாபறம் சுந்தரம் ஆசாாி உ வேணுங்
46. காமாச்சி அம்மன் துணை ௨.

# 13. வேளான்தரவை - இளமநேரி செப்பேடு

## *சேர்வைக்காரருக்கு வலையர் எழுதிக் கொடுத்த பளிக்காணி பட்டய சாதனம்*

இச்செப்பேட்டில் கலிவருடம் 4792 (கி.பி.1691) சகவருடம் 1613 (கி.பி.1691) தமிழ் வருடம் பிறசோறப்பத்தி (கி.பி.1691) ஆகியவை குறிக்கப்படுகின்றன. மன்னன் இரகுநாத சேதுபதி (கி.பி.1691) குறிக்கப் படுகின்றார்.

வேளான்தரவை வீரமூப்பன் மகன் பிள்ளை வீராயி இளமநேரியில் தன்பெற்றோருடன் வசித்தபோது இளமநேரி நயினு குட்டி சேர்வைக்காரனுடன் கள்ள உறவு கொண்டு கர்ப்பமடைந்தாள். திருமணமாகாத அவள் கர்பமடைந்ததை அவளது சாதியாரும் பெற்றோரும், சகோதரர்களும் கண்டித்துக் கேட்டபோது தன் உறவினை வெளிப்படுத்தியதோடு பிறகு தன்னுயிர் மாய்த்துக் கொண்டாள். அவளது சாதிக்காரர்கள் அரசரிடம் நயினுகுட்டி மீது குற்றம் சுமத்தி நீதிகேட்டபோது குற்றம் ஏற்கப்பட்டு பதிலுக்கு பலி கொடுப்பது என முடிவாகியது. நயினுகுட்டி தங்கை உடையக்காள் பலிக்கு பலியாக நிச்சயிக்கப்பட்டு வீராயி உடல் தகனம் செய்யப்பட்ட இடத்தில் மற்றொரு தீமூட்டி உடையக்காளைப் பலியாக உயிரோடு ஏற்றினர். இச்சமயத்தில் வலையர்களாகி மூப்பன்மார்கள் அவளை எரிக்க வேண்டாம் என முடிவு செய்து தங்கள் சாதியில் ஒரு பிள்ளையாக ஏற்றுக்கொண்டனர்.

சாதி பிள்ளை வழியினருக்கு கலியாணத்திற்கு 7 பணம், 50 பாக்கு, 1 குறுணி அரிசி, 1 கிடாய் குரங்கு கொடுப்பது என்றும்; தாலிக்

---

*கல்வெட்டு* இதழ் எண்.22 சுக்கில ஆண்டு வைகாசித் திங்கள் (மே 1989) பக்.17-24. 'பளிசாதனப்பட்டயம்' என்ற தலைப்பில் கட்டுரையாக எழுதியவர், டாக்டர் எஸ்.எம். கமால், இராமநாதபுரம்.

கட்டுக்கு 5 பணம், 30 பாக்கு, 3 படி அரிசி, 1 கிடாய் குரங்கு கொடுப்பது என்றும்; சடங்குக்கு 3 பணம், 15 பாக்கு, 3 படி அரிசி, 1 கோழி கொடுப்பது என்றும்; இதுபோல் மேலும் ஆண்டுதோறும் கொடுப்பவை. சாதியில் விவகாரம் ஏற்பட்டால் தீர்ப்பது. சேராசேர்க் கைக்கு தீர்வை. வாரிசு இல்லாமல் இறந்து போனால் சடங்கு செய்வது போன்றவையும் நிர்ணயிக்கப்பட்டு இப்பட்டயம் எழுதப்பட்டுள்ளது. இம் முடிவுகளை கூடி எடுத்தவர்கள் வலையரில் 8 கிளையினர் ஆவர்.

## செப்பேடு

இராமஜெயம்

1. சுபஸ்ரீ ஸ்ரீமது மாகமண்டலேசுபரன் அரியாயிர தள விபாடன் பாசை
2. க்கு தப்புவராத கண்டன் கண்டநாடு கொண்டு கொண்ட நாடு குடா
3. தான் பாண்டி மண்டலப் பிரதாபாசாரியான் சோள மண்டலப் பிறதி
4. ஷ்ட்டாச்சாரியான் தொண்ட மண்டலப் பிறசண்டன் ஈளமுங் கொ.
5. ங்கும் யாள்ப்பாணமும் அளித்து கெசவேட்டை கொண்டருளி
6. ய ராசாதிராசன் ராசபரமேசுரன் ராசமார்த்தாண்டன் ராச கெம்பீ
7. ரன் இளசிங்கம் த்ளசிங்கம் தொட்டியர் மோகந் தவிள்த்தான் துலு
8. க்கர் மோகந்தவிள்த்தான் எட்டன் தலையில் கட்டும் விருதைக் கா
9. விலே கட்டுங் கலங்காத கண்டன் தாலிக்கு வேலி சத்திராதிகள் மு
10. ண்டன் சொரிமுத்து வன்னியன் சேதுகாவலவன் அடைக் கலங்
11. காத்தான் சேதுமுல துரந்தரன் இராமநாதசுவாமி காரிய துரந்தர

12. ன் சிவபூசா துரந்தரன் இரணிய கெற்ப ரவிகுல திலகன் சாமித்துரோ
13. தர் வெண்டயம் விளங்கும் யிருதாளினான் அனுமக் கொடி கெரு
14. ட கொடி சேவல்க்கொடி உடையான் தொண்டியன் துறை கா
15. வலன் செம்பிவளநாடாதிபன் பூலோக தெய்வேந்திரன் வில்லு
16. க்கு விசையன் சொல்லுக்கு அரிச்சந்திரன் குடைக்கு கர்ணன் பஞ்
17. ச பாணா வுதாரன் வீரலெட்சுமி விசைய லட்சுமி ராசலட்சுமி சா
18. ம்பிருட் செயலட்சுமி அஷ்ட்டலட்சுமி வாசன் பஞ்ச வர்ணப் பாவாடை
19. விருதினான் செங்காவிக்கொடி உடையோன் மலைகலங்கினும்
20. மனங் கலங்காத கண்டன் சிவசமய பரிபாலநன் அசுபதி கசபதி நரபதி
21. தேவை நகராதிபதியான ரகுநாத சேதுபதி ராச்சி பரிபாலன
22. ம் பண்ணியருளா நின்ற கலியுகம் 4792 சாலிய வாக
23. ன சகாப்தம். ஹு 1613 மேல் செல்லா நின்ற பிரசோற்பதி
24. ஹு வைகாசி மீ 17 உ இளமநேறியிலிருக்கு நயினுகுட்டி சேருவைகார
25. னுக்கு வலையரில் ராதான் கிளை பூச்சிக் கிளை பட்டங்கட்டி கிளை வீரப்பிள்ளை கிளை படை
26. யன்கிளை அய்வன்கிளை கோணாண்டி கிளை வதிபிடிங்கி கிளை இந்த எட்டு
27. க்கிளையிலுச் சேர்ந்தி மூப்பமார் வேளாந்தரவை பெரிய வீரமூப்பன் சி
28. ன்னு மூப்பன் குவன்குளி அரங்கக் கிளவன் மடத்துடையான் மூப்பன் நெ

29. டு உடையான் மூப்பன் சக்கரைக் கோட்டை வீராண்டி மூப்பன் கருப்ப

30. ட்டிக் கிளவன் காஞ்சானூரணி காஞ்சான் மருங்கன் பெருவயல் பிச்

31. ச மூப்பன் சிட்டாரு கோட்டை வீரமூப்பன் அத்தியூத்து பெரிய குப்பா

32. மூப்பன் சின்னக்குப்பா மூப்பன் ஆண்டிக் கறுப்ப மூப்பன் அளகாங்

33. குளம் நொண்டி முட்டக் கிளவன் ராமப்பன் மெய்யமூப்பன் ஆத்தங்கரை

34. ச் சின்னச் சருக்கான் பெரிய சருக்கான் கறுத்தப்பயல் மாகாளி எண்மண்ட

35. லங்கொண்டான் தில்லாமூப்பன் கோடிக்காக் கிளவன் கறுப்ப மூப்பன்

36. தாமரைக்குளம் நம்பியா மூப்பன் கறிதின்னி குப்பா மூப்பன் இருட்டூரணி

37. ஒச்சி மூப்பன் ஒய்யா மூப்பன் பட்டாணி மூப்பன் பிலிச்சான் மூப்

38. பன் வெள்ளைய மூப்பன் நாகாச்சிக் கறுப்ப மூப்பன் கோனு டையா மூப்ப

39. ன் வேதாளை தூங்க மூப்பன் சுந்தரதாசி மடம் சடைய மூப்பன் ராமீசுரம்

40. மாகாளி மூப்பன் ராமு மூப்பன் தினைக்குளம் ராக்க மூப்பன் மோருக்குள

41. ம் வலைக் காவல்க்கார மூப்பன் ஏறுபடி அனக மூப்பன் மடத் துடையா மூப்ப

42. ன் வேம்பாறு மாரி மூப்பன் திருப்பாலைக்குடி கூத்த மூப்பன் வனாதி கறுப்ப மூ

43. ப்பன் மங்கலக்குடி சின்ன மெய்ய மூப்பன் சுந்தர பாண்டியன் பட்டண

44. த் துள்ளுக்குட்டி மூப்பன் நாங்களனைவோருந் தங்களுக்கு பளிக் காணி

45. க்கு எழுதிக் குடுத்தபட்டைய சாதனமாவது வேளாந்தரவை வீரமூ

46. ப்பன் மகன் பிள்ளை வீராயி தங்கள் வளவில் சிறுபிள்ளை யில் விந்து

47. சேந்திருந்ததி அந்த பெண்ம் பிள்ளை பெரிய பிள்ளையாய் ருதுவ

48. ாகி சாதியில் கட்டிக் குடாமலிருக்கையில் வயத்தில் கெற்பமாய்

49. ருந்தது அதுகாரியம் தாய் தகப்பன் அண்ணன் தம்பி சாதியார்

50. அரிந்து அந்தப் பெண்ம் பிள்ளை கண்டிச்சு கேள்க்கு மிட

51. த்தில் அந்த பெண்ம் பிள்ளை சாதியாரிடத்தில் சொன்னது நயினுக் குட்டி

52. சேருவைக்காரனூடனே கூடி வயத்திலே கெற்பம் வந்த தென்று ருசுவுட

53. னே சொன்னாள் அவளைச் சாதியார் தெண்டினை பண்ண உடனே உயிர்வ

54. த்தைப் பண்ணிப் போட்டு நயினுக்குட்டி சேருவைக்காரனை பளிக்குப் பளி குடு

55. வென்று துரையவர்கள் சமூகத்தில் கொண்டு போய்விட்டு துரையவர்

56. களும் ஞாயத்தை விளங்கி நயினுக்குட்டி சேருவைக் காரனை பளிக்கு பளி குடுக்கச்

57. சொல்லி உத்தரவாகி அந்தப்படிக்கு மரணமான வலைப்பிள்ளை ஒரு கட்

58. டையிலும் நயினுகுட்டி, சேருவைக்காரன் தங்கச்சி உடையக் காளை ஒ

59. ரு கட்டையிலும் வைத்து தீய் வைத்தார்கள் கட்டையும் மெரி தீயும் வய்த்த ே

60. பாதே எங்களுக்கு ப்ளிக்குப்பளி வந்ததென்று உடையக்காளைக் கட்டையை

61. வீட்டுக் கீளே இரக்கிவிட்டு நம்மட பிள்ளைக்குப் பிள்ளை வந்ததென்று மூ

62. ப்பமார் ஒப்புக்கொண்டு வலையர் எட்டுக் கிளைக்கு சாதிப் பிள்ளை யென்று

63. பேருங் கொடுத்து எட்டுக்கிளை மூப்பமாருங்கூடி சாதிப் பிள்ளையாகிய உடை

64. டயக்காளுக்கு பளிக்கு எழுதிக் கொடுத்த சாதனப்பட்டைய மாவது யெ

65. ங்கள் சாதியில் கலியாணத்துக்கு ஏழு பணமு அன்பது பாக்கு குறுணி

66. அரிசியும் ஒரு கிடாய் குரங்கு கட்டு தாலிக்கு அஞ்சு பணமு முப்பது பாக்கு மூணு

67. படியரிசியு ஒரு கிடாய் குரங்கும் சடங்குக்கு மூணு பணமும் பதினஞ்சு பாக்கு

68. ம் மூணு படி அரிசியும் ஒரு கோளியும் குடுக்கிறது அதுவும் வலையர் குடி ஒண்

69. ணுக்கு வருஷ கட்டளை ரெண்டு பணமு மூணு படி தவசமு கைம் பெண் குடி ஒண்

70. ணுக்கு ஒரு பணமு ஒரு படி தவசமு யிந்தப்படி குடுக்கிறது எங்கள் சாதியி

71. ல் விவகாரம் வியாக்கியங்கள் வந்தா சாதிப்பிள்ளையை வைத்து கொ

72. ண்டு மூப்பமாரு கூடயிருந்து விபகாரங் கேட்டு குத்தஞ் சுமத்தி யானயிடத்தில் அ

73. பராதம் வாங்கிற பணம் சாதிப்பிள்ளையைச் சாருகிறது புருஷன் பெண்சாதி சே

74. ராச்சேர்கையாயிருந்து தீந்து போடுகிறதா யிருந்தால் தீருவை சூய

75. ரண்டாம் தீருவை முப்பது பணமும் தீருவை சார்ந்த பேருக்கு குடுத்து விடுகிறது.

76. அபராதப்பணம் சாதிப்பி[ள்]ளையைச் சாருகிறது வலையரில் பி[ள்]ளையில்

77. லாமல் போனாலும் தாயாதி பங்காளிக ளில்லாமற் பேனாலும் உரு

78. மைக்காரர் ஒருவருமில்லாதவர்கள் மரணமானால் சாதிப் பிள்ளை முன்

79. கை சிரைத்துக் கருமம் பண்ணுகிறது அவனுடைய ஆஷ்தி சாதிப்பிள்ளையைச்

80. சாருகிறது யிந்தப்படிக்கு நாங்கள் எட்டுக் கிளை வங்கிஷ மூப்பமாருங்கூடிச் சா

81. திப்பி[ள்] ளைக்கு பளிச்சாதனப்பட்டைய மெழுதிக் கொடுத்த படியினாலே பட்

82. டையத்தி லெழுதியிருக்கிற பிரகார மாதித்த சந்திர பிரபை யுள்ளவரைக்கு

83. ஆண்டனுபவித்துக் கொள்வாராகவும் இதற்கு யாதா மொருவர் தடங்கல்

84. பண்ணினார்களேயானால் அவர்கள் கங்கைக் கரையிலே காராம் பசு

85. வைக் கொன்ற தோஷத்திலும் தனுக்கோடிக் கரையிலே பிராமண வதை

86. பண்ணின தோஷத்திலும் மாதா பிதாவைக் கொன்ட தோஷத்திலும் போக

87. க் கடவாராகவும் உ இராமநாத சுவாமி துணை வ

# 14. வெள்ளிக்குறிச்சி செப்பேடு

*பண்டாரம் உறவின் முறையினரின் சாதி ஒழுங்குப் பட்டயம்*

சிவகங்கை மாவட்டம் திருப்பூவனம் அருகில் உள்ள வெள்ளிக்குறிச்சியில் இராமலிங்கபண்டாரத்தின் பேரனும் ஜெகநாத பண்டாரத்தின் மகனுமான திரு அம்மையப்ப பண்டாரத்திடம் இச்செப்பேடு உள்ளது.

35X38 செ.மீ அளவுள்ள இச் செப்பேட்டில் ஒரு பக்கம் மட்டும் 69 வரிகளில் வாசகம் பொறிக்கப்பட்டுள்ளது. தொடக்கத்தில் ஓம் எனப்பொறிக்கப்பட்டு அதனுள் சிவலிங்க உருவம் கோட்டுவமாக உள்ளது.

செப்பேட்டில் சக வருடம் 1561 (கி.பி1639), தமிழ் வருடம் ரௌத்திரி (கி.பி.1620 அல்லது 1680) ஆகியவை குறிக்கப்பட்டுள்ளன. இவை ஒன்றுடன் ஒன்று பொருந்தி வரவில்லை. செப்பேட்டின் தொடக்கத்தில் 'சேதுபதிநாதராகிய கூத்தநாதய்யர்' குறிக்கப்படுகிறார். இறுதிப் பகுதியில் 'முத்துவிசய ரகுநாதரான கன்றுமேய்க்கி உடையார்' சேதுபதி சொல்லப்படுகின்றார். கிழவன்சேதுபதி (கி.பி.1674-1710), அடுத்துவந்த கூத்தன் சேதுபதி, அவரது தம்பி தளவாய் ரகுநாதசேதுபதி ஆகியோராக இவர்களைக் கருதலாம். இச் செப்பேட்டில் 'ரூபாய்', 'கும்பினியார்' ஆகிய சொற்கள் உள்ளன. ஆங்கிலேயரின் கிழக்கிந்தியக் கம்பெனி நிர்வாகமே 'கும்பினி' என்று குறிக்கப்படுகிறது. எனவே இச்செப்பேடு 18ஆம் நூற்றாண்டினது என்று கருதலாம்.

---

*கல்வெட்டு* இதழ் 50-51, ஈஸ்வர ஆண்டு சித்திரை, ஆடித் திங்கள் (1999 ஏப்ரல், ஜூலை) பக்.61-69 'வெள்ளிக்குறிச்சி - பண்டாரம் உறவின் முறைச்செப்பேடு' என்ற தலைப்பில் கட்டுரை எழுதியவர் திரு.மா. சந்திரமூர்த்தி, பதிவு அலுவலர், சென்னை.

சேதுபதி சீமையான பழைய இராமநாதபுரம் திருநெல்வேலிப் பகுதிகளில் உள்ள 69 ஊர்களும், இவ்வூர்களின் பிரதிநிதிகளாக ஒவ்வொருவர் பெயரும் சொல்லப்பட்டு இவர்கள் அனைவரும் இணைந்து ஒப்பந்தமுறி எழுதியதாக இச்செப்பேடு குறிக்கிறது. இப்பிரதிநிதிகளின் பெயர்களில் ஆண்டி, பண்டாரம், புலவர் ஆகிய பின்னொட்டுச் சொற்கள் மிகுதியாகக் காணப்படுகின்றன.

இச்செப்பேடு பண்டாரம் உறவின் முறையினர் தங்களுக்குள்ளான திருமண நெறிமுறைகள், திருமண முறிவு நெறிமுறைகள் குறித்து எழுதிய தீர்மானமாகும். கணவன் மனைவியின் இடையே ஏற்படும் பிணக்குகளும் அதற்கான தீர்வுகளும் சொல்லப்பட்டுள்ளன. திருமண முறிவுகள் நிகழ்ந்தாலும், திருமணங்கள் நிகழ்ந்தாலும் அவர்களது சமூகத்திலிருந்து வேறுபட்ட பிறிதொரு சமூகத்தினர் கலந்து விடாமல் இருந்திட எடுக்கப்பட்ட கவனமான தீர்மானமாக இத்தீர்மானம் காணப்படுகிறது.

## செப்பேடு

1. சாலிவாஹன ஸஹாப்தம் 1561 ஸ்ரீக்கு * ச
2. ரியான ரௌத்திரி ஸ்ரீ பங்குனி மீ ய௴உ ஸ்ரீ மத் ஸே
3. து நாதராகிய கூத்தநாதய்யறவர்களுக்கு அடியிற் கண்
4. ட தங்கள் வம்சத்தவர்களாகிய மடபதிகள் உரவின் முறை[1]
5. யார்கள் நடக்கிர ஒப்பந்ததிர்க்கும் சாதி ஒளுங்காய் [2] நடக்கிர விஷ
6. யத்திர்க்கும் நாங்களும் எங்கள் வாரிசுகளும் தங்களுக்கும் தஙகள் வ
7. ாரிஸ்களுக்கும் எழுதிக் கொடுத்த ஓப்பந்தமுரி [3] முதுகுளத்தூர் மட்டபதி சிவனாண்டிப் புலவர் எமநேஸ்
8. வரம் நட்டுவாலி முத்தழகு பண்டாரம் இராமநாதபுரம் நெருப்பாண்டி ஆனைக்குளம் வடுகநாத பண்டார
9. ம் இடைகாட்டூர் நீராகாரப் பண்டாரம் விளத்தூர் கருப்ப பண்டாரம் பூவந்தி திருவுப்பண்டாரம் மண
10. லூர் வாளாயிவேலு பண்டாரம் பெருங்கருணை மாவுத்தாண்டிப் பண்டாரம் மஞ்சூர் குருதனாண்டி

11. முத்தியல் குருதனாண்டி அபிராம காளாஸ்திரிப் பண்டாரம் வளநாடு பாண்டிப் பண்டாரம் கிடாரந் நெ
12. ல்லினாத பண்டாரம் வண்ணான்குளம் கட்டகாதிப் பண்டாரம் கோவிலாங்குளம் முத்துக்குமாருப் பண்டார
13. ம் வரவணி சாமிநாத பண்டாரம் காக்கூர் ஆள்வானாண்டிப் பண்டாரம் வாணியங்குடி மொய்க பண்டா
14. ரம் உடையாண்டிப் பண்டாரம் மானாகுடி வயிரவ பண்டாரம் ஆப்பனூர் காசிப்பண்டாரம் பழயனூர்
15. பொத்தப்ப பண்டாரம் அரியகுடி வீரப்புலவன் சூரங்குடி பெத்தண பண்டாரம் யெட்டய்யாபுரம் [4] முத்துச்
16. சாமிப்புலவன் வேடபட்டி பெத்தண பண்டாரம் அரசகுடி மொட்டய பண்டாரம் ஆத்தூர் முத்துக்கரு
17. ப்ப புலவன் கீள்ச்செத்தாளை உலகப் புலவன் பூசனூர் ரெங்கஸாமிப் புலவன் குரனியம்பட்டி உ
18. மையண பண்டாரம் உமுரிக்கோட்டை சாமினாதப் புலவர் ஒட்டப்பிடாரம் உலகப்பண்டாரம் ச
19. வுரிமங்கலம் திருமேனிப்புலவன் தட்டப்பாரை கந்த சாமிப்புலவன் செக்காரக்குடி தும்மினிப்
20. புலவன் கண்ணனூர் காதபண்டாரம் சாத்தனூர் கடம்ப பண்டாரம் வள்ளிநாயகபுரம் ச
21. வுந்தர பாண்டியப் புலவன் முசுட்டைக்குரிச்சி காத்தவராய பண்டாரம் திருச்சுழி மணியாண்டி
22. ப் பண்டாரம் அருப்புக்கோட்டை அருணாசலப் பண்டாரம் இருஞ்சிரை வீரணபண்டாரம் கட்ட
23. னூர் கந்தபண்டாரம் மிளகனூர் கருப்ப பண்டாரம் கட்டிக்குளம் சிவனாண்டிப் பண்டாரம் வெ
24. ள்ளிக்குரிச்சி சேதுநாத பண்டாரம் பொன்னாகுளம் வீரபண்டாரம் வலச்சேரி பூரணபண்ட

25. ாரம் உனையூர் முருகபண்டாரம் தரைக்குடி முத்தய்ய பண்டாரம் புலவர் வேலங்குடி தி

26. ருமேனிப் புலவர் பருத்தியூர் முத்து வெயிலாப் புலவன் எழுவண்டி கருப்ப பண்டாரம் க

27. ாடலகுடி செண்பகமுத்துப் பண்டாரம் பரளச்சி சுந்தர பண்டாரம் மேலமாந்தை பெத்

28. தண பண்டாரம் வீறபாண்டியபுரம் பெத்தண பண்டாரம் செம்மப்பூர் உமையண பண்டார

29. ம் வடவலாபுரம் திருமேனிப் பண்டாரம் முடிமன்னார் கோட்டை திருவுப்புலவன் தெர்

30. க்கு தரைக்குடி முத்துமைய பண்டாரம் மண்டல மாணிக்கம் வாழவந்த பண்டாரம் தாமே

31. ாதரம்பட்டி வயிரவ பண்டாரம் மாதவநத்தம் குருசாமி பண்டாரம் சங்கூரணி குருசாமி

32. பண்டாரம் அரியனாபுரம் குமரபண்டாரம் மேல்க்கண்ட மடபதிகள் பண்டாரிகள் உரவின்

33. முரையார்[5] களாகிய சகலத்திராளும் நம் ஜாதியில் நடந்து கொள்ள வேண்டிய விஷயத்தை

34. தப்பற்றி அடியிற் காட்டி இருக்கிரபடி நடந்து கொள்ளுந் வோமாகவும் அதாவது மாம

35. னார் மகனும் மாமியார் மகளும் சம்பந்தம் பண்ணுகிற தென்றும் அப்படி சம்மந்தம் பண

36. ணாவிட்டால் குருபரம உரவின்[6] முறையார்களுக்கு அபராதம் முப்பத்தி ரெண்டு பொன் கொடுத்து

37. ஜாதிக்கி கீள்ப்படிந்து[7] கொள்ளுகிறதென்றும் இது போல் மாமியார் மகன் மாமன் மகளை

38. அன்னியில் போய் வேறே கலியாணம் பண்ணிக் கொண்டாலும் மேல்க் கண்டபடி முப்பத்திர

செப்பேடு

1. ௳ சுபமஸ்து ஸொஸ்துஸ்ரீ மன்மாக மண்டலேசுபரன் பா
2. தள விபாடன் பாழைக்குத் தப்புவராத ராயர் கண்டன் கண்ட
3. னாடு கொண்டு கொண்ட னாடு கொடாதன் ஆரியர் தள விபாடன் ஆ
4. ரியர் வீரம் அழித்தான் ஒட்டியர் தளவிபாடன் ஒட்டியர் கொட்டந்தவிழ்த்
5. தான் துலுக்கர் தளவிபாடன் துலுக்கர் மெலுக்கை யழித்தான் பூறுவ தெட்
6. சண பச்சிம உத்தர சதுற் சாகர கண்டனல்வன் யீட்சுகற...
7. .....[1] சமுத்திராபதி சுவாயம்பூ மனுச் சக்கிறவற்த்தி
8. நிறுமித அகண்ட நவகண்டப் பிறுதிவு மண்டலாதிபதி அங்க வங்க கலி
9. ங்க காஷ்மீர கொங்க ணடங்க குடுத குச்சர மாளுவ துளுவ மாதே காம பொ
10. சமண்டலீகர் திறையளக்க வந்த ரெகுராமன் அரிசுர பஸ்சல பரிசக்கிறவா்க
11. மொடு கெசவேட்டையாடும் புசபெல பராக்கிறமன் ஆடுமணி நாவசையா
12. து கட்டி நாடு புரக்கும் நராதிபர் சிங்கம் சேரமண்டல ஸ்தாபணா சாரியன் சோ
13. ழமண்டலப் பிறதிஷ்டாபனாசாரியன் பாண்டிமண்டல துரந்தரீகன் எ
14. ம் மண்டலமுந் திரைகொண்டு ஈழமுந் திறைகொண்டருளிய ராசாதிரா
15. சன் ராசபரமேசுபரன் ராசமாற்தாண்டன் நாற்பத்து முக்கோண மேற் ச
16. க்கிறமமாக மாடமாளிகையுங் கூடகோபுரமும் கோட்டை மதிளுங்
17. குறைவறமைத்த விசைய நகரத்திலும் வேலூர்தனிலு முத்திறை ப

# 23. திருமானூர் செப்பேடு

*வேதம் வல்ல பிராமணர் மற்றும் கோயில் வழிபாட்டுக்குக் கொடை*

இச்செப்பேடு அரியலூர் வட்டம் திருமானூர் அருள்மிகு கைலாசநாதர் கோயில் தர்மகர்த்தா திரு.டி. சம்பந்தம் பிள்ளையிட மிருந்து ஆய்வுக்குப் பெறப்பட்டது

முன்பக்கம் 4 வரிகளும் பின்பக்கம் 9 வரிகளும் மொத்தம் 52 வரிகளில் வாசகம் பொறிக்கப்பட்டுள்ளது.

சகவருடம் 1712 (கி.பி.1790) கலிவருடம் 4891 (கி.பி.1790) தமிழ்வருடம் 'சாதாரண' (கி.பி.1790) ஆகிய ஆண்டுக் குறிப்புகள் உள்ளன. எனவே இதன் காலம் கி.பி.1790. திருமானல்லூர் சேத்திரத்தில் உள்ள ஸ்ரீகயிலாசநாதர் சுவாமி கோயிலுக்கு ஸ்ரீ விசைய ஒப்பிலாத மழவராயர் குமரர் ஸ்ரீ குமார ஒப்பில்லாத மழவராயர், திருமாநல்லூரில் ஒரு குறிப்பிட்ட எல்லைக்குட்பட்ட நிலத்தை க்ஷோத்திரிய தானமாக (வேதம் வல்ல பிராமணர்க்கான கொடைக் கொடுத்துள்ளார். இந்நிலத்தில் கிடைக்கும் வருவாயில் 100 பூவராகன் (பணம்) அரசிற்குச் செலுத்திவிட்டு மிகுதியைக்கொண்டு கோயிலில் அபிஷேகம், நெய்வேதனம், திருவிளக்கு, திருமாலை முதலிய வழிபாட்டுச் செலவுகள் செய்திட செய்துள்ளார்.

நிலத்தின் எல்லைகள் சொல்லப்படுவதுடன் திருமாநல்லூரின் எல்லைகளும் இச்செப்பேட்டில் சொல்லப்பட்டுள்ளன.

---

*கல்வெட்டு* இதழ் 19. காளயுக்தி ஆண்டு ஐப்பசித் திங்கள், பக்.19-22. 'மழவராயர் செப்பேடு' என்ற தலைப்பில் கட்டுரையாக எழுதியவர் திரு. அ. அப்துல் மஜீத், பதிவு அலுவலர், திருச்சிராப்பள்ளி.



அரியலூர் செப்பேடு - முன்பக்கம்

28. டுத்த பலனும் தனுக்கோடிலே சோடிச மகாதானமும் கு
29. டுத்தபலனும் பெறக்கடவோமாகவும் இதுக்கு சாட்சி அம்
30. பலவாண சு(வா)மியும் சிவகாமியம்மனுமே சாட்சி
31. இது விசைய ஒப்பிலா மழவராயன் கைய் ஒப்பம் ஸ்ரீ[1]
32. யிப் பறங்கவிதை உ பற்றலர்கள் பணிந்த குன்றை விசை
33. ய ஒப்பிலான் புரியும் பாத பூசை பெற்றருளம்பலத்தா
34. டுமைய்யறாக்கிவ் வரியலூர்ப் பேட்டைக்குள்ளே உற்ற
35. புகழ் மகமையொன்று கட்டளை யிட்டானுலக முள்
36. ளமட்டு நற்று சந்திர சூரியர்களுள்ளவுந் தன்மமுற்று
37. நடக்குந்தானே உ சிவ உ நல்லப்பிள்ளை பெருமா
38. பிள்ளை / அண்ணாமலை பத்தர் / இந்தச் செப்பேடு
39. எழுதினவர் அரியலூர்ச் சிதம்பர ஆசாரி குமாரன்
40. குமரப்பன் உ இது அருணகிரித் தம்பிரான் ப
41. ணிவிடை யிந்தச் செப்பேடு திருச்சிற்றம்பலம் உ

1. தெலுங்கில் உள்ளது

5. ாரர் விசைய ஒப்பிலா மழவராயர் பூலோக கயிலாச மான சிவக
6. லைகளில் சகஸ்த்ர கலையும் பரிபூரணமான பதஞ்சலி வியா
7. க்றபாதாதி பத்தர்களுக்கு ஆக ஆனந்த நடனஞ் செய்தருளிய கன
8. க சபாபதியாகிய அம்பலவான சுவாமியே யெவ்வுயிரும் உய்யும்படி
9. எழுந்தருளியிருந்து பொன்மாரி பொழிந்து திருச் சிற்றம்பலமான சி
10. தம்பரம் அதனில் வீரமாயேசுவர சமைய சிவாசார சம்பன்ன
11. ரான சிதம்பரம் பாதபூசை அம்பலத்தாடுமைய்யர் அவர்
12. களுக்கு தற்மசாதனப் பட்டையம் குடுத்தபடி நம்முடைய
13. அரியலூர்ப் பேட்டையில் எற்பேர்ப்பட்ட போக்குவர்த்து

பின்பக்கம்

14. துப் பொதிகளுக்கும் பொதிக்கு ஒருகாசும் கடையளுக்
15. கு எட்டு னாளைக்கு ஒருகாசும் நாம் மகமை அமத்தி
16. விச்சபடியினாலே அதினால் வருகிற பலாபலங்கள் ம
17. டத்தில் குருபூசை மயேசுவர பூசையளுக்கு உதவியாக
18. நடப்பிச்சிக் கொள்ளும்படி பண்ணி அந்தச் சுகுறத
19. பலம் மழவராய கோத்திரமான நமக்கும் நம்முடை
20. ய மாதா பிதாவுக்கும் மேல்வரை புத்திர புத்திராதி தலை
21. முறையளுக்கும் அந்த அந்தச் சுகுறதம உண்டாகத்
22. தக்கதாக நடப்பிக்கும்படி பண்ணவும் யிந்த மகமை
23. த் தறுமம் நாமும் புத்திர பவுத்திர பாரம்பரை உள்ள பேரெ
24. ல்லாம் சந்திர சூரியாதித்தர்கள் உள்ள வரைக்கும் உத்
25. ற ரோத்திரமாய் நடப்பிக் கடவோமாவோம் யிது தப்பித
26. ம் வராமல் நடப்பிக்றத்தினாலே காசு சேதுமகாத் தலங்
27. களில் அன்னதானமும் கெங்கையிலே கோ தானங் கு

சக வருடம் 1625 (கி.பி.1703) தமிழ் வருடம் சுபானு (கி.பி.1703) ஆகிய ஆண்டுக் குறிப்புகள் உள்ளன. அரியலூர் அரசு ஒப்பிலா மழவராயர் குறிப்பிடப்படுகின்றார்.

சிதம்பரத்தில் வீரமாயேசுர சமைய (வீரசைவர்?) மடம் அமைத்துள்ள பாதபூசை அம்பலத்தாடுமைய்யர்க்கு ஒப்பில்லா மழவராயர் மற்றும் அவரது வழிப் பரம்பரையின் நன்மைக்காக கொடுத்த தர்ம சாதன பட்டயம் இச்செப்பேடு. இதன்படி அரியலூர் பேட்டைக்கு (சந்தை) வந்து போகின்ற சரக்குப் பொதிகளுக்கு பொதிக்கு ஒரு காசும், அங்கு அமைந்துள்ள கடைகளுக்கு 8 நாட்களுக்கு ஒருகாசு வாடகையும் வசூலிக்கப்பட்டு அம்பலத்தாடுமைய்யர் மடத்தில் குருபூசை, மயேசுவரபூசை ஆகியவை என்றென்றும் நடக்க வழி செய்யப்பட்டுள்ளது.

இச்செய்திச் சுருக்கம் செப்பேட்டின் இறுதியில் பாடல் வடிவில் உள்ளது. அரியலூர் குமரப்ப ஆசாரி இச்செப்பேட்டை எழுதியுள்ளார் அருணகிரித் தம்பிரான் பணி மேற்பார்வையில் இச்செப்பேடு உருவாக்கப்பட்டுள்ளது.

## செப்பேடு

### முன்பக்கம்

கோட்டுருவங்களின் கீழ் கட்டமிட்டு பின்வருமாறு எழுதப் பட்டுள்ளன

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| வீரமுத்து வெங்கட ப்பமழவ ராயர் | இவர் விசை ய ஒப் பிலாம ழவரா யர் | இவர்பா தபூசை அம்பல தாடுமை ய்யர் | இவர்அம்பலவாண சாமி ஆனந்த நடனம்சிவ | இவர்சி வகாமி அம்மன் | இவர்வி யாக்கி றபாதர் | இவர் பதஞ் சலி |

### முதல் பக்கம்

1. வ ஸ்வஸ்திஸ்ரீ சாலிவாகன சகாற்பித்தம் சூசுளாவ௰ரு இதன் மே
2. ல்ச் செல்லா நின்ற சுபானு ௵ புரட்டாசி மீ எ வ சுக்கிறவார னாள்
3. ஸ்ரீமது அரியலூர் அர்சு நிலையிட்ட மழவராய கோத்திர சம்பன்
4. னரான ரெங்கப்ப மழவராயர் பேரன் ஒப்பிலா மழவராயர் கும

## ௨௨. அரியலூர்ச் செப்பேடு

*மடத்திற்கு அரியலூர் சந்தை வரிகள் வழங்கியமைக்குச் செப்பேடு*

அரியலூர் முருகன் கோயிலில் இச்செப்பேடு உள்ளது. இதன் மைப்படியும், நிழற்படமும் அரியலூர் அரசு கலைக்கல்லூரிப் பேராசிரியர் இல. தியாகராஜன் மூலம் பெறற்ப்பட்டன.

19 X 25 செ.மீ. அளவுடைய இச்செப்பேட்டில் முன்பக்கம் 13 வரிகளும் பின்பக்கம் 28 வரிகளுமாக 41 வரிகளில் வாசகம் உள்ளது. செப்பேட்டின் மேற்பகுதி வட்டவடிவில் உள்ளது. வட்ட அமைப்பின் மேற்பகுதியில் 2 செ.மீ. விட்டமுடைய வட்டத்துளையுள்ளது. முன்பக்கம் பாதி அளவிற்கு கோட்டுருவங்களும் அவற்றிற்கான விளக்கப் பொறிப்புகளும் உள்ளன. நடுவில் நடராஜர் உருவம் முயலகன் மீது ஆடும் கோலத்திலும் தலைமுடியில் கங்கையுடன் கோட்டுருவமாக உள்ளது. அதன் வலது புறம் சிவகாமி, வியாக்ரபாதமுனிவர், பதஞ்சலி ஆகியோரும் இடது புறம் பாதபூசை அம்பலதாடு மைய்யர் என பீடத்தின் மீது அமர்ந்த முனிவர் அவர் அருகில் மன்னர் விசைய ஒப்பிலா மழவராயர், அவரடுத்து வீரமுத்து வேங்கடப்ப மரவராயர் (தளபதி?) ஆகியோர் உருவங்கள் கோட்டுருவமாக உள்ளன. நடராஜருக்கு மேலாக ஐரோப்பிய பாணி இறக்கையுடைய தேவதைகள் மாலையுடன் பறந்துவருவது போலவும் இவ்வுருவங்கள் அனைத்திற்கும் பின்புமைாக பூவிதழ்கள் பொழிவது போல திரையமைப்பும் உள்ளது. செப்பேட்டின் ஓரத்திலும், துளையைச் சுற்றிலும் கோடிடப்பட்டு அழகுபடுத்தப்பட்டுள்ளது. உருவங்களின் கீழ் கட்டங்களில் அவற்றின் பெயர்கள் உள்ளன. பின்புறம் வட்டப் பகுதியில் தொங்கல் அணி வேலைகளும் கீழ்பகுதியில் இச்செப்பேட்டு வாசகம் அனைத்தும் பீடத்தின் மீது வைக்கப்பட்டது போன்ற பீட உருவமும் உள்ளள.

---

இச்செப்பேட்டினைப் படித்தவர் திரு. க. ஈஸ்வரன் கல்வெட்டுப் படிப்பவர், தொல்லியல் துறை, சென்னை.

158. னப்பட்டையம் யெழுதிகுடுத்து வருஷம் பிறிதியும் பெரியகுடிக்கு ரெண்டு பணமும் சின்னகுடிக்கு ஒ

159. ரு பணமுங் கலியாணத்தில் தாரைவாக்குற யிட்டுநீர் பணமுங் கட்டின யேரொண்ணுக்கு னாலுவள்ள

160. தானியமும் ஆசந்திராற்கமாக புத்திர பவுத்திர பாரம்பரிய மாய்க் குடுத்து வருகுறோம் யிதில் தமுக்கமானா

161. ம் அந்தந்தவூர்க் கவுண்டன் வாங்கிக் குடுக்கத்தக்கவன் கல்லும் முள்ளும் பத்தரத்தாலுமப்பள்ளி புத்தறாதவன் ஆகை

162. யினாலே கல்லுங் காவேரியுள்ளளவும் ஆசந்திராற்கமாக புத்திர பவுத்திர பரம்பரியமாய் குடுத்து வருகறோ

163. மென்று நிசவறதனை எழுதிகுடுத்தோம் தாநாயவிநிவிக்கிற யோக்கியமாக ஆசந்திராற்கம் புத்திர பவுத்தி

164. ர பாரம்பரியமாய் நீங்கள் அனுபவிக்கக் கடவராகவும் யிந்த கீற்தி பிறதிஷ்டை பண்ணமாட்டார் சகலம

165. ான பேருக்குமுண்டு யிந்த தற்மபரிபாலனம் பண்ணிநபேருக் காசி ராமேசுரத்திலே கோடி சிவலிங்க பிற

143. வுண்டர், யிடப்பாடி பிச்சி கவுண்டர், ஆடையூர் நயினாக் கவுண்டர், பூவாணினாட்டு அரியாக கொத்தன் சிவந்தாச்சு

144. வுண்டர், சித்தார் ஆவணி வேலுயிருப்பளி சமுத்திரம் கச்சுவனி யிளம் கவுண்டர் முன்னுள்ள உறவின் முறையாரு

145. நல்லா கவுண்டர், மத்து சாம்பள்ளி னாட்டிலுள்ள உறவின் முறையாரும்; அந்தியூர் மந்திக் கவுண்டர், யிரச

146. ட்டையாக் கவுண்டர், தலைக்காவல் யிரிசாக் கவுண்டர், தீவட்டி கவுண்டர், யின்னம் ஓமலூர் சீமையிலுள்ள

147. உறவின் முறையாரும்; சாம்பளி உத்தண்டிச் சேருவை காறன்; புத்திரிச் சேருவை காறன் குளத்தூர்

148. நல்லா கவுண்டர், மத்து சாம்பள்ளி னாட்டிலுள்ள உறவின் முறையாரும்; அந்தியூர் மந்திக் கவுண்டர், யிரச

149. ராக் கவுண்டர், அரிச்சிக் கவுண்டர், அங்கிலுள்ள உறவின் முறையாரும் தெங்கரைக் கோட்டை வடமலைக்க

150. வுண்டர், கோணப்ப கவுண்டர், அந்தச் சீமையிலுள்ள உறவின் முறையாரும்; தர்மபுரிக் கோநேரிக் கவுண்டர், க

151. டகத்தூர் பச்சையா கவுண்டர், மத்துமந்தச் சீமையிலுள்ள உறவின் முறையாரும்; காவேரிப்பட்டணம்

152. அணிச்சியாக் கவுண்டர், தட்டைக்கல் கோனேரி கவுண்டர், நெடுங்கல் குப்பக் கவுண்டர், திருப்பத்தூர் மாணிக்க

153. கவுண்டர், அணிச்சி கவுண்டர், பின்னும் உத்தர தேசத்திலுண்டான உறவின் முறையாரும்; கீழ் தேசத்துறவி

154. ன் முறையாரும்; தெற்கு மேற்கு தேசம் யிதுனாங் கெல்லைக் குள்ளாமயிம்[14] சேது முதலான பஞ்சாஷ்ட

155. கோடிவிஸ்திற பூமண்டலத்தில் உண்டான உறவின் முறையா ரெல்லோற்கும் செம்பு மா முனிவ

156. ரல்லோர் தகப்பன் யிந்த யுகத்தில் நம்முட பண்ணாட்டார் வங்கிஷம் அபிவிற்தியாக்கிவிக்கும் ரெண்டா

157. ஞ் செம்பு மாமுனிவர்ராகிய யெக்ஞ நாராயணதீக்ஷதர் ராசனாராயண அய்யநவாளுக்கு நிசவற்தனைச் சாச

பகுதியின் எல்லையும் இச் செப்பேட்டில் சொல்லப்பட்டுள்ளது. இவர் பல்லக்கு, தீவட்டி, குடை, கொடி, சாமரம் முதலிய பரிவாரங்கள் வைத்துக் கொள்ளத் தேங்காய் தொட்டு உரிமை வழங்கியதும், கோயில் மரியாதை வழங்கியதும் சொல்லப்பட்டுள்ளது.

## செப்பேடு

முன்பக்கம்

1. உ ஸ்ரீ சாலிவாகன சகார்த்தம் தூாஉயஎ ன் ஸ்ரீ செல்
2. லாநின்ற கொல்லம் ஙாஅயஉ ஸ்ரீ நளஹு ஆடி மீ"எ
3. வ சோமவாரமும் அசுபதி நட்செத்திரமும் சுபயோ
4. க சுபகரணமும் பெற்றனாளில் தென்காசியிலிரு
5. க்கும் சீவிலி மகாராசா அவர்களோம் கிழ(ை)வ
6. னாட்டில்க் கொண்டையன் கோட்டை மறவரில்
7. த் திருவண்ணாத் தேவர் யிந்திரத் தலவனுக்கு நில
8. மைக் காணியாட்சைச் சாதனப் பட்டையம் எழு
9. திக் குடுத்தபடி பட்டையமாவது நம்முடைய வீரி
10. ருப்பு மலையங் காட்டில்ச் சந்திரனென்றொரு துஷ்ட
11. மிருகமிருந்து கொண்டு அனேகம் இராசாக்க
12. ளையெல்லாம் உயிர்வதை செய்து போட்ட படியினா
13. லே அந்தச் சந்திரனென்கிற சங்கு வெள்ளைக் கொடிய
14. னை ஒரு ராசாக்களாகிலும் செயம் பண்ணமாட்டாமல்
15. போனபடியினாலே அப்படியக்கொத்த துஷ்டமிறு
16. கத்தைத் தான் வெட்டி செயம் பண்ணின படியினாலே த
17. னக்கு இந்திரத் தலவவென்று பட்டமுங் கொடுத்து
18. த் தண்டிகை பல்லக்கும் ரெட்டைத் தீவட்டியும் ெ
19. ரட்டைக் குடையும் மகரக்குடையும் கரங்கு ட
20. ாலு கெருடக் கொடி விருதும் உபைய சாம
21. ரமும் தவளச்சங்கும் நடனாடக சங்கீதம் யி
22. வ்வளவு விருதும் குடுத்து நாகபுரம் யிந்திரபு

23. ரமென்று பேருங் குடுத்து தேங்காயும் தெ
24. ாட்டுக் குடுத்து யிந்திரபுரம் னாகபுரத்தில்க்
25. கோட்டையும் போட்டுக் குடுத்து திருவண்
26. ணா தேவன் யிந்திரத் தலவனுக்கு நாம் எழு
27. திக்குடுக்கிற உம்பளச் சறுவ மா்னியப் பூமியாவ
28. து சங்கரநயினார் கோவில் மேலத் தெரு
29. நடு நாராசரத்துக்கும் குத்துக்கல்லுக்கும்
30. மேற்கு சாலைக்கு வடக்கு கருமலைக்கு கிழக்கு வ
31. ாசு தேவநல்லூர் கூனி ஆத்துக்குத் தெற்கு
32. யிந்த நான் கெல்கைக்குள் பட்ட பூமியா
33. வது வேட்டகாறன்பட்டி திருவேட்டனல்
34. லூர் பாண்டியக் கோனார் குளம் இராம
35. லிங்கபுரம் புன்னைக்குளம் புளியங்குடி வ
36. ாசு தேவநல்லூர் தாருகாபுரம் மலை
37. யடிக்குறிச்சி பட்டகுறிச்சி அரியூர் பரி
38. யூர் புதூர் யிருமன்குளம் வீரிருப்பு வேம்ப
39. ங்குளம் நயினார் குளம் இந்திரபுரம் னாக
40. புரம் முள்ளிக்குளம் வடமலைபுரம் யிது முத
41. லான கிறாமமெல்லாம் சறுவ மானியப கே
42. காட்டைக் கட்டளைக் கிராமமாக தனக்
43. கு நாம் பட்டைய சாதனம் எழுதிக் குடுத்
44. த படியினாலே கல்லுங் காவேரியும் புல்லு
45. ம் பூமியும் உள்ளவரையும் புத்திர பாரம்பரை

பின்பக்கம்

46. யாக சந்திராதித்தர் உள்ளவரையும் மக்கள்
47. மக்களுக்குச் சீதனங்களும் விலை விக்கிறைய
48. தான தருமங்களுக்கும் உருத்தாக ஆண்
49. டனுபவித்துக் கொள்வாராகவும் சங்க

50. ர நயினார் கோவில் ஆவுடைத்தாய் சன்
51. னிதானத்தில் தனக்கு தீர்த்தம் திருநீ
52. று சந்தனம் திருமாலை பாக்கு வெத்திலை
53. முன்னிதாக குடுத்து தேர்வடமும் முன்
54. னிதாகத் தொட்டு தேர் நடத்திவிக்கிற
55. து யிப்படிக்கு சம்மதித்து சாதன பட்டை
56. யம் எழுதிக் குடுத்தோம் சீவிலி மகார
57. ாசா அவர்களோம் யிந்திரத் தலவனு
58. க்கு மிதுக்கு சாட்சி பொக்குஷம் சூரசங்
59. கு னாயக்கர் கடம்பூர்த் தடியத் தலவன்
60. வடகரை முடி பொறுத்த செம்புலித் தே
61. வன் யிந்த சாதனப் பட்டையம் எழுதினே
62. ன் சங்கர நயினார் கோவிலிருக்கு ச
63. ங்கறலிங்கம் பிள்ளை மகன் மீனாட்சிநாத
64. ன் எழுத்து இந்தப்படிக்கு நாம் எழுதிக்
65. குடுத்த பூமிக்கும் யிந்தப் பட்டையத்துக்கும்
66. ஆதாமொரு ராசாக்கள் சீமை பரிபாலனம்
67. பண்ணுகிற பேர்கள் குடிலம் பண்ணித் தோ
68. ஷத் துரோகம் நினைத்தாலும் வலுவின் பேரி
69. ல் கதட்கைகொண்டாலு மவர்கள் கெங்
70. கைக் கரையில்க் காராம் பசுவைக் கொன்ற தே
71. ாஷத்திலும் தீர்த்தக் கரையில்ப் பிராமண
72. ரைக் கொன்ற தோஷத்திலும் போகக் கட
73. வாராகவும் யிந்தப்பட்டுக்க உ
74. ய சங்கரலிங்கம் ஆவுடைத் தாயார் துணை உ

# 25. திருவாடுதுறைச் செப்பேடு

*திருச்செந்தூர் கோயில்த் திருப்பணிக்குக் கட்டபொம்மனின் கொடை*

திருவாடுதுறை ஆதினத்தில் உள்ள செப்பேடுகளில் ஒன்றாக இச்செப்பேடு உள்ளது. இச்செப்பேடு 21 x 13 செ.மீ அளவுடையது; முன்பக்கம் 39 வரிகளும் பின்பக்கம் 19 வரிகளும் ஆக 58 வரிகள் உள்ளன.

சக வருடம் 1700 (கி.பி1778)ம் தமிழ்வருடம் 'விளம்பி' (கி.பி1779) யும் சொல்லப்பட்டுள்ளன. கொல்லம் குறிக்கப்பட்டபோதிலும் ஆண்டு எண் குறிப்பிடப் படவில்லை. செகவீரராம செகவீரபாண்டிய கட்டபொம்ம நாயக்கர் பெயர் குறிப்பிடப்படுகிறது.

திருச்செந்தூர் வள்ளி, தெய்வானை உடனுறை சுப்பிரமணியசுவாமி கோயில் திருப்பணி மற்றும் வழிபாட்டிற்காக செகவீரபாண்டிய கட்டபொம்மநாயக்கரின் ஆட்சியின் கீழ் அமைந்த உம்பளக் கிராமம், சீவிதக் கிராமம், ஆகிய அனைத்திடங்களிலும் உள்ள எல்லாசாதியினர் வீட்டிற்கும் வருஷம் ஒன்றிற்கு மரக்கால் (குறுணி) தானியம் வீதம் வரிவசூலிக்கப் பிறப்பித்த ஆணையை இச் செப்பேடு குறிப்பிடுகிறது.

முருகனின் பெருமையும், வீரபாண்டிய கட்டபொம்மனின் சிறப்புக்களும் சொல்லப்பட்டுள்ளன. செப்பேட்டினை எழுதியவர் இராயசம் குமாரசாமியா பிள்ளை மகன் சுப்பிரமணியபிள்ளை ஆவார்.

---

*கல்வெட்டு* இதழ் எண்.47 தாது ஆண்டு ஆனி - ஆடித் திங்கள் (1996 ஜூலைத் திங்கள்) பக்.21-26. 'கட்டபொம்மன் வழங்கிய செப்பேடு' என்ற தலைப்பில் கட்டுரையாக எழுதியவர் திரு. ச.கிருஷ்ணமூர்த்தி தொல்லியல் அலுவலர் தொல்பொருள் ஆய்வுத்துறை.

செப்பேடு

1. உ சுவத்திரி சகாற்றம் 1700க்கு மே
2. ல்ச் சொல்லா நின்ற கொல்லம் வருசம் விளம்பி வருசம்
3. உத்தராயணமான தை 28 தேதி குருவாரமும் பூறுவ பட்
4. சத்துத் துவாதெசியும் மாகேந்திரநாக யோகம் பால
5. வாகறணமும் சுபயோக சுபகரணமும் பெத்த மிருகசீ
6. ருச நட்செத்திரத்தில் நாள்ச் செய்த தான சாதனப்
7. பட்டையமாவது குடநாட்டுத் திருச்செந்தூரான தி
8. ரிபுவன மகாதேவி சதுர்வேதிமங்கலம் நா
9. யனாரிளைய நாயினாரான சிருட்டித் திதி சங்க
10. ராத்தி ரோபா வெனுக்கிரக பஞ்ச சுத்த
11. வலிய வீரமயில் வாகன குக்குடத் துவஜ
12. சுரான சுராயிப சகல சத்தியாதமக சுரூப
13. வல்லி தேவநாயகி சமேத சுப்பிரமணிய
14. சுவாமி சன்னிய்தானத்தில்த் திருப்ப
15. ணிக்கு ஆச்சந்திராக்கம் ஆகத் தான
16. சாதனப் பட்டையமாவது பாஞ்சை
17. நகராதிபன் சக்கதேவி அனுகூலன்
18. துட்ட நிக்கரக சிட்ட பரிபாலனன் கெ
19. ச மன்னியர் கோளரி மறு மன்னியர்
20. சற்ப்ப கெருடன் ரணமுக சுத்த வீரன்
21. அருண நயமுக சந்திரோதய ணியலிசை
22. நாடக முத்தமிழாதிபன் கவி சாருவ பூம
23. ன் பச்சைக் குடை பூச்சக்கிறவாளக கு
24. டைக்கதிபன் தண்டுவார் முண்டன் தென்
25. னாட்டு ராயன் ரட்டை வாள்க்கதிபன் மயில்
26. க் கொடிச் சேவல்க் கொடி ரிசபக் கொடி அனு
27. மக் கொடிக் கெருடக் கொடிக் கதிபன் சோ

28. தினிலுகந்த சிவ கந்தனடி மறவாத அடியே
29. ன் செகவீர ராமச் செகவீர பாண்டியக் கட்ட
30. பொம்ம நாயக்கரோம் தான சாதனமாகத்
31. தாம்புர சாதனப் பட்டைய மெளுதிக்
32. கொடுத்தபடி தான சாதனமாகத் தாம்
33. புர சாதனப் பட்டையமானது யென்னு
34. டைய ஆதிக்கத்தில்ச் சேர்ந்த கிறாமம்
35. உண்பளக் கிறாமஞ் சீவிதக் கிறாமஞ் சிறு
36. பாட்டுக் கிறாமம் அமரக் கிறாம முதல் ஆகிய
37. நத்ததுக்கும் சகல சாதிக்கும் கவிள்த்திக்
38. கட்டின கிரக ஒன்றுக்கு வருசாசலங் குறு
39. ணித் தான்னிய வீதம் கோவில்த் தலத்தா

பின்பக்கம்

40. ர் மனுசர் வசம் யீரம் பதர்த் தூத்தி
41. அளந்து கொடுத்து வருவோமாக
42. வும் யிந்தத் தர்மம் ஆச்சந்திராக்க
43. ம் சந்ததிப் பிறதி(டு)வேஷம் ஆதிக்கத்தில்ப்
44. பரிபாலனம் பண்ணிக் கொண்டு வருவோ
45. மாகவும் யிந்தத் தற்மத்துக்கு வாக்குச் ச
46. காயம் சரீர சகாயம் அறிந்த சகாயம்
47. பண்ணின பேர் சாலோக சாமீப சாருப
48. சாயுச்ச பதம் பெறுவாராகவும் யிப்படி
49. க்குச் சம்மதித்துத் தான சாதனமாக யி
50. ந்தத் தாம்புர சாதன பட்டையம் சுவாமி
51. சுப்பிரமணிய சாமி சன்னிதானத்
52. தில்த் திருப்பணிக்குத் தாம்புர சாதன
53. ப் பட்டையமெளுதித் தானம் பண்ணி

54. க் கொடுத்தேன் செகவீரராம செ
55. கவீரபாண்டியன் கட்ட பொம்ம நா
56. யக்கரோம் உ யிந்த பட்டையமெழு
57. தினேன் ராயசங் குமாரசாமியா
58. பிள்ளை குமாரன் சிவ சுப்பிரமணியன் உ

# 26. எட்டயபுரம் செப்பேடு

*பாளையப்பட்டுகளில் ஆங்கிலேயரின் ஆயுதப்பறிமுதல் குறித்த விளம்பரச் செப்பேடு*

தூத்துக்குடி மாவட்டம் எட்டயபுரத்தில் பாளையக்காரர் அரணமனைக்கு முன்னதாக உள்ள அ/மி எட்டீஸ்வரர் கோயில் நுழைவாயிலின் வலதுபுறம் 4 அடி உயரமுள்ள கல்தூண் ஒன்றில் பொருத்தி வைக்கப்பட்டுள்ளது.

52 X 32 செ.மீ. அளவுள்ள இச்செப்பேட்டில் ஒருபுறம் மட்டும் 33 வரிகளில் வாசகம் உள்ளது. தமிழ் எழுத்தில் எழுதப்பட்டுள்ள இச்செப்பேட்டின் இறுதியில் I.A. BANNERMAN என்று ஆங்கிலத்தில் எழுதப்பட்டுள்ளது.

இச்செப்பேட்டில் சக வருடம் 1721 (கி.பி.1799] ஆங்கில வருடம் 1799, தமிழ் வருடம் சித்தார்த்தி (கி.பி.1799) ஆகியவை குறிப்பிடப்பட்டுள்ளன. வீரபாண்டிய கட்டபொம்மன் தூக்கிலிடப்பட்ட 4 நாட்களுக்குப்பின்னர் இச்செப்பேடு எழுதப்பட்டுள்ளது.

திருநெல்வேலிச் சீமையில் உள்ள பாஞ்சாலங்குறிச்சி, ஏழாயிரம்பண்ணை, நாகலாபுரம், கோலார்பட்டி, காடல் குடி, குளத்தூர் ஆகிய பாளையப்பட்டுகளை ஆங்கிலேய கம்பெனி - தன் ஆட்சியில் சேர்த்து கொண்டது, கட்டபொம்மனாயக்னை சிரச்சேதம் செய்தது ஆகிய செய்திகள் சொல்லப்படுகின்றன. பாளையப்பட்டுகளில் உள்ள கோட்டைகள் தரைமட்டமாக்கப்பட்டு ஆயுதங்கள் பறிமுதல் செய்யப்பட்ட செய்திகள் சொல்லப்பட்டு இனியாரும் ஆயுதங்கள் வைத்துக் கொள்ளக்கூடாது என்பதின் விளம்பரமாக இச்செப்பேடு வெளியிடப்பட்டுள்ளது.

---

செப்பேட்டின் வாசகத்தைப் படித்துக் குறிப்புகளுடன் அனுப்பியவர் திரு.செ.மா. கணபதி காப்பாட்சியர் (ஓய்வு) இராமேசுவரம்.

## செப்பேடு

### முன் பக்கம்

1. தூளாகூயசூ ஹூ அட்டோபர் மீ உ உய உ சகார்த்தம் தூளாஉயக மேல்செல்லா நின்ர சித்தார்த்தி ஸ்ரீ அர்பசி மீ

2. எ உ திருநெல்வேலிச் சீமையுடனே சந்தப் பாளையப்பட்டுச் சீமைகளிலே யிருக்கப்பட்ட பாளையக்காரர்

3. சகலவிதமான குடியானபேர்களுக்கும் தெரியும்படிக்கி விளம்பரம் பண்ணிவிக்கிரது யென்ன வென்றால் மேசர் பா

4. னர்மென்துரையவர்கள் கும்பினியாரிடத்தில் பெர்ர உத்தரவினாலெ தாகாலத்திலெ கும்பினியார்வர்கள் தி

5. ருநெல்வேலிச் சீமைகளிலே பாளையஞ் சேகரிக்க அகத்தியம் உண்டானதும் பாஞ்சாலங்குரிச்சி யானேழாயிரம்

6. பண்ணையான் நாகலாபுரத்தான் கொலார்பட்டியான் காடல்குடி குளத்தூரானிவர்களனவரும் அஸ்கத்தப் பித்துர்

7. மார்க நடத்தைகளாக நடந்ததினாலே இவர்களுடைய பாளையப்பட்டுக்களைக் கொள்ள நிமர்த்தியம் உண்டானது

8. ம் பாஞ்சாலங்குறிச்சிக் கட்டபொம்மனாயக்கன் அவனுடைய தானாபதி சிவசுப்பிரமணிய பிள்ளை நாகலாபுரத்

9. துப் பாளையக்காரனுக்குத் தமையனாகவும் காரிஷ்தனகாவு மிகுந்த சவுந்தர பாண்டிய நாயக்கனவரகளையு ஸிரச்சேத

10. மாக ஆக்கினை செய்ததும் மேஸர் பனர்மென் துரை யவர்கள் நாகலாபுரம் யேழாயிரம் பண்ணைப் பாளைக்கார ரையுமின்ன

11. தஞ் சிலது முக்கியமாயிருக்கப்பட்ட மனுடர்களையும் அவரவர் பாளையப்பட்டுக்களை நீக்கிவிச்சுச் சென்னைப் பட்டணத்துக்கு

12. அனுப்பிவிக்கிம்படி நிமித்தியம் உண்டானதும் பாளையப் பட்டுகெளிலேயுள்ள கோட்டைகளை யெல்லாமிடித்து அதிலு

13. ள்ள சேர்வைகாறர் சேவகர் குடியான பேர்கள் கைய்யிலுள்ள ஆயுதங்களையும் வாங்கிக் கொள்ள நிமித்தியம் உண்ட

14. ானது மித்தியாதி காரியங்களெல்லா மிதற்கு முன்வகை விபரமாக விளம்பரப்படுத்திய விளம்பரங்களினாலே சகலமா

15. ன பேர்களுக்கும் லோகப் பிரசித்தமாய்த் தெரியப்பட்டிருக்குமே யின்னங் கீழே எழுதப்பட்ட காரிய குணங்

16. களை யெல்லாஞ் சகலமான பேர்களுக்குந் தெரியப் படுத்த வேண்டியது மேசர் பனர்மென்துரையவர்களுக்கு நிமி

17. த்தியமாய்த்தோணி விளம்பரம் பண்விக்கிரது யென்ன வென்றா யினிமேலப்பட்டு யாதாமொரு பாளைய கார

18. னம் ஷெபடி கோட்டை கொத்தள முடையங்கள் போட்டாலும் பீரங்கி ரெக்குலொசா காபிமாரதுகள் வைத்திருந்த

19. ாலு , மித்தியாதிகளைச் சம்பாதித்தாலுமவர்கள் கும்பினியாருடைய ஆதரவுகளையுமிழந்து அவர்களுடைய பாளையபட்டு

20. களையும் கும்பினியார் கட்டிக்கொண்டு அந்தப்பாளையக்காரனையும் கும்பினியாருக்கு தொணினபடி தேண்டிப்பார்கள்

21. பாளையபட்டுகளிலுள்ள சேர்வைகாரர் சேவுகர் காவல்காரர் குடியான பேர்களிந்தவித மனுடர்களில் யாதாமொரும

22. னுடர்களானாலும் துபாக்கியாகிய கல்வெடி திரிவெடி யீட்டி வல்லயங்கள் பிடித்த பேர்களைக் கண்டாலு மிதுகளை

23. யொளித்து வைத்திருந்த பேர்களைக் கண்டாலு மவர்களை யுயிர்ச் சேதம் பண்ணுவார்களந்தந்தப் பாளையக்காரர

24. வர்களுடைய பாளையபட்டு குடியானபேர்களுடைய நடத்தைகளுக்கு அந்தந்த பாளையக்காரர் தாமே உத்தரவாதம் பண்ண வே

25. ணும் அதல்லாமலும் யாதாமொரு பாளையகாரனுடைய சனங்களாயுத பாணிகளாய் யெந்தச் சீமைகளிலேயாகிலும் சல்லிய

26. ங்களும் பெலபந்தங்களும் செய்யிரதைக் கண்டாலந்தச் சனங்களுக்கு உயிர்ச்சேதமாகிய தண்டினையும் நடக்கிரதும

27. ல்லாமல்ந்தச் சனங்களுடைய பாளையப்பட்டுப்பாளையக் காரனு டைய சீமைகளையும் கட்டிக் கொண்டு அந்தப்பாளையக்காரன்

28. க் கும்பினியாருக்குத் தோணின தண்டினை நடப்பிவிப்பார்களின்ன மரிய வேண்டிய தென்ன மென்றால் மேசர்பனர்

29. மென்துரையவர்கள் பொர உத்தரவுக்காக நடத்திவிச்ச காரியங்களையும் சீமைக்கு சவுக்கியமாகும் படியாய் மேலே

30. ழுதி யிருக்கப்பட்ட சட்டங்களையும் சகலவிதசனங் களுக்கு மிப்போதைக்கு மினிமேலென்ரென்ரைக்கும் அரிந்து

31. மனதிலே வைக்க வெண்டியது மிகவும் யுத்தமாயும், அகத்தியமாயு மிருக்கப்பட்டதான படியினாலே யிந்த விளம்பரத்

32. தை யொரு செம்புத் தகட்டிலே எழுதி அந்தந்தப் பாளையப்பட்டுத் தலக்கிராமங்களில் பயிர் பலமாயிருக்கப்பட்ட யிடங்களிலே

33. அடிக்கும்படியாய் உதரெவாச்சுது அதுவரியவும் இந்தப்படிக்கி மேசர்னர்மென் துரையவர்கள் உ.

I.A. BANNERMAN

MAJOR

# 27. செங்கல்பட்டு வெள்ளிப்பட்டையம்

*விக்டோரியா இராணி பெயரால் காசுமாலை கொடுத்தது*

காஞ்சிபுரம் மாவட்டம் செங்கல்பட்டில் கோட்டைப் பகுதியிலிருந்த கோதண்டராமசாமி கோயில் வாயில் கதவினில், முன்பு பதிக்கப்பட்டிருந்தது. இன்று இக்கோயில் கோட்டைப் பகுதியிலிருந்து நகர்பகுதிக்கு மாற்றப்பட்டு விட்டது. வாயிற்கதவில் பதிக்கப்பட்டிருந்த இவ்வெள்ளித் தகடு இன்று அதனிலிருந்து எடுக்கப்பட்டு நிர்வாகத்தார் பாதுகாப்பில் உள்ளது.

33X23 செ.மீ அளவுடைய இத்தகட்டின் நான்கு மூலைகளிலும் ஆணிகள் அடித்த துளையுகள் உள்ளன. முன்பக்கம் மட்டும் 11 வரிகளில் வாசகம் உள்ளது.

கலிவருடம் 4987 (கி.பி1886) தமிழ்வருடம் 'விய' (கி.பி.1886) ஆங்கில வருடம் கி.பி 1887 ஆகியவை குறிப்பிடப்படுகின்றன. 'விக்டோரியா சக்கரவர்த்தினி' பெயரும் குறிப்பிடப்படுகிறது.

விக்டோரியா மகாராணியின் 50 வது ஆண்டு நிறைவு விழா அன்னதானம் வழங்கப்பட்டும், இலவச சேலை, வேஷ்டிகள் வழங்கப்பட்டும் கொண்டாடப்பட்டது. அந்நிகழ்வில் ராணியின் பெயர்ச் சிறப்பிற்காக கோயில் தர்ம பரிபாலகர் மா. குப்புச்சாமி நாயுடுவின் குமாரரும் மாவட்ட நீதிமன்ற ரீடருமான மா. ராமானுஜ நாயுடு ரூ300 மதிப்புள்ள தங்கக் காசு மாலை ஒன்றினை கோதண்டராமசாமிக்கு வழங்கியுள்ளார். இச் செய்தி இவ்வெள்ளிப் பட்டையத்தில் பொறிக்கப் பட்டுள்ளது.

---

*கல்வெட்டு* இதழ் 31, பிரஜோற்பத்தி ஆண்டு ஆவணித்திங்கள் (1991, ஆகஸ்ட் திங்கள்) பக்.33-35 'விக்டோரியா ராணியின் வெள்ளிப்பட்டயம்' என்ற தலைப்பில் கட்டுரையாக எழுதியவர் திரு கு. தாமோதரன் துணை இயக்குநர் தொல்லியல் துறை.

வெள்ளியேடு

1. செங்கல்பட்டு ஸ்ரீ கோதண்டறாமாஸ்வாமி சந்நிதியில் கலியுக
2. காதி 4987-ல் நிகழும் வியஹூ மாசி மீ 6க்கு 1887 பிப்
3. பிரவரி மீ 16 உ நமது விக்டோரியா சக்கரவர்த்தினி அவர்களுடைய
4. 50-வது ஆண்டின் பெருமையை உற்சவ கோலாகலங்களு
5. டன் அன்னதான வஸ்திரதான முதலியவைகளை செய்து யாவறாலும்
6. கொண்டாடப்பட்டது அது சமயத்தில் தேவஸ்த்தான தர்மபரி பாலகர்
7. மா - குப்புசாமி நாயுடுகாரு குமாரர் செங்கல்பட்டு டிஸ்டிரீக்கு கோர்ட்டு-
8. ரீடர் - மா - றாமானுஜ நாயுடுகாரு மாக்ஷிமை தங்கிய நமது சக்கிரவர்த்தி
9. நியவர்கள் பெயறால் ஸ்ரீ கோதண்டறாமஸ்வாமிக்கி சுமார் 300 முன்னூறு
10. ரூ. விலையுள்ள பொன் காசு மாலையை சமர்ப்பித்து புகழப் பட்டது.
11. சர்வம் ஸ்ரீகிருஷ்ண பிரிதி

# 28. பள்ளப்பட்டி செப்பேடு

*பள்ளப்பட்டி பெரிய நாட்டாண்மைக்கு விருது கொடுத்தமை*

திண்டுக்கல் மாவட்டம், நிலக்கோடடை வட்டம், பள்ளப்பட்டியில் உள்ள திரு ரா. பாண்டியராஜ் அவர்களிடம் இச்செப்பேடு உள்ளது.

23.5x13.5 செ.மீ. அளவுடைய செப்பேடு இது. தலைப்புப் பகுதியில் மொட்டு வடிவக் கைப்பிடிப்பகுதியில் ஒரு சிறு துளையுள்ளது. அதன்கீழ் பீடத்தின் மீது நிறுத்தப்பட்ட திருமண் (நாமம்) காட்டப்பட்டு அதன் இருபுறமும் சூரியன் சந்திரன், சங்கு, சக்கரம் ஆகியவை கோட்டுவமாகப் பொறிக்கப்பட்டுள்ளன. வாசகம் முன்பக்கம் மட்டும 43 வரிகளில் உள்ளது.

வேதமார்க்கத்தை நிலைநிறுத்தியவரும், ஆதிபிரம்ம சகோதரமும், வைணவ மடத் தலைவருமான ஸ்ரீவேதவியாச பட்டர் அய்யங்கார். பள்ளப்பட்டி பெரியநாட்டாண்மை தொட்டய கவண்டனுக்கு விருதுகள் அளித்து ஆணை (திருமுகம்) வழங்கியதை இச்செப்பேடு சொல்கிறது. இதன்படி தேர்த்திருநாள், அரிபூசை, குருபூசை நாட்களில் அனுமக்கொடி, கருடக்கொடி, வெள்ளப்பக்கரை டால், பஞ்சவர்ண டால், மஞ்சள் நிற டால், சுருட்டி, சூரிய பரன் ஆகிய பரிசின்னங்கள் எடுத்தச் செல்ல அனுமதிக்கப்பட்டது. இச்சிறப்புகள் தொட்டயக் கவண்டர் தூளி சமயத்திற்கு நாட்டாண்மை என்பதால் தூளிசமயத்திற்கு கொடுக்கப்பட்டதாகக் கொள்ளவேண்டும். கட்டு சமயத்தார், தூளி சமயத்தார், மலைக்குடியினர், இன்னும் பிறரும் அறிய இப்பட்டயம் வழங்கப்பட்டுள்ளது.

---

இச்செப்பேட்டினைச் சேகரித்துப் படித்தவர் முனைவர் இரா.ப.கருணானந்தன், கல்வெட்டாய்வாளர், உதகமண்டலம். 'தூளி சமயச் செப்பேடு' என்ற தலைப்பில் தொல்லியல் செய்திமடல்: கோவை:4 மடல்:1, 1999 ஜனவரி-இல் செய்திக்குறிப்பு வெளியாகியுள்ளது.

## செப்பேடு

1. ஸ்ரீ இராமசெயம் சொஷ்தத்திறி சாலிவாகன சகார்
2. த்தம் கூசா௱உ௰கூ கலியுக சதார்த்தம் சதூகூா௱அ
3. இதின்மேல் செல்லாநின்ற விப ஹு பைங்குனி மீ
4. ௰௩௨ சுக்கிரபச்சத்து பஞ்சமியும் சுக்கிரவாரமும்
5. உத்திர நச்செத்திரமும் அமுர்தநாமயோகமும்
6. வாலவாகரணமும் கூடிய இந்த சுபதனத்தில்
7. ஸ்ரீ மத்வேதமாறக பிறதிஷ்ட்டாவனாசாரிய
8. உபயவேதாந்தாசாரிய ஆதிபிறம்ம சகோ
9. தரறான ஸ்ரீ வேதவியாச பட்டரய்யங்கார் நம்
10. முடைய அம்மயனாயக்கர் சீமை பெஞ்சை நக
11. ரம் பெரியநாட்டாண்மை பள்ளபட்டி தூளி சமை
12. யம் தொட்டயகவுண்டனுக்குத் திருமாளிகையில்
13. விருது குடுத்ததற்கு விபரம் அனுமக்கொடி டால்
14. கெருடக்கொடி டால் வெள்ளைப் பக்கரை டால்
15. பஞ்சவற்ன டால் மஞ்ச டால் வெள்ளைக் குடை
16. சல்லி வில்லிக் குடை சுருட்டி சூரியபரன் யிந்த
17. விருதுகளெல்லாம் நம்முடைய தூளிசமை
18. யம் தொட்டயகவுண்டருக்குக் கட்டளையிட்டபடி
19. யினாலே யிந்த விருதுகள்த் தேர்த்திருனாள்
20. அரிபூசை குருபூசை பந்தி பாவாடை யித்தியா
21. தி யிடங்களுக்கெல்லாம் யிந்தவிருதைப் பிடி
22. த்துக் கொண்டு சுகத்திலே யிருபாராகவும்
23. யிந்த ஸ்ரீமுகத்தைச் சீமைவளியிலே யிரு
24. க்கிற கட்டுசமையத்தார் தூளி சமைய
25. த்தார் பாவாடைத் தாதர்கள் அகாடி
26. த் தாதர்கள் தெசபாகத்தார் சாத்தாத

27. வாள் மேல் னோக்கித் திருமணியிட்ட திரு
28. மலைக்குடியானபேர் அனைவோரும் யிந்த
29. த் திருமுக்த்தைப் பார்த்துக்கொண்டு நம்மு
30. யை தூளி சமையம் தொட்டய கவண்ட
31. ணிடத்திற் குடுத்து விடவும் உ ஸ்ரீ வேத
32. வியாஸ உ இந்தப்பட்டயத்துக்கு ஆறாமொருத்தற்
33. வில்லங்கஞ் செய்தாலும் பிரட்டென்று சொ
34. ன்னாலும் விகாத பேதங்கள் செய்தாலும்
35. இப்படியாக கோத்(த)துஷ்ட்டத் துரோகஞ்செ
36. ய்யிரபேற்கள் அனுபவிக்கிர பலன் சாமித்துறோ
37. கம் குருத்துறோகம் ஆலையங்களில் திருவிள
38. க்கை அணைத்தவன் ஸ்ரீவதை செய்தவன் யெந்த
39. பாவத்திலே போவானோ அந்த பாவத்தை அனுப
40. விப்பாறாகவும் இதற்கு நன்மையுடையவர்கள் அஷ
41. ட்டாச்சரத்துக்குடைத்தாகிய வெங்கிடாசலபதி
42. கிறுபை பெத்துவாள்ந்து யிருப்பாராகவும் ஸ்ரீவே
43. தவியாச பட்டரய்யங்கார் வாக்கியம் உ

# 29. மயிலாடுதுறைச் செப்பேடு

*கந்தபுராணத்தில் செங்குந்தரைப் பாடியவருக்கு மரியாதை*

*இச்செப்பேடு மயிலா*டுதுறை தருமபுர ஆதீனக் கல்லூரி முதல்வர் பேராசிரியர் வி.சா. குருசாமி அவர்கள் இல்லத்தில் வழிபாட்டில் உள்ளது.

31.5 x 21 செ.மீ அளவுள்ள இச்செப்பேட்டில் முன்பக்கம் 5 வரிசைகளாக புடைப்பு உருவங்கள் வார்க்கப்பட்டுள்ளன. பின்புறம் 45 வரிகளில் செப்பேட்டின் வாசகம் உள்ளது.புடைப்புச் சிற்பங்களில் முதல் வரிசையின் நடுவில் சிவபெருமான் உமையுடன் கயிலை மலையில் அமர்ந்துள்ள காட்சியும், அவரது இருபுறம் துவாரபாலர்கள், துவாரபாலகரை அடுத்து வலதுபுறம் வள்ளி தெய்வானையுடன் கூடிய முருகர், இடதுபுறம் விநாயகர் ஆகியோர் நின்ற நிலையில் காட்டப்பெற்றுள்ளனர். இரண்டாம் வரிசையில் 9 சக்திகள் (நவசக்திகள்) நின்ற நிலையில் கரண்ட மகுடம் அணிந்து கையில் மலரேந்திக் காட்டப்பட்டுள்ளனர். மூன்றாம் வரிசையில் 9 வீரர்கள் (நவவீரர்) வலக்கையில் வாள் ஏந்தி நின்ற நிலையில் காட்டப்பட்டுள்ளனர். நான்காம் வரிசையில் வாகு மாலையும், மகுடமில்லாத தலை ஒன்றும், இருபுறமும் இழுத்துக் கயிற்றால் கட்டப்பட்ட உறியின்கீழ் நெருப்பும், கயிற்றில் தொங்கும் வாள், வேல், வரிசையாகப் பறக்கும் நான்கு கொடிகள் ஆகியவையும் உள்ளன. ஐந்தாவது வரிசையான கீழ்வரிசையில் கொடி, சங்கு, கண்ணாடி, கவரிகள், துணி, விசிறி, உடுக்கை, எக்காளம், கதை, ஏரில் பூட்டப்பட்ட இரு காளைகள் ஆகியவை புடைப்புச் சிற்பங்களாக உள்ளன.

---

*கல்வெட்டு* இதழ் எண்.*26; பிர*மோதூத - வைகாசி (1990-மே) பக்.31-37 மற்றும் இதழ் எண்.27 பிரமோதூத - ஆவணி (1990-ஆகஸ்ட்) பக்.25-29ல் 'சமயச் செப்பேடு' என்ற தலைப்பில் வெளியானது. கட்டுரையாக எழுதியவர் திரு பொ. இராசேந்திரன், கல்வெட்டாய்வாளர்.

செப்பேட்டில் சகவருடம் 1107(கி.பி.1185), கலிவருடம் 4186(கி.பி.1185), தமிழ் வருடம் விஜய (கி.பி.1185) ஆகியவை குறிக்கப்பட்டுள்ளன. இவை கி.பி.1185க்கு இணையாக வருகின்றன. எனினும் இதனில் உள்ள செய்தி, வாசக அமைப்பு, குறிக்கப்படும் மன்னன் - நரைசிங்க ராயர், செப்பேட்டின் எழுத்தமைதி ஆகியவை இவ்வாண்டிற்குப் பொறுத்தமற்றவை. இச்செப்பேட்டின் காலத்தினை கி.பி.16ஆம் நூற்றாண்டாகச் சொல்லலாம்.

செங்குந்தர் - கைக்கோளர் என்னும் நெசவுத் தொழில் புரியும் சமுதாயத்தினர் தங்களை முருகப் பெருமானின் தொண்டர் வீரபாகுவழி வந்தவர்களாகக் கூறிக்கொள்வர். முருகனைத் தங்கள் குலக் கடவுளாகக் கொண்டு வழிபடுவர்.

முருகன் மீதான கந்தபுராணம் தமிழில் கச்சியப்பசுவமிகளால் எழுதப்பட்டு இன்று பரவலாகத் தமிழில் உள்ள நூலாகும். இச்செப்பேட்டில் திருச்சேஞ்ஞலூரைச் சேர்ந்த ஞானப்பிரகாச சுவாமிகள் கந்தபுராணம் பாடினார் என்றும் அதனில் ''கைக்கோளர் வரலாற்றினை பெருமையை மிகுதியாயிப் பாடி பிரசங்கித்து னாவினால் மழுவெடுத்து அரங்கேற்றி நவவீரர் வம்சம் னிச்சியத்தார்'' என்றும் அதற்காக இவரை எட்டுக் கால் பீடத்தில் மீது இடங்கை பாவாடை விரித்து, இருபுறமும் விளக்கு வைத்து, பாதபூசை செய்து 1. தறிக்கு ஒருபணம் 2. தலைக்கட்டுக்கு ஒரு பணம் 3. நன்மைக்கு ஒரு பணம் 4. தீமைக்கு ஒருபணம் 5. மூக்கூத்திக்கு ஒருபணம் என கொங்குநாட்டில் உள்ள 72 நாட்டுக் கைக்கோளரும் தருவதெனத் தீர்மானித்து மரியாதை செய்தனர். மேலும் இவர் கைக்கோளர் உள்ள எந்த இடத்திற்கும் சென்றாலும் இவரைப் பாவாடை (துணி) விரித்து வரவேற்று உபசாரம் செய்யவேண்டும் என்றும் தீர்மானித்தனர்.

இந்தத் தீர்மானங்க்ள் காஞ்சிபுரம் ஏகாம்பரர் கோயிலில் முகவாயில் எழுந்தான் என்ற மண்டபத்தில் கூடி எடுக்கப்பட்டு 'சமயச் செப்பேடு' என்ற பெயரில் செப்பேடாக ஆவணப்படுத்தப்பட்டுள்ளது.

## செப்பேடு

1. உ கணபதி துணை சிவ மீ͞றுபை சண்முகன் துணை
2. ஸொஸ்திஸ்ரீ மன்மகா மண்டலேசுவர முவராய க
3. ண்ட நரைசிங்கராயர் பிரதிராஜிய பரிபாலந

4. ம் பண்ணி யருளா நின்ற சாலீய வாகன சகாப்த்த
5. ம் தூாஎ கலியுகாப்த்தம் சதூகூா அயசு யி
6. தின் மேல் செல்லா நின்ற விஜய ஷூ பங்குனி
7. உ௨ குருவாரம் அசுவதி ஷ்க்ஷத்திரமும் சித்தயோகமும்
8. சுபகரணமும் கூடிய சுபதினத்தில் ஸ்ரீகாஞ்சிபுர
9. யேகாம்பரனாத சுவாமி சன்னிதியில் முகவாயி
10. லெழுந்தான் மண்டபத்தில் செங்குந்தர் மற்றுள்ளா
11. ருங் கொறைவற கூடியிருந்து திருச்சேஞ்ஞலூர்
12. சுத்த சைவாசாரியராாகிய னாவினால் மழுவெடுத்த
13. ஞானப்பிரகாச சுவாமியாரவர்களுக்கு உரித்தி
14. ர புத்திரர் ஆணுக்கேறாய்ப் பிறந்தோர் மெயிமீசை
15. யிருந்தோர் வீரர் பாணனென்றும் பொற்கோவில்
16. கைக்கோளரென்னுங் கொங்கெழுபத்து ரெண்டு னா
17. ட்டிலுள்ள செங்குந்தரானவரும் பண்ணிக் கொடுத்த
18. சமையச் செப்பேடு கந்தபுராணத்தில் கைக்கோ
19. ளர் வரலாற்றின் பெருமையை மிகுதியாயிப் பா
20. டி பிரசங்கித்து னாவினால் மழுவெடுத்து அரங்கே
21. ற்றி நவவீரர் வம்சம் னிச்சயித்த சுவாமிகளுக்கு ப
22. ரிசு கொடுத்துத் தீராதென்று யிரட்டை விளக்கு மிட
23. ங்கைப் பாவாடை யிட்டு யெண்கால் பீடத்தே
24. பாதார்ச்சனை பண்ணி சாயிபோகமாயி தரி
25. க்கொரு பணம் தலைக்கட்டுக்கொரு பணம் நன்
26. மைக்கொரு பணம் தீன்மைக்கொரு பணம் மூ
27. க்குத்திக் கொரு பணம் யிந்த அஞ்சு பணமும் வரு
28. த்தனையாக யெந்த மண்டலத்திலுள்ள யெந்த
29. க்கைக்கோள துரைகளும் பாவாடை வரிசை யு
30. பசாரஞ் செய்யவும் யிந்த செப்பேடு தள்ளி யு
31. தாசினமும் ஆஷேபமுஞ் செய்ய கூடாது யிந்த

32. கட்டளை சந்திராதித்தயருள்ள வரைக்குந் தப்பா
33. து யிந்தக்கட்டளை தள்ளி யுதாசன யாக்ஷேப
34. ம் பண்ணின பேர்களுக்கு சிவசக்தி சண்முகன் பா
35. தத்தானை சிவசமயஞ் செங்குந்த நாட்டாராணைப்
36. படி மகா பாதகனகாயாவரவரதினரகங்களை
37. யடைவார்களென்றுஞ் சத்தியமாய் யெழுப
38. த்து ரெண்டு னாட்டிலுள்ள செங்குந்தரானவரு மேகா
39. ம்பரனாத சுவாமி சன்னிதானத்தில் னரைசிங்
40. க ராயர் முன்பாக ஞானபிப்பிரகாச சுவாமியார
41. வர்களுக்கு தாம்பூர சாசனம் பண்ணிக் கொடுத்தோ
42. மிதரக் கரியஞ்சாதியார் சோழமண்டலத்துள்ள
43. பூமி பாலகரும் வாதாவியைத் திறைகொண்ட
44. வன்னியரு மிவர்களறிய பொது கையொப்
45. பஞ் செங்குந்தம் உ கந்தவேள் துணை உ

# 30. மேல்சேவூர் செப்பேடு

*கோயில் வழிபாடு மீண்டும் நடக்க 24 கோத்திரத்துச் செட்டிகளின் தீர்மானம்*

இச்செப்பேடு விழுப்புரம் மாவட்டம், செஞ்சி வட்டம் மேல்சேவூர் அருள்மிகு ரிஷபேஸ்வரர் கோயில் குருக்களிடம் உள்ளது. படுக்கை வசமாக உள்ள இச் செப்பேட்டிற்கு இடதுபுறம் வார்ப்பு முறையில் சேர்க்கப்பட்ட வேல் வடிவ பிடி அமைப்பு ஒரு துளையுடன் உள்ளது. முன் பக்கம் 20 வரிகளும் பின்பக்கம் 20 வரிகளுமாக நாற்பது வரிகளில் எழுத்துப் பதிவுள்ளது. முன்பக்க இடதுபுற ஓரத்தில் 'அரோசிவன் பாதமே துணை சிவ தர்மம்' என்று 7 வரிகளில் பொறிக்கப்பட்டுள்ளது.

செப்பேட்டில் 'சார்வரி' என்ற தமிழ் ஆண்டுக் குறிப்பு மட்டுமே உள்ளது. சக ஆண்டுக் குறிப்போ, மன்னன் பெயரோ ஏதுமில்லை. எழுத்தமைதியைக் கொண்டு 17ஆம் நூற்றாண்டாகக் கருதலாம்.

சிதம்பரம் பதஞ்சலி ஆசிரமமான மேலைமடம், பிக்ஷாமடம் ஆகியவற்றின் தலைவரான அகோர சிவாசாரியாரும், திருக்கண்ணபுரம் எச்சாராய்யா ஆசாரியாரும், தங்களது சிஷ்யர்களான உலக மாதேவிபுரம் (உலகாபுரம்) 24 கோத்திரத்துச் செட்டிகளை அழைத்து, அச் செட்டிகளுக்கு ஆபத்து ஏற்பட்டபோது சேவூர் இறைவன் தானும் ஒரு செட்டியாய் வந்து ஆபத்தைத் தடுத்து சிறை மீட்டார் என்றும் அவரை செட்டிகள் மறந்துவிட்டனர் என்றும் கூறி, மீண்டும் சேவூர் இறைவனுக்கு நின்றுபோன திருவிழா, வழிபாடுகளை நடத்தவேண்டும் என்று குறிப்பிட்டனர். அதன்படி செட்டிகள் வருடா வருடம் தலைக்கட்டுக்கு 1/2 பணம், கலியாண முகூர்த்தத்தில் 5 பணம்,

---

*கல்வெட்டு* இதழ் எண்.21 ரக்தாட்சி ஆண்டு புரட்டாசித் திங்கள் (அக்டோபர்1984) பக்.3-5. 'மேல்சேவூர் செப்பேடு' என்ற தலைப்பில் கட்டுரையாக எழுதியவர் திரு.பா. கண்ணையன்.

தானப்பணம் 1, திருச்சினத்துக்கு ஒரு பணம் என வசூலித்துக் கொடுத்து சேவூர் இரங்கிமீட்ட சுவாமியார்க்கு தினப்படி வழிபாடு திருவிழா நடத்த ஏற்பாடு செய்தனர் என்ற செய்தியை இச்செப்பேடு குறிப்பிடுகிறது.

## செப்பேடு

### முன் பக்கம்

அரோ சிவன்பாதமே துணை. சிவ தர்மம்.

1. சாருவரி சித்திரை மாத முதல் ஸ்ரீமன் சிதம்பரம் பதஞ்சலியாரா
2. சிரமான மேல்மடம், பிட்சாமடம் அகோர சிவாசாரியார
3. வர்களும் திருக்கண்ணபுரம் எச்சராய்யா ஆசாரியரவர்களு மிருவரும
4. ராய் தங்களுட சிஷாக்களான உலகமாதேவிபுரம் செட்டிகளான யிருபத்து
5. னாலு கோத்தரத்தார் எங்களனவரையும் அழைப்பித்து உங்களுக்கு
6. முன்னாலே வந்த ஆபத்துக்கு யிரங்கி தாமுமொரு செட்டிக ளோடே
7. செட்டியாய் வந்து விவகாரத்துக்கு தாமாய் முன்னிண்ணுக்கொ
8. ண்டு வந்த ஆபத்தைதெ[டு]த்துக் குடுத்து சிறைமீட்டுக் குடுத்த சேவூர் யி
9. ரங்கிமீட்ட சுவாமியாருக்கு முன்னாலே அபிஷேகம் நெய் வே
10. வதனம் திருவிளக்கு தேர்திருவிழா எல்லாக்காரிய
11. மும் நடக்கத்தக்கதாக நடத்திக் கொண்டு வந்த நீங்க
12. ளந்தப்படிக்கு யிப்பமும் நடந்து வரத்தக்கதாக நடத்
13. தி கொண்டு வராமலிருப்பானேன் என்று திருவிளம்
14. பத்தின விடத்திலே தாங்கள் யிருபத்துனாலு கோ
15. த்திரத்தாரனவரும் தெண்டம் பணி விண்ணப்பம்
16. செயிது முன்னாலே யிரங்க மீட்ட சுவாமியாருக்கு
17. அபிஷேகம் நிவேதனம் திருவிளக்கு தேர் திருவி
18. ழா எல்லாக் காரியமும் நடந்தபடி யிப்

19. பவும் நடந்து வரத்தக்கதாக அதுகாரியத்து
20. க்கு எப்படி எத்தனம் பண்ண வேண்டியதே

பின் பக்கம்

21. ா அது காரியத்துக்கு சுவாமியா ரவர்கள் எ
22. ந்தப்படிக்கு புத்தி கட்டளை யிட்டதோ அந்த
23. ப் படிக்குக் கேழ்க்குறோ மென்று விண்ணப்பஞ்
24. செய்த போது சுவாமியாரவர்கள் கட்டளை
25. யிட்ட விபரம் யிருபத்துனாலு கோத்திரத்தார
26. னவருக்கு ஒரு ஒரு தலைக்கட்டு வருஷவருஷத்துக்
27. கு அரைப்பணமும் ஒவ்வொரு கலியாணத்துக்கு முகுர்த்
28. த்திலே அஞ்சு அஞ்சு பணமும் தானப்பணம் ஒண்ணு
29. ஒவ்வொரு திருச்சினத்துக்கு ஒவ்வொரு பணமும் யிப்
30. படியாய் பணம் வாங்கிக் கட்டிக் கூடின பணத்துக்கு வே
31. சவூர் யிரங்கி மீட்ட சுவாமியாருக்கு அபிஷேகம் நெய்வே
32. தன நெய் விளக்கு தேர் திருவிழா யிந்தக் காரியமெல்
33. லாம் முன்போல நடந்துவரத்தக்கதாக நடத்திக்கொ
34. ண்டு வாருங்கோ ளென்று யிப்படிக்கு கட்டளை யிட்டார்
35. கள் அந்தப்படியே பணம் தண்டல் பண்ணி பணம் வ
36. ாங்கி சிவதர்மம் நடந்து வருகுர காரியத்திலே யிந்த சிவத
37. ர்ம கட்டளைக்கு யிருபத்துனாலு கோத்திரத்தார னவருக்குள்
38. ளே யாதா மொருவர் விகாதம் பண்ணினவர் யாவரோ
39. அவர்கள் குருமொழி மரந்த சிஷன் எந்த தோஷத்தி
40. லே போவார்களோ அந்த தோஷத்திலே போவார்கள் வ

# 31. நெற்குப்பைச் செப்பேடு

*கார்காத்த வேளார் நான்கு கரையினர்க்கு காணியாட்சி*

இது சிவகங்கை மாவட்டம் திருப்பத்தூர் வட்டம் நெற்குப்பையைச் சேர்ந்த திரு. பொய்யாமொழி என்பவரிடம் உள்ள செப்பேட்டின் நகலாகும்.

சக வருடம் 1389 (கி.பி 1467) தமிழ் வருடம் தாரண (கி.பி1464) சொல்லப்படுகின்றன. இவை ஒன்றுடன் ஒன்று பொருந்தி வரவில்லை. செப்பேட்டின் காலம் கி.பி 17 ஆம் நூற்றாண்டாகக் கருதலாம்.

கார்காத்த வேளார்பட்டம் 7, நத்தம் 7057, குடிகாடு 1511, பிரமதேயம் 21, தேவதானம் 212 உள்ள பொன்னமராபதிப் பகுதியின் தலைமையிடமான ஒலியூரில் கரைச் சீட்டு 4 கரை புரையமார்க்கு காணியாட்சி முறைப்படி பிரித்துக் கொடுத்த செய்தியை இச் செப்பேடு குறிப்பிடுகிறது. நான்கு கரையினராக 1. மங்காத தேவன் உள்ளிட்டார் 2. பாண்டியர் தேவன் உள்ளிட்டார். 3. நேதிராயப்புரை உள்ளிட்டார். 4. கண்டிய தேவன் நகுலராயன் உள்ளிட்டார் ஆகியோர் சொல்லப் பட்டுள்ளனர்.

இச் செப்பேட்டு விவரம் குடுமியான்மலை, பூலாங்குறிச்சி மலை, கன்னிமலை, பூவாலைக்குடி மலை ஆகிய இடங்களில் கல்வெட்டாகப் பதியப்பட்டதாகவும் குறிக்கப்பட்டுள்ளது.

---

*கல்வெட்டு* இதழ் எண்:20. ரக்தாட்சி ஆண்டு ஆனித் திங்கள்; பக் 20-22. 'நெற்குப்பை செப்பேடு' என்ற தலைப்பில் கட்டுரையாக எழுதியவர் திரு. மா. செந்தில் செல்வக்குமரன், தொல்பொருள் அலுவலர், திருநெல்வேலி.

செப்பேடு

1. ஌ ஸ்ரீ மகா மண்டலீசுபரன் அரிய
2. தள விபாடன் பாசைக்கித் தப்பூ மூவர
3. ாய கண்டன் கண்டனாடு கொண்டு
4. கொண்ட நாடு குடாதான் பாண்டி
5. மண்டலத்தார் அசுபதி கெஷபதி நரபதி
6. தேசு [வின்சு] றிய துரைச்சியபாரம் ப
7. ன்னி யருளாயி நின்ற சாலிக வாக
8. ன சகாத்தம் 1389 கு மேல்
9. ச் செல்லாயி நின்றென் தாறுன ஸ்ரீப
10. அற்ப்பசி மாதம் 17 தேதி சீய சோள கெம்
11. பீர வளர் நாடாகிய கோனாடு பிறாம
12. லை சூள்ந்த பொன்னமராபதி [நா]ட்டில்
13. பொரு நல்லூரு ஆறை மங்கல[ட்டாற்]
14. கிய பொன்னமராபதியில் வரிசைலே
15. அருக்கானி யாச்சிக்கி கற்த்தராகிய காருகா
16. ர்த்த வேளாளர் பட்டம் 7கு நத்தம் 7057
17. க்கு குடிக்காடு 1511 க்கு விறுமத
18. ாயா 21 க்கு தேவதாயம் 212 க்கு விறுமத
19. டு 64 க்கு தலையூராகிய ஒலியூர் கூத்தம் கா
20. ருக்காத்த வேளாளர் கரைச்சீட்டுப் போ
21. ட்டுக் குடுத்த கானியாச்சி யாவது வரிை
22. ச இவ்வூருக் கானியாச்சிக்கி கற்த்தன்னா
23. க வந்த தெச்சினா பூமிக்கி கற்த்தனாகிய சே
24. து காவல்ப் புரையர்மற் மன்னர் வாள்
25. களக்கோட்டை ராயன் பட்டமானங்கா

26. த்தார் பாண்டியர் தேவன் னுள்ளிட்டார்க்கும்
27. நெந்திராயப் புரை உள்ளிட்டாற்கும் கன்டி
28. ய தேவன் நகுலராயன் னுள்ளிட்டாற்கு
29. ம் வீரமுடி காங்கய தேவன் னுள்ளிட்ட
30. ாற்கும் ஆ[க]கரை 4[க்கு] கரைப் புரையர்மா
31. ற் மன்னருக் குடுத்த கானியாச்சி யாவ
32. து ராயமானிய ராயதுரையவகள் சவு
33. ந்திர பான்டியராசர்ப்புரி ஏறி எல்லைக
34. பட அலவை கல் நட்டபடிக்கி கீள் பாற்
35. க் கெல்லை பாற்க் குண்டு புள்ளையாரடியி
36. ல் கல்லுச் சூலத்துக்கு நத்த பிஞ்சை
37. க்கும் மேற்க்கு தென்ம்பாற்க் கெல்[லை]
38. கொட்டை புறக்கிப் படு பாறை புள்ளடி
39. நிலை கல்லு கன்னாயிரபுரம் செங்கல்
40. ...பிஞ்சுக்கும் வடக்கும் மேல்பாற்க்கெ
41. [க] ல்லை கீளக் கோட்டை தலைவாசல்லு
42. க்குக் கிளக்கு வடபாற் கெல்லை மத்தி
43. ல் படுபாறை புள்ளடி ச . . கடிச . . ரம்
44. நிலைகல்லுக்கும் தெற்கு யிந்த நாங்
45. கெல்லைக் குள்ளாகியது மன்னு மனை
46. கோவில்க் குளம் யிடையில் அம்
47. பலம் உம்பளம் யிந்த நாலுவகை
48. ப்புரையர் ஆண்டு கொள்ளுவது யிப்
49. படிக்கி குடுமிமலை கொத்தன் வலக்
50. குறிச்சிமலை கன்னிமலை பூவாலைக்
51. குடிமலை பூலாம்குறிச்சிமலை ஆன்டி
52. ரமடம் கல்வெட்டு தாம்பூர சா

53. தனம் குடுத்தபடி கல்லு புல்லு பூமி
54. சந்திரன் சூரியன் உள்ளவரை
55. யில் ஆள்வது யிப்படி 33 யூர் நாட்ட
56. டு கணக்கு ஆறுகாத வட்டகைமு
57. வேந்திர வேளார் சொல்ப்படித் தி
58. ருப்பூ அளகிய நாயகி ஒலியவ
59. ள் துணை உ

பகுதியின் எல்லையும் இச் செப்பேட்டில் சொல்லப்பட்டுள்ளது. இவர் பல்லக்கு, தீவட்டி, குடை, கொடி, சாமரம் முதலிய பரிவாரங்கள் வைத்துக் கொள்ளத் தேங்காய் தொட்டு உரிமை வழங்கியதும், கோயில் மரியாதை வழங்கியதும் சொல்லப்பட்டுள்ளது.

## செப்பேடு

### முன்பக்கம்

1. உ ஸ்ரீ சாலிவாகன சகார்த்தம் சூாஉயஎ ன் ஸ்ரீ செல்
2. லாநின்ற கொல்லம் ஙாஅயஉ ஸ்ரீ நளஷு ஆடி மீ"எ
3. வ சோமவாரமும் அசுபதி நட்செத்திரமும் சுபயோ
4. க சுபகரணமும் பெற்றனாளில் தென்காசியிலிரு
5. க்கும் சீவிலி மகாராசா அவர்களோம் கிழ(ை)வ
6. னாட்டில்க் கொண்டையன் கோட்டை மறவரில்
7. த் திருவண்ணாத் தேவர் யிந்திரத் தலவனுக்கு நில
8. மைக் காணியாட்சைச் சாதனப் பட்டையம் எழு
9. திக் குடுத்தபடி பட்டையமாவது நம்முடைய வீரி
10. ருப்பு மலையங் காட்டில்ச் சந்திரனென்றொரு துஷ்ட
11. மிருகமிருந்து கொண்டு அனேகம் இராசாக்க
12. ளையெல்லாம் உயிர்வதை செய்து போட்ட படியினா
13. லே அந்தச் சந்திரனென்கிற சங்கு வெள்ளைக் கொடிய
14. னை ஒரு ராசாக்களாகிலும் செயம் பண்ணமாட்டாமல்
15. போனபடியினாலே அப்படிய்க்கொத்த துஷ்டமிறு
16. கத்தைத் தான் வெட்டி செயம் பண்ணின படியினாலே த
17. னக்கு இந்திரத் தலவவென்று பட்டமுங் கொடுத்து
18. த் தண்டிகை பல்லக்கும் ரெட்டைத் தீவட்டியும் செ
19. ரட்டைக் குடையும் மகரக்குடையும் கரங்கு ட
20. ாலு கெருடக் கொடி விருதும் உபைய சாம
21. ரமும் தவளச்சங்கும் நடனாடக சங்கீதம் யி
22. வ்வளவு விருதும் குடுத்து நாகபுரம் யிந்திரபு

23. ரமென்று பேருங் குடுத்து தேங்காயும் தெ
24. ாட்டுக் குடுத்து யிந்திரபுரம் ணாகபுரத்தில்க்
25. கோட்டையும் போட்டுக் குடுத்து திருவண்
26. ணா தேவன் யிந்திரத் தலவனுக்கு நாம் எழு
27. திக்குடுக்கிற உம்பளச் சறுவ மானியப் பூமியாவ
28. து சங்கரநயினார் கோவில் மேலத் தெரு
29. நடு நாராசரத்துக்கும் குத்துக்கல்லுக்கும்
30. மேற்கு சாலைக்கு வடக்கு கருமலைக்கு கிழக்கு வ
31. ாசு தேவநல்லூர் கூனி ஆத்துக்குத் தெற்கு
32. யிந்த நான் கெல்கைக்குள் பட்ட பூமியா
33. வது வேட்டகாறன்பட்டி திருவேட்டனல்
34. லூர் பாண்டியக் கோனார் குளம் இராம
35. லிங்கபுரம் புன்னைக்குளம் புளியங்குடி வ
36. ாசு தேவநல்லூர் தாருகாபுரம் மலை
37. யடிக்குறிச்சி பட்டகுறிச்சி அரியூர் பரி
38. யூர் புதூர் யிருமன்குளம் வீரிருப்பு வேம்ப
39. ங்குளம் நயினார் குளம் இந்திரபுரம் ணாக
40. புரம் முள்ளிக்குளம் வடமலைபுரம் யிது முத
41. லான கிறாமமெல்லாம் சறுவ மானியப கே
42. காட்டைக் கட்டளைக் கிராமமாக தனக்
43. கு நாம் பட்டைய சாதனம் எழுதிக் குடுத்
44. த படியினாலே கல்லுங் காவேரியும் புல்லு
45. ம் பூமியும் உள்ளவரையும் புத்திர பாரம்பரை

பின்பக்கம்

46. யாக சந்திராதித்தர் உள்ளவரையும் மக்கள்
47. மக்களுக்குச் சீதனங்களும் விலை விக்கிறைய
48. தான தருமங்களுக்கும் உருத்தாக ஆண்
49. டனுபவித்துக் கொள்வாராகவும் சங்க

50. ர நயினார் கோவில் ஆவுடைத்தாய் சன்
51. னிதானத்தில் தனக்கு தீர்த்தம் திருநீ
52. று சந்தனம் திருமாலை பாக்கு வெத்திலை
53. முன்னிதாக குடுத்து தேர்வடமும் முன்
54. னிதாகத் தொட்டு தேர் நடத்திவிக்கிற
55. து யிப்படிக்கு சம்மதித்து சாதன பட்டை
56. யம் எழுதிக் குடுத்தோம் சீவிலி மகார
57. ரசா அவர்களோம் யிந்திரத் தலவனு
58. க்கு மிதுக்கு சாட்சி பொக்குஷம் சூரசங்
59. கு ணாயக்கர் கடம்பூர்த் தடியத் தலவன்
60. வடகரை முடி பொறுத்த செம்புலித் தே
61. வன் யிந்த சாதனப் பட்டையம் எழுதினே
62. ன் சங்கர நயினார் கோவிலிருக்கு ச
63. ங்கறலிங்கம் பிள்ளை மகன் மீனாட்சிநாத
64. ன் எழுத்து இந்தப்படிக்கு நாம் எழுதிக்
65. குடுத்த பூமிக்கும் யிந்தப் பட்டையத்துக்கும்
66. ஆதாமொரு ராசாக்கள் சீமை பரிபாலனம்
67. பண்ணுகிற பேர்கள் குடிலம் பண்ணித் தோ
68. ஷத் துரோகம் நினைத்தாலும் வலுவின் பேரி
69. ல் கதட்கைகொண்டாலு மவர்கள் கெங்கை
70. கைக் கரையில்க் காராம் பசுவைக் கொன்ற தே
71. ாஷத்திலும் தீர்த்தக் கரையில்ப் பிராமண
72. ரைக் கொன்ற தோஷத்திலும் போகக் கட
73. வாராகவும் யிந்தப்பட்டுக்க உ
74. ய சங்கரலிங்கம் ஆவுடைத் தாயார் துணை உ

# 25. திருவாடுதுறைச் செப்பேடு

*திருச்செந்தூர் கோயில்த் திருப்பணிக்குக் கட்டபொம்மனின் கொடை*

திருவாடுதுறை ஆதினத்தில் உள்ள செப்பேடுகளில் ஒன்றாக இச்செப்பேடு உள்ளது. இச்செப்பேடு 21 x 13 செ.மீ அளவுடையது. முன்பக்கம் 39 வரிகளும் பின்பக்கம் 19 வரிகளும் ஆக 58 வரிகள் உள்ளன.

சக வருடம் 1700 (கி.பி1778)ம் தமிழ்வருடம் 'விளம்பி' (கி.பி1779) யும் சொல்லப்பட்டுள்ளன. கொல்லம் குறிக்கப்பட்டபோதிலும் ஆண்டு எண் குறிப்பிடப் படவில்லை. செகவீரராம செகவீரபாண்டிய கட்டபொம்ம நாயக்கர் பெயர் குறிப்பிடப்படுகிறது.

திருச்செந்தூர் வள்ளி, தெய்வானை உடனுறை சுப்பிரமணியசுவாமி கோயில் திருப்பணி மற்றும் வழிபாட்டிற்காக செகவீரபாண்டிய கட்டபொம்மநாயக்கரின் ஆட்சியின் கீழ் அமைந்த உம்பளக் கிராமம், சீவிததுக் கிராமம், ஆகிய அனைத்திடங்களிலும் உள்ள எல்லாசாதியினர் வீட்டிற்கும் வருஷம் ஒன்றிற்கு மரக்கால் (குறுணி) தானியம் வீதம் வரிவசூலிக்கப் பிறப்பித்த ஆணையை இச் செப்பேடு குறிப்பிடுகிறது.

முருகனின் பெருமையும், வீரபாண்டிய கட்டபொம்மனின் சிறப்புக்களும் சொல்லப்பட்டுள்ளன. செப்பேட்டினை எழுதியவர் இராயசம் குமாரசாமியா பிள்ளை மகன் சுப்பிரமணியபிள்ளை ஆவார்.

---

*கல்வெட்டு* இதழ் எண்.47 தாது ஆண்டு ஆனி - ஆடித் திங்கள் (1996 ஜூலைத் திங்கள்) பக்.21-26. 'கட்டபொம்மன் வழங்கிய செப்பேடு' என்ற தலைப்பில் கட்டுரையாக எழுதியவர் திரு. ச.கிருஷ்ணமூர்த்தி தொல்லியல் அலுவலர் தொல்பொருள் ஆய்வுத்துறை.

செப்பேடு

1. உ சுவத்திரி சகாற்றம் 1700க்கு மே
2. ல்ச் சொல்லா நின்ற கொல்லம் வருசம் விளம்பி வருசம்
3. உத்தராயணமான தை 28 தேதி குருவாரமும் பூறுவ பட்
4. சத்துத் துவாதெசியும் மாகேந்திரநாக யோகம் பால
5. வாகறணமும் சுபயோக சுபகரணமும் பெத்த மிருகசீ
6. ருச நட்செத்திரத்தில் நாள்ச் செய்த தான சாதனப்
7. பட்டையமாவது குடநாட்டுத் திருச்செந்தூரான தி
8. ரிபுவன மகாதேவி சதுர்வேதிமங்கலம் நா
9. யனாரிளைய நாயினாரான சிருட்டித் திதி சங்க
10. ராத்தி ரோபா வெனுக்கிரக பஞ்ச சுத்த
11. வலிய வீரமயில் வாகன குக்குடத் துவஜ
12. சுரான சுராயிப சகல சத்தியாதமக சுரூப
13. வல்லி தேவநாயகி சமேத சுப்பிரமணிய
14. சுவாமி சன்னிய்தானத்தில்த் திருப்ப
15. ணிக்கு ஆச்சந்திராக்கம் ஆகத் தான
16. சாதனப் பட்டையமாவது பாஞ்சை
17. நகராதிபன் சக்கதேவி அனுகூலன்
18. துட்ட நிக்கரக சிட்ட பரிபாலனன் கெ
19. ச மன்னியர் கோளரி மறு மன்னியர்
20. சற்ப்ப கெருடன் ரணமுக சுத்த வீரன்
21. அருண நயமுக சந்திரோதய ணியலிசை
22. நாடக முத்தமிழாதிபன் கவி சாருவ பூம
23. ன் பச்சைக் குடை பூச்சக்கிறவாளக கு
24. டைக்கதிபன் தண்டுவார் முண்டன் தென்
25. னாட்டு ராயன் ரட்டை வாள்க்கதிபன் மயில்
26. க் கொடிச் சேவல்க் கொடி ரிசபக் கொடி அனு
27. மக் கொடிக் கெருடக் கொடிக் கதிபன் சோ

28. தினிலுகந்த சிவ கந்தனடி மறவாத அடியே
29. ன் செகவீர ராமச் செகவீர பாண்டியக் கட்ட
30. பொம்ம நாயக்கரோம் தான சாதனமாகத்
31. தாம்புர சாதனப் பட்டைய மெழுதிக்
32. கொடுத்தபடி தான சாதனமாகத் தாம்
33. புர சாதனப் பட்டையமானது யென்னு
34. டைய ஆதிக்கத்தில்ச் சேர்ந்த கிறாமம்
35. உண்பளக் கிறாமஞ் சீவிதக் கிறாமஞ் சிறு
36. பாட்டுக் கிறாமம் அமரக் கிறாம முதல் ஆகிய
37. நத்ததுக்கும் சகல சாதிக்கும் கவிள்த்திக்
38. கட்டின கிரக ஒன்றுக்கு வருசாசலங் குறு
39. ணித் தான்னிய வீதம் கோவில்த் தலத்தா

பின்பக்கம்

40. ர் மனுசர் வசம் யீரம் பதர்த் தூத்தி
41. அளந்து கொடுத்து வருவோமாக
42. வும் யிந்தத் தர்மம் ஆச்சந்திராக்க
43. ம் சந்ததிப் பிறதி(வேஷம் ஆதிக்கத்தில்ப்
44. பரிபாலனம் பண்ணிக் கொண்டு வருவோ
45. மாகவும் யிந்தத் தற்மத்துக்கு வாக்குச் ச
46. காயம் சரீர சகாயம் அறிந்த சகாயம்
47. பண்ணின பேர் சாலோக சாமீப சாரூப
48. சாயுச்ச பதம் பெறுவாராகவும் யிப்படி
49. க்குச் சம்மதித்துத் தான சாதனமாக யி
50. ந்தத் தாம்புர சாதன பட்டையம் சுவாமி
51. சுப்பிரமணிய சாமி சன்னிதானத்
52. தில்த் திருப்பணிக்குத் தாம்புர சாதன
53. ப் பட்டையமெழுதித் தானம் பண்ணி

54. க் கொடுத்தேன் செகவீரராம செ

55. கவீரபாண்டியன் கட்ட பொம்ம நா

56. யக்கரோம் உ யிந்த பட்டையமெழு

57. தினேன் ராயசங் குமாரசாமியா

58. பிள்ளை குமாரன் சிவ சுப்பிரமணியன் உ

# 26. எட்டயபுரம் செப்பேடு

*பாளையப்பட்டுகளில் ஆங்கிலேயரின் ஆயுதப்பறிமுதல் குறித்த விளம்பரச் செப்பேடு*

தூத்துக்குடி மாவட்டம் எட்டயபுரத்தில் பாளையக்காரர் அரணமனைக்கு முன்னதாக உள்ள அ/மி எட்டீஸ்வரர் கோயில் நுழைவாயிலின் வலதுபுறம் 4 அடி உயரமுள்ள கல்தூண் ஒன்றில் பொருத்தி வைக்கப்பட்டுள்ளது.

52 X 32 செ.மீ. அளவுள்ள இச்செப்பேட்டில் ஒருபுறம் மட்டும் 33 வரிகளில் வாசகம் உள்ளது. தமிழ் எழுத்தில் எழுதப்பட்டுள்ள இச்செப்பேட்டின் இறுதியில் I.A. BANNERMAN என்று ஆங்கிலத்தில் எழுதப்பட்டுள்ளது.

இச்செப்பேட்டில் சக வருடம் 1721 (கி.பி.1799] ஆங்கில வருடம் 1799, தமிழ் வருடம் சித்தார்த்தி (கி.பி.1799) ஆகியவை குறிப்பிடப்பட்டுள்ளன. வீரபாண்டிய கட்டபொம்மன் தூக்கிலிடப்பட்ட 4 நாட்களுக்குப்பின்னர் இச்செப்பேடு எழுதப்பட்டுள்ளது.

திருநெல்வேலிச் சீமையில் உள்ள பாஞ்சாலங்குறிச்சி, ஏழாயிரம்பண்ணை, நாகலாபுரம், கோலார்பட்டி, காடல் குடி, குளத்தூர் ஆகிய பாளையப்பட்டுகளை ஆங்கிலேய கம்பெனி - தன் ஆட்சியில் சேர்த்து கொண்டது, கட்டபொம்மனாயக்னை சிரச்சேதம் செய்தது ஆகிய செய்திகள் சொல்லப்படுகின்றன. பாளையப்பட்டுகளில் உள்ள கோட்டைகள் தரைமட்டமாக்கப்பட்டு ஆயுதங்கள் பறிமுதல் செய்யப்பட்ட செய்திகள் சொல்லப்பட்டு இனியாரும் ஆயுதங்கள் வைத்துக் கொள்ளக்கூடாது என்பதின் விளம்பரமாக இச்செப்பேடு வெளியிடப்பட்டுள்ளது.

---

செப்பேட்டின் வாசகத்தைப் படித்துக் குறிப்புகளுடன் அனுப்பியவர் திரு.செ.மா. கணபதி காப்பாட்சியர் (ஓய்வு) இராமேசுவரம்.

## செப்பேடு

### முன் பக்கம்

1. ௲௭௱௯௰௯ ௵ அட்டோபர் ௴ ௨ ௨௰ ௨ சகார்த்தம் ௲௭௱௨௰௧ மேல்செல்லா நின்ர சித்தார்த்தி ஸ்ரீ அர்பசி ௴
2. ௭ ௨ திருநெல்வேலிச் சீமையுடனே சந்தப் பாளையப்பட்டுச் சீமைகளிலே யிருக்கப்பட்ட பாளையக்காரர்
3. சகலவிதமான குடியானபேர்களுக்கும் தெரியும்படிக்கி விளம்பரம் பண்ணிவிக்கிரது யென்ன வென்றால் மேசர் பா
4. னர்மென்துரையவர்கள் கும்பினியாரிடத்தில் பெர்ர உத்தரவினாலெ தாகாலத்திலெ கும்பினியார்வர்கள் தி
5. ருநெல்வேலிச் சீமைகளிலே பாளையஞ் சேகரிக்க அகத்தியம் உண்டானதும் பாஞ்சாலங்குரிச்சி யானேழாயிரம்
6. பண்ணையான் நாகலாபுரத்தான் கொலார்பட்டியான் காடல்குடி குளத்தூரானிவர்களனவரும் அஸ்கத்தப் பித்துர்
7. மார்க நடத்தைகளாக நடந்ததினாலே இவர்களுடைய பாளையப்பட்டுக்களைக் கொள்ள நிமர்த்தியம் உண்டானது
8. ம் பாஞ்சாலங்குறிச்சிக் கட்டபொம்மனாயக்கன் அவனுடைய தானாபதி சிவசுப்பிரமணிய பிள்ளை நாகலாபுரத்
9. துப் பாளையக்காரனுக்குத் தமையனாகவும் காரிஷ்தனகாவு மிகுந்த சவுந்தர பாண்டிய நாயக்கனவரகளையு ஸிரச்சேத
10. மாக ஆக்கினை செய்ததும் மேஸர் பனர்மென் துரை யவர்கள் நாகலாபுரம் யேழாயிரம் பண்ணைப் பாளைக்கார ரையுமின்ன
11. தஞ் சிலது முக்கியமாயிருக்கப்பட்ட மனுடர்களையும் அவரவர் பாளையப்பட்டுக்களை நீக்கிவிச்சுச் சென்னைப் பட்டணத்துக்கு
12. அனுப்பிவிக்கிம்படி நிமித்தியம் உண்டானதும் பாளையப் பட்டுகெளிலேயுள்ள கோட்டைகளை யெல்லாமிடித்து அதிலு
13. ள்ள சேர்வைகாறர் சேவகர் குடியான பேர்கள் கையியிலுள்ள ஆயுதங்களையும் வாங்கிக் கொள்ள நிமித்தியம் உண்ட

14. ஈனது மித்தியாதி காரியங்களெல்லா மிதற்கு முன்வகை விபரமாக விளம்பரப்படுத்திய விளம்பரங்களினாலே சகலமா

15. ன பேர்களுக்கும் லோகப் பிரசித்தமாய்த் தெரியப்பட்டிருக்குமே யின்னங் கீழே எழுதப்பட்ட காரிய குணங்

16. களை யெல்லாஞ் சகலமான பேர்களுக்குந் தெரியப் படுத்த வேண்டியது மேசர் பனர்மென்துரையவர்களுக்கு நிமி

17. த்தியமாய்த்தோணி விளம்பரம் பண்விக்கிரது யென்ன வென்றா யினிமேலப்பட்டு யாதாமொரு பாளைய கார

18. னம் ஷெபடி கோட்டை கொத்தள முடையங்கள் போட்டாலும் பீரங்கி ரெக்குலொசா காபிமாரதுகள் வைத்திருந்த

19. ஈலு , மித்தியாதிகளைச் சம்பாதித்தாலுமவர்கள் கும்பினியாருடைய ஆதரவுகளையுமிழந்து அவர்களுடைய பாளையபட்டு

20. களையும் கும்பினியார் கட்டிக்கொண்டு அந்தப்பாளையக்காரனையும் கும்பினியாருக்கு தொணினபடி தேண்டிப்பார்கள்

21. பாளையபட்டுகளிலுள்ள சேர்வைகாரர் சேவுகர் காவல்காரர் குடியான பேர்களிந்தவித மனுடர்களில் யாதாமொரும

22. னுடர்களானாலும் துபாக்கியாகிய கல்வெடி திரிவெடி யீட்டி வல்லயங்கள் பிடித்த பேர்களைக் கண்டாலு மிதுகளை

23. யொளித்து வைத்திருந்த பேர்களைக் கண்டாலு மவர்களை யுயிர்ச் சேதம் பண்ணுவார்களந்தந்தப் பாளையக்காரர

24. வர்களுடைய பாளையபட்டு குடியானபேர்களுடைய நடத்தைகளுக்கு அந்தந்த பாளையக்காரர் தாமே உத்தரவாதம் பண்ண வே

25. ணும் அதல்லாமலும் யாதாமொரு பாளையகாரனுடைய சனங்களாயுத பாணிகளாய் யெந்தச் சீமைகளிலேயாகிலும் சல்லிய

26. ங்களும் பெலபந்தங்களும் செய்யிரதைக் கண்டாலந்தச் சனங்களுக்கு உயிர்ச்சேதமாகிய தண்டினையும் நடக்கிரதும

27. ல்லாமல்ந்தச் சனங்களுடைய பாளையப்பட்டுப்பாளையக் காரனு டைய சீமைகளையும் கட்டிக் கொண்டு அந்தப்பாளையக்காரன்

28. க் கும்பினியாருக்குத் தோணின தண்டினை நடப்பிவிப்பார்களின்ன மரிய வேண்டிய தென்ன மென்றால் மேசர்பனர்

29. மென்துரையவர்கள் பொர உத்தரவுக்காக நடத்திவிச்ச காரியங்களையும் சீமைக்கு சவுக்கியமாகும் படியாய் மேலே

30. ழுதி யிருக்கப்பட்ட சட்டங்களையும் சகலவிதசனங் களுக்கு மிப்போதைக்கு மினிமேலென்ரென்ரைக்கும் அரிந்து

31. மனதிலே வைக்க வெண்டியது மிகவும் யுத்தமாயும், அகத்தியமாயு மிருக்கப்ட்டதான படியினாலே யிந்த விளம்பரத்

32. தை யொரு செம்புத் தகட்டிலே எழுதி அந்தந்தப் பாளையப்பட்டுத் தலக்கிராமங்களில் பயிர் பலமாயிருக்கப்பட்ட யிடங்களிலே

33. அடிக்கும்படியாய் உதரெவாச்சுது அதுவரியவும் இந்தப்படிக்கி மேசர்னர்மென் துரையவர்கள் ௨.

I.A. BANNERMAN
MAJOR

# 27. செங்கல்பட்டு வெள்ளிப்பட்டையம்

*விக்டோரியா இராணி பெயரால் காசுமாலை கொடுத்தது*

காஞ்சிபுரம் மாவட்டம் செங்கல்பட்டில் கோட்டைப் பகுதியிலிருந்த கோதண்டராமசாமி கோயில் வாயில் கதவினில், முன்பு பதிக்கப்பட்டிருந்தது. இன்று இக்கோயில் கோட்டைப் பகுதியிலிருந்து நகர்பகுதிக்கு மாற்றப்பட்டு விட்டது. வாயிற்கதவில் பதிக்கப்பட்டிருந்த இவ்வெள்ளித் தகடு இன்று அதனிலிருந்து எடுக்கப்பட்டு நிர்வாகத்தார் பாதுகாப்பில் உள்ளது.

33X23 செ.மீ அளவுடைய இத்தகட்டின் நான்கு மூலைகளிலும் ஆணிகள் அடித்த துளையுகள் உள்ளன. முன்பக்கம் மட்டும் 11 வரிகளில் வாசகம் உள்ளது.

கலிவருடம் 4987 (கி.பி1886) தமிழ்வருடம் 'விய' (கி.பி.1886) ஆங்கில வருடம் கி.பி 1887 ஆகியவை குறிப்பிடப்படுகின்றன. 'விக்டோரியா சக்கரவர்த்தினி' பெயரும் குறிப்பிடப்படுகிறது.

விக்டோரியா மகாராணியின் 50 வது ஆண்டு நிறைவு விழா அன்னதானம் வழங்கப்பட்டும், இலவச சேலை, வேஷ்டிகள் வழங்கப்பட்டும் கொண்டாடப்பட்டது. அந்நிகழ்வில் ராணியின் பெயர்ச் சிறப்பிற்காக கோயில் தர்ம பரிபாலகர் மா. குப்புச்சாமி நாயுடுவின் குமாரரும் மாவட்ட நீதிமன்ற ரீடருமான மா. ராமானுஜ நாயுடு ரூ300 மதிப்புள்ள தங்கக் காசு மாலை ஒன்றினை கோதண்டராமசாமிக்கு வழங்கியுள்ளார். இச் செய்தி இவ்வெள்ளிப் பட்டையத்தில் பொறிக்கப் பட்டுள்ளது.

---

*கல்வெட்டு* இதழ் 31, பிரஜோற்பத்தி ஆண்டு ஆவணித்திங்கள் (1991, ஆகஸ்ட் திங்கள்) பக்.33-35 'விக்டோரியா ராணியின் வெள்ளிப்பட்டயம்' என்ற தலைப்பில் கட்டுரையாக எழுதியவர் திரு கு. தாமோதரன் துணை இயக்குநர் தொல்லியல் துறை.

## வெள்ளியேடு

1. செங்கல்பட்டு ஸ்ரீ கோதண்டறாமாஸ்வாமி சந்நிதியில் கலியுக
2. காதி 4987-ல் நிகழும் வியஹூ மாசி மீ 6க்கு 1887 பிப்
3. பிரவரி மீ 16 உ நமது விக்டோரியா சக்கரவர்த்தினி அவர்களுடைய
4. 50-வது ஆண்டின் பெருமையை உற்சவ கோலாகலங்களு
5. டன் அன்னதான வஸ்திரதான முதலியவைகளை செய்து யாவறாலும்
6. கொண்டாடப்பட்டது அது சமயத்தில் தேவஸ்த்தான தர்மபரி பாலகர்
7. மா - குப்புசாமி நாயுடுகாரு குமாரர் செங்கல்பட்டு டிஸ்டிரீக்கு கோர்ட்டு-
8. ரீடர் - மா - றாமானுஜ நாயுடுகாரு மாக்ஷிமை தங்கிய நமது சக்கிரவர்தி
9. நியவர்கள் பெயறால் ஸ்ரீ கோதண்டறாமஸ்வாமிக்கி சுமார் 300 முன்னூறு
10. ரூ. விலையுள்ள பொன் காசு மாலையை சமர்ப்பித்து புகழப் பட்டது.
11. சர்வம் ஸ்ரீகிருஷ்ண பிரிதி

# 28. பள்ளப்பட்டி செப்பேடு

*பள்ளப்பட்டி பெரிய நாட்டாண்மைக்கு விருது கொடுத்தமை*

திண்டுக்கல் மாவட்டம், நிலக்கோடடை வட்டம், பள்ளப்பட்டியில் உள்ள திரு ரா. பாண்டியராஜ் அவர்களிடம் இச்செப்பேடு உள்ளது.

23.5X13.5 செ.மீ. அளவுடைய செப்பேடு இது. தலைப்புப் பகுதியில் மொட்டு வடிவக் கைப்பிடிப்பகுதியில் ஒரு சிறு துளையுள்ளது. அதன்கீழ் பீடத்தின் மீது நிறுத்தப்பட்ட திருமண் (நாமம்) காட்டப்பட்டு அதன் இருபுறமும் சூரியன் சந்திரன், சங்கு, சக்கரம் ஆகியவை கோட்டுவமாகப் பொறிக்கப்பட்டுள்ளன. வாசகம் முன்பக்கம் மட்டும 43 வரிகளில் உள்ளது.

வேதமார்க்கத்தை நிலைநிறுத்தியவரும், ஆதிபிரம்ம சகோதரமும், வைணவ மடத் தலைவருமான ஸ்ரீவேதவியாச பட்டர் அய்யங்கார். பள்ளப்பட்டி பெரியநாட்டாண்மை தொட்டய கவண்டனுக்கு விருதுகள் அளித்து ஆணை (திருமுகம்) வழங்கியதை இச்செப்பேடு சொல்கிறது. இதன்படி தேர்த்திருநாள், அரிபூசை, குருபூசை நாட்களில் அனுமக்கொடி, கருடக்கொடி, வெள்ளப்பக்கரை டால், பஞ்சவர்ண டால், மஞ்சள் நிற டால், சுருட்டி, சூரிய பரன் ஆகிய பரிசின்னங்கள் எடுத்தச் செல்ல அனுமதிக்கப்பட்டது. இச்சிறப்புகள் தொட்டயக் கவண்டர் தூளி சமயத்திற்கு நாட்டாண்மை என்பதால் தூளிசமயத்திற்கு கொடுக்கப்பட்டதாகக் கொள்ளவேண்டும். கட்டு சமயத்தார், தூளி சமயத்தார், மலைக்குடியினர், இன்னும் பிறரும் அறிய இப்பட்டயம் வழங்கப்பட்டுள்ளது.

---

இச்செப்பேட்டினைச் சேகரித்துப் படித்தவர் முனைவர் இரா.ப.கருணானந்தன், கல்வெட்டாய்வாளர், உதகமண்டலம். 'தூளி சமயச் செப்பேடு' என்ற தலைப்பில் தொல்லியல் செய்திமடல்: கோவை:4 மடல்:1, 1999 ஜனவரி-இல் செய்திக்குறிப்பு வெளியாகியுள்ளது.

## செப்பேடு

1. ஸ்ரீ இராமசெயம் சொஷ்தத்திறி சாலிவாகன சகார்
2. த்தம் கூசாஉயகூ கலியுக சதார்த்தம் சதூசூாஅ
3. இதின்மேல் செல்லாநின்ற விப ஹூ பைங்குனி மீ
4. யநடஉ சுக்கிரபச்சத்து பஞ்சமியும் சுக்கிரவாரமும்
5. உத்திர நச்செத்திரமும் அமுர்தநாமயோகமும்
6. வாலவாகரணமும் கூடிய இந்த சுபதனத்தில்
7. ஸ்ரீ மத்வேதமாற்க பிறதிஷ்ட்டாவனாசாரிய
8. உபயவேதாந்தாசாரிய ஆதிபிறம்ம சகோ
9. தரறான ஸ்ரீ வேதவியாச பட்டரய்யங்கார் நம்
10. முடைய அம்மயனாயக்கர் சீமை பெஞ்சை நக
11. ரம் பெரியநாட்டாண்மை பள்ளபட்டி தூளி சமை
12. யம் தொட்டயகவுண்டனுக்குத் திருமாளிகையில்
13. விருது குடுத்ததற்கு விபரம் அனுமக்கொடி டால்
14. கெருடக்கொடி டால் வெள்ளைப் பக்கரை டால்
15. பஞ்சவற்ன டால் மஞ்ச டால் வெள்ளைக் குடை
16. சல்லி வில்லிக் குடை சுருட்டி சூரியபரன் யிந்த
17. விருதுகளெல்லாம் நம்முடைய தூளிசமை
18. யம் தொட்டயகவுண்டருக்குக் கட்டளையிட்டபடி
19. யினாலே யிந்த விருதுகள்த் தேர்த்திருனாள்
20. அரிபூசை குருபூசை பந்தி பாவாடை யித்தியா
21. தி யிடங்களுக்கெல்லாம் யிந்தவிருதைப் பிடி
22. த்துக் கொண்டு சுகத்திலே யிருபாராகவும்
23. யிந்த ஸ்ரீமுகத்தைச் சீமைவளியிலே யிரு
24. க்கிற கட்டுசமையத்தார் தூளி சமைய
25. த்தார் பாவாடைத் தாதர்கள் அகாடி
26. த் தாதர்கள் தெசபாகத்தார் சாத்தாத

27. வாள் மேல் னோக்கித் திருமணியிட்ட திரு
28. மலைக்குடியானபேர் அனைவோரும் யிந்த
29. த் திருமுக்த்தைப் பார்த்துக்கொண்டு நம்மு
30. யை தூளி சமையம் தொட்டய கவண்ட
31. னிடத்திற் குடுத்து விடவும் உ ஸ்ரீ வேத
32. வியாஸ உ இந்தப்பட்டயத்துக்கு ஆறாமொருத்தற்
33. வில்லங்கஞ் செய்தாலும் பிரட்டென்று சொ
34. ன்னாலும் விகாத பேதங்கள் செய்தாலும்
35. இப்படியாக கோத்(த)துஷ்ட்டத் துரோகஞ்செ
36. ய்யிரபேறகள் அனுபவிக்கிர பலன் சா்மித்துறோ
37. கம் குருத்துறோகம் ஆலையங்களில் திருவிள
38. க்கை அணைத்தவன் ஸ்ரீவதை செய்தவன் யெந்த
39. பாவத்திலே போவானோ அந்த பாவத்தை அனுப
40. விப்பாறாகவும் இதற்கு நன்மையுடையவர்க்ள் அஷ்
41. ட்டாச்சரத்துக்குடைத்தாகிய வெங்கிடாசலபதி
42. கிறுபை பெத்துவாள்ந்து யிருப்பாராகவும் ஸ்ரீவே
43. தவியாச பட்டரய்யங்கார் வாக்கியம் உ

# 29. மயிலாடுதுறைச் செப்பேடு

*கந்தபுராணத்தில் செங்குந்தரைப் பாடியவருக்கு மரியாதை*

*இச்செப்பேடு மயிலா*டுதுறை தருமபுர ஆதீனக் கல்லூரி முதல்வர் பேராசிரியர் வி.சா. குருசாமி அவர்கள் இல்லத்தில் வழிபாட்டில் உள்ளது.

31.5 x 21 செ.மீ அளவுள்ள இச்செப்பேட்டில் முன்பக்கம் 5 வரிசைகளாக புடைப்பு உருவங்கள் வார்க்கப்பட்டுள்ளன. பின்புறம் 45 வரிகளில் செப்பேட்டின் வாசகம் உள்ளது.புடைப்புச் சிற்பங்களில் முதல் வரிசையின் நடுவில் சிவபெருமான் உமையுடன் கயிலை மலையில் அமர்ந்துள்ள காட்சியும், அவரது இருபுறம் துவாரபாலர்கள், துவாரபாலகரை அடுத்து வலதுபுறம் வள்ளி தெய்வானையுடன் கூடிய முருகர், இடதுபுறம் விநாயகர் ஆகியோர் நின்ற நிலையில் காட்டப்பெற்றுள்ளனர். இரண்டாம் வரிசையில் 9 சக்திகள் (நவசக்திகள்) நின்ற நிலையில் கரண்ட மகுடம் அணிந்து கையில் மலரேந்திக் காட்டப்பட்டுள்ளனர். மூன்றாம் வரிசையில் 9 வீரர்கள் (நவவீரர்) வலக்கையில் வாள் ஏந்தி நின்ற நிலையில் காட்டப்பட்டுள்ளனர். நான்காம் வரிசையில் வாகு மாலையும், மகுடமில்லாத தலை ஒன்றும், இருபுறமும் இழுத்துக் கயிற்றால் கட்டப்பட்ட உறியின்கீழ் நெருப்பும், கயிற்றில் தொங்கும் வாள், வேல், வரிசையாகப் பறக்கும் நான்கு கொடிகள் ஆகியவையும் உள்ளன. ஐந்தாவது வரிசையான கீழ்வரிசையில் கொடி, சங்கு, கண்ணாடி, கவரிகள், துணி, விசிறி, உடுக்கை, எக்காளம், கதை, ஏரில் பூட்டப்பட்ட இரு காளைகள் ஆகியவை புடைப்புச் சிற்பங்களாக உள்ளன.

---

*கல்வெட்டு* இதழ் எண்.*26; பிர*மோதூத - வைகாசி (1990-மே) பக்.31-37 மற்றும் இதழ் எண்.27 பிரமோதூத - ஆவணி (1990-ஆகஸ்ட்) பக்.25-29ல் 'சமயச் செப்பேடு' என்ற தலைப்பில் வெளியானது. கட்டுரையாக எழுதியவர் திரு பொ. இராசேந்திரன், கல்வெட்டாய்வாளர்.

செப்பேட்டில் சகவருடம் 1107(கி.பி.1185), கலிவருடம் 4186(கி.பி.1185), தமிழ் வருடம் விஜய (கி.பி.1185) ஆகியவை குறிக்கப்பட்டுள்ளன. இவை கி.பி.1185க்கு இணையாக வருகின்றன. எனினும் இதனில் உள்ள செய்தி, வாசக அமைப்பு, குறிக்கப்படும் மன்னன் - நரைசிங்க ராயர், செப்பேட்டின் எழுத்தமைதி ஆகியவை இவ்வாண்டிற்குப் பொறுத்தமற்றவை. இச்செப்பேட்டின் காலத்தினை கி.பி.16ஆம் நூற்றாண்டாகச் சொல்லலாம்.

செங்குந்தர் - கைக்கோளர் என்னும் நெசவுத் தொழில் புரியும் சமுதாயத்தினர் தங்களை முருகப் பெருமானின் தொண்டர் வீரபாகுவழி வந்தவர்களாகக் கூறிக்கொள்வர். முருகனைத் தங்கள் குலக் கடவுளாகக் கொண்டு வழிபடுவர்.

முருகன் மீதான கந்தபுராணம் தமிழில் கச்சியப்பசுவமிகளால் எழுதப்பட்டு இன்று பரவலாகத் தமிழில் உள்ள நூலாகும். இச்செப்பேட்டில் திருச்சேஞ்ஞலூரைச் சேர்ந்த ஞானப்பிரகாச சுவாமிகள் கந்தபுராணம் பாடினார் என்றும் அதனில் ‘‘கைக்கோளர் வரலாற்றினை பெருமையை மிகுதியாயிப் பாடி பிரசங்கித்து னாவினால் மழுவெடுத்து அரங்கேற்றி நவவீரர் வம்சம் னிச்சியத்தார்’’ என்றும் அதற்காக இவரை எட்டுக் கால் பீடத்தில் மீது இடங்கை பாவாடை விரித்து, இருபுறமும் விளக்கு வைத்து, பாதபூசை செய்து 1. தறிக்கு ஒருபணம் 2. தலைக்கட்டுக்கு ஒரு பணம் 3. நன்மைக்கு ஒரு பணம் 4. தீமைக்கு ஒருபணம் 5. மூக்கூத்திக்கு ஒருபணம் என கொங்குநாட்டில் உள்ள 72 நாட்டுக் கைக்கோளரும் தருவதெனத் தீர்மானித்து மரியாதை செய்தனர். மேலும் இவர் கைக்கோளர் உள்ள எந்த இடத்திற்கும் சென்றாலும் இவரைப் பாவாடை (துணி) விரித்து வரவேற்று உபசாரம் செய்யவேண்டும் என்றும் தீர்மானித்தனர்.

இந்தத் தீர்மானங்க்ள் காஞ்சிபுரம் ஏகாம்பரர் கோயிலில் முகவாயில் எழுந்தான் என்ற மண்டபத்தில் கூடி எடுக்கப்பட்டு ‘சமயச் செப்பேடு’ என்ற பெயரில் செப்பேடாக ஆவணப்படுத்தப்பட்டுள்ளது.

## செப்பேடு

1. உ கணபதி துணை சிவ மீ<sup></sup>றுபை சண்முகன் துணை
2. ஸொஸ்திஸ்ரீ மன்மகா மண்டலேசுவர முவராய க
3. ண்ட நரைசிங்கராயர் பிரதிராஜிய பரிபாலந

4. ம் பண்ணி யருளா நின்ற சாலீய வாகன சகாப்த்த
5. ம் தூாள கலியுகாப்த்தம் சதுகூா அ௰சு யி
6. தின் மேல் செல்லா நின்ற விஜய ஷூ பங்குனி
7. உ௨ குருவாரம் அசுவதி ஷ்கூஷத்திரமும் சித்தயோகமும்
8. சுபகரணமும் கூடிய சுபதினத்தில் ஸ்ரீகாஞ்சிபுர
9. யேகாம்பரனாத சுவாமி சன்னிதியில் முகவாயி
10. லெழுந்தான் மண்டபத்தில் செங்குந்தர் மற்றுள்ளா
11. ருங் கொறைவற கூடியிருந்து திருச்சேஞ்ஞலூர்
12. சுத்த சைவாசாரியரராகிய னாவினால் மழுவெடுத்த
13. ஞானப்பிரகாச சுவாமியாரவர்களுக்கு உரித்தி
14. ர புத்திரர் ஆணுக்கேறாய்ப் பிறந்தோர் மெயிமீசை
15. யிருந்தோர் வீரர் பாணனென்றும் பொற்கோவில்
16. கைக்கோளரென்னுங் கொங்கெழுபத்து ரெண்டு னா
17. ட்டிலுள்ள செங்குந்தரானவரும் பண்ணிக் கொடுத்த
18. சமையச் செப்பேடு கந்தபுராணத்தில் கைக்கோ
19. ளர் வரலாற்றின் பெருமையை மிகுதியாயிப் பா
20. டி பிரசங்கித்து னாவினால் மழுவெடுத்து அரங்கே
21. ற்றி நவவீரர் வம்சம் னிச்சயித்த சுவாமிகளுக்கு ப
22. ரிசு கொடுத்துத் தீராதென்று யிரட்டை விளக்கு மிட
23. ங்கைப் பாவாடை யிட்டு யெண்கால் பீடத்தே
24. பாதார்ச்சனை பண்ணி சாயிபோகமாயி தரி
25. க்கொரு பணம் தலைக்கட்டுக்கொரு பணம் நன்
26. மைக்கொரு பணம் தீன்மைக்கொரு பணம் மூ
27. க்குத்திக் கொரு பணம் யிந்த அஞ்சு பணமும் வரு
28. த்தனையாக யெந்த மண்டலத்திலுள்ள யெந்த
29. ஸ்கைக்கோள துரைகளும் பாவாடை வரிசை யு
30. பசாரஞ் செய்யவும் யிந்த செப்பேடு தள்ளி யு
31. தாசினமும் ஆக்ஷேபமுஞ் செய்ய கூடாது யிந்த

32. கட்டளை சந்திராதித்தயருள்ள வரைக்குந் தப்பா
33. து யிந்தக்கட்டளை தள்ளி யுதாசன யாக்ஷேப
34. ம் பண்ணின பேர்களுக்கு சிவசக்தி சண்முகன் பா
35. தத்தானை சிவசமயஞ் செங்குந்த நாட்டாராணைப்
36. படி மகா பாதகனகாயாவரவரதினரகங்களை
37. யடைவார்களென்றுஞ் சத்தியமாய் யெழுப
38. த்து ரெண்டு னாட்டிலுள்ள செங்குந்தரானவரு மேகா
39. ம்பரனாத சுவாமி சன்னிதானத்தில் னரைசிங்
40. க ராயர் முன்பாக ஞானபிப்பிரகாச சுவாமியார
41. வர்களுக்கு தாம்பூர சாசனம் பண்ணிக் கொடுத்தோ
42. மிதரக் கரியஞ்சாதியார் சோழமண்டலத்துள்ள
43. பூமி பாலகரும் வாதாவியைத் திறைகொண்ட
44. வன்னியரு மிவர்களறிய பொது கையொப்
45. பஞ் செங்குந்தம் உ கந்தவேள் துணை உ



மயிலாடுதுறை செப்பேடு

# 30. மேல்சேவூர் செப்பேடு

*கோயில் வழிபாடு மீண்டும் நடக்க 24 கோத்திரத்துச் செட்டிகளின் தீர்மானம்*

இச்செப்பேடு விழுப்புரம் மாவட்டம், செஞ்சி வட்டம் மேல்சேவூர் அருள்மிகு ரிஷபேஸ்வரர் கோயில் குருக்களிடம் உள்ளது. படுக்கை வசமாக உள்ள இச் செப்பேட்டிற்கு இடதுபுறம் வார்ப்பு முறையில் சேர்க்கப்பட்ட வேல் வடிவ பிடி அமைப்பு ஒரு துளையுடன் உள்ளது. முன் பக்கம் 20 வரிகளும் பின்பக்கம் 20 வரிகளுமாக நாற்பது வரிகளில் எழுத்துப் பதிவுள்ளது. முன்பக்க இடதுபுற ஓரத்தில் 'அரோசிவன் பாதமே துணை சிவ தர்மம்' என்று 7 வரிகளில் பொறிக்கப்பட்டுள்ளது.

செப்பேட்டில் 'சார்வரி' என்ற தமிழ் ஆண்டுக் குறிப்பு மட்டுமே உள்ளது. சக ஆண்டுக் குறிப்போ, மன்னன் பெயரோ ஏதுமில்லை. எழுத்தமைதியைக் கொண்டு 17ஆம் நூற்றாண்டாகக் கருதலாம்.

சிதம்பரம் பதஞ்சலி ஆசிரமமான மேலைமடம், பிக்ஷாமடம் ஆகியவற்றின் தலைவரான அகோர சிவாசாரியாரும், திருக்கண்ணபுரம் எச்சாராய்யா ஆசாரியாரும், தங்களது சிஷ்யர்களான உலக மாதேவிபுரம் (உலகாபுரம்) 24 கோத்திரத்துச் செட்டிகளை அழைத்து, அச் செட்டிகளுக்கு ஆபத்து ஏற்பட்டபோது சேவூர் இறைவன் தானும் ஒரு செட்டியாய் வந்து ஆபத்தைத் தடுத்து சிறை மீட்டார் என்றும் அவரை செட்டிகள் மறந்துவிட்டனர் என்றும் கூறி, மீண்டும் சேவூர் இறைவனுக்கு நின்றுபோன திருவிழா, வழிபாடுகளை நடத்தவேண்டும் என்று குறிப்பிட்டனர். அதன்படி செட்டிகள் வருடா வருடம் தலைக்கட்டுக்கு 1/2 பணம், கலியாண முகூர்த்தத்தில் 5 பணம்,

---

*கல்வெட்டு* இதழ் எண்.21 ரக்தாட்சி ஆண்டு புரட்டாசித் திங்கள் (அக்டோபர்1984) பக்.3-5. 'மேல்சேவூர் செப்பேடு' என்ற தலைப்பில் கட்டுரையாக எழுதியவர் திரு.பா. கண்ணையன்.

தானப்பணம் 1. திருச்சினத்துக்கு ஒரு பணம் என வசூலித்துக் கொடுத்து சேவூர் இரங்கிமீட்ட சுவாமியார்க்கு தினப்படி வழிபாடு திருவிழா நடத்த ஏற்பாடு செய்தனர் என்ற செய்தியை இச்செப்பேடு குறிப்பிடுகிறது.

## செப்பேடு

### முன் பக்கம்

அரோ சிவன்பாதமே துணை, சிவ தர்மம்.

1. சாருவரி சித்திரை மாத முதல் ஸ்ரீமன் சிதம்பரம் பதஞ்சலியாரா
2. சிரமான மேலைமடம், பிட்சாமடம் அகோர சிவாசாரியார
3. வர்களும் திருக்கண்ணபுரம் எச்சராய்யா ஆசாரியரவர்களு மிருவரும
4. ாய் தங்களுட சிஷாக்களான உலகமாதேவிபுரம் செட்டிகளான யிருபத்து
5. னாலு கோத்தரத்தார் எங்களனவரையும் அழைப்பித்து உங்களுக்கு
6. முன்னாலே வந்த ஆபத்துக்கு யிரங்கி தாமுமொரு செட்டிக ளோடே
7. செட்டியாய் வந்து விவகாரத்துக்கு தாமாய் முன்னிண்ணுக்கொ
8. ண்டு வந்த ஆபத்தைதெ[டு]த்துக் குடுத்து சிறைமீட்டுக் குடுத்த சேவூர் யி
9. ரங்கிமீட்ட சுவாமியாருக்கு முன்னாலே அபிஷேகம் நெய் வே
10. வதனம் திருவிளக்கு தேர்திருவிழா எல்லாக்காரிய
11. மும் நடக்கத்தக்கதாக நடத்திக் கொண்டு வந்த நீங்க
12. ளந்தப்படிக்கு யிப்பமும் நடந்து வரத்தக்கதாக நடத்
13. தி கொண்டு வராமலிருப்பானேன் என்று திருவிளம்
14. பத்தின விடத்திலே தாங்கள் யிருபத்துனாலு கோ
15. த்திரத்தாரனவரும் தெண்டம் பணி விண்ணப்பம்
16. செயிது முன்னாலே யிரங்க மீட்ட சுவாமியாருக்கு
17. அபிஷேகம் நிவேதனம் திருவிளக்கு தேர் திருவி
18. ழா எல்லாக் காரியமும் நடந்தபடி யிப்

19. பவும் நடந்து வரத்தக்கதாக அதுகாரியத்து
20. க்கு எப்படி எத்தனம் பண்ண வேண்டியதே

பின் பக்கம்

21. ா அது காரியத்துக்கு சுவாமியா ரவர்கள் எ
22. ந்தப்படிக்கு புத்தி கட்டளை யிட்டதோ அந்த
23. ப் படிக்குக் கேழ்க்குறோ மென்று விண்ணப்பஞ்
24. செய்த போது சுவாமியாரவர்கள் கட்டளை
25. யிட்ட விபரம் யிருபத்துனாலு கோத்திரத்தார
26. னவருக்கு ஒரு ஒரு தலைக்கட்டு வருஷவருஷத்துக்
27. கு அரைப்பணமும் ஒவ்வொரு கலியாணத்துக்கு முகுர்த்
28. த்திலே அஞ்சு அஞ்சு பணமும் தானப்பணம் ஒண்ணு
29. ஒவ்வொரு திருச்சினத்துக்கு ஒவ்வொரு பணமும் யிப்
30. படியாய் பணம் வாங்கிக் கட்டிக் கூடின பணத்துக்கு வே
31. சவூர் யிரங்கி மீட்ட சுவாமியாருக்கு அபிஷேகம் நெய்வே
32. தன நெய் விளக்கு தேர் திருவிழா யிந்தக் காரியமெல்
33. லாம் முன்போல நடந்துவரத்தக்கதாக நடத்திக்கொ
34. ண்டு வாருங்கோ ளென்று யிப்படிக்கு கட்டளை யிட்டார்
35. கள் அந்தப்படியே பணம் தண்டல் பண்ணி பணம் வ
36. ாங்கி சிவதர்மம் நடந்து வருகுர காரியத்திலே யிந்த சிவத
37. ர்ம கட்டளைக்கு யிருபத்துனாலு கோத்திரத்தார னவருக்குள்
38. ளே யாதா மொருவர் விகாதம் பண்ணினவர் யாவரோ
39. அவர்கள் குருமொழி மரந்த சிஷன் எந்த தோஷத்தி
40. லே போவார்களோ அந்த தோஷத்திலே போவார்கள் உ

# 31. நெற்குப்பைச் செப்பேடு

*கார்காத்த வேளார் நான்கு கரையினர்க்கு காணியாட்சி*

இது சிவகங்கை மாவட்டம் திருப்பத்தூர் வட்டம் நெற்குப்பையைச் சேர்ந்த திரு. பொய்யாமொழி என்பவரிடம் உள்ள செப்பேட்டின் நகலாகும்.

சக வருடம் 1389 (கி.பி 1467) தமிழ் வருடம் தாரண (கி.பி1464) சொல்லப்படுகின்றன. இவை ஒன்றுடன் ஒன்று பொருந்தி வரவில்லை. செப்பேட்டின் காலம் கி.பி 17 ஆம் நூற்றாண்டாகக் கருதலாம்.

கார்காத்த வேளார்பட்டம் 7, நத்தம் 7057, குடிகாடு 1511, பிரமதேயம் 21, தேவதானம் 212 உள்ள பொன்னமராபதிப் பகுதியின் தலைமையிடமான ஒலியூரில் கரைச் சீட்டு 4 கரை புரையமார்க்கு காணியாட்சி முறைப்படி பிரித்துக் கொடுத்த செய்தியை இச் செப்பேடு குறிப்பிடுகிறது. நான்கு கரையினராக 1. மங்காத தேவன் உள்ளிட்டார் 2. பாண்டியர் தேவன் உள்ளிட்டார். 3. நேதிராயப்புரை உள்ளிட்டார். 4. கண்டிய தேவன் நகுலராயன் உள்ளிட்டார் ஆகியோர் சொல்லப் பட்டுள்ளனர்.

இச் செப்பேட்டு விவரம் குடுமியான்மலை, பூலாங்குறிச்சி மலை, கன்னிமலை, பூவாலைக்குடி மலை ஆகிய இடங்களில் கல் வெட்டாகப் பதியப்பட்டதாகவும் குறிக்கப்பட்டுள்ளது.

---

*கல்வெட்டு* இதழ் எண்:20, ரக்தாட்சி ஆண்டு ஆனித் திங்கள்; பக் 20-22. 'நெற்குப்பை செப்பேடு' என்ற தலைப்பில் கட்டுரையாக எழுதியவர் திரு. மா. செந்தில் செல்வக்குமரன், தொல்பொருள் அலுவலர், திருநெல்வேலி.

செப்பேடு

1. ஸ்ரீ மகா மண்டலீசுபரன் அரிய
2. தள விபாடன் பாசைக்கித் தப்பு மூவர
3. ாய கண்டன் கண்டனாடு கொண்டு
4. கொண்ட நாடு குடாதான் பாண்டி
5. மண்டலத்தார் அசுபதி கெஷபதி நரபதி
6. தேசு [வின்சு] றிய துரைச்சியபாரம் ப
7. ன்னி யருளாயி நின்ற சாலிக வாக
8. ன சகாத்தம் 1389 கு மேல்
9. ச் செல்லாயி நின்றென் தாறுன ஷு
10. அற்ப்பசி மாதம் 17 தேதி சீய சோள கெம்
11. பீர வளர் நாடாகிய கோனாடு பிறாம
12. லை சூள்ந்த பொன்னமராபதி [நா]ட்டில்
13. பொரு நல்லூரு ஆறை மங்கல[ட்டாற்]
14. கிய பொன்னமராபதியில் வரிசைலே
15. அருக்கானி யாச்சிக்கி கற்த்தராகிய காருகா
16. ர்த்த வேளாளர் பட்டம் 7கு நத்தம் 7057
17. க்கு குடிக்காடு 1511 க்கு விறுமத
18. ாயா 21 க்கு தேவதாயம் 212 க்கு விறுமத
19. டு 64 க்கு தலையூராகிய ஒலியூர் கூத்தம் கா
20. ருக்காத்த வேளாளர் கரைச்சீட்டுப் போ
21. ட்டுக் குடுத்த கானியாச்சி யாவது வரிசை
22. ச இவ்வூருக் கானியாச்சிக்கி கற்த்தன்னா
23. க வந்த தெச்சினா பூமிக்கி கற்த்தனாகிய சே
24. து காவல்ப் புரையர்மற் மன்னர் வாள்
25. களக்கோட்டை ராயன் பட்டமானங்கா

26. த்தார் பாண்டியர் தேவன் னுள்ளிட்டார்க்கும்
27. நெதிராயப் புரை உள்ளிட்டாற்கும் கண்டி
28. ய தேவன் நகுலராயன் னுள்ளிட்டாற்கு
29. ம் வீரமுடி காங்கய தேவன் னுள்ளிட்ட
30. ாற்கும் ஆ[க]கரை 4[க்கு] கரைப் புரையர்மா
31. ற் மன்னருக் குடுத்த கானியாச்சி யாவ
32. து ராயமானிய ராயதுரையவகள் சவு
33. ந்திர பான்டியராசர்ப்புரி ஏறி எல்லைக
34. பட அலவை கல் நட்டபடிக்கி கீள் பாற்
35. க் கெல்லை பாறக் குண்டு புள்ளையாரடியி
36. ல் கல்லுச் சூலத்துக்கு நத்த பிஞ்சை
37. க்கும் மேற்க்கு தென்ம்பாற்க் கெல்[லை]
38. கொட்டை புறக்கிப் படு பாறை புள்ளடி
39. நிலை கல்லு கன்னாயிரபுரம் செங்கல்
40. ...பிஞ்சுக்கும் வடக்கும் மேல்பாற்கெ
41. [க] ல்லை கீளக் கோட்டை தலைவாசல்லு
42. க்குக் கிளக்கு வடபாற் கெல்லை மத்தி
43. ல் படுபாறை புள்ளடி ச . . கடிச . . ரம்
44. நிலைகல்லுக்கும் தெற்கு யிந்த நாங்
45. கெல்லைக் குள்ளாகியது மன்னு மனை
46. கோவில்க் குளம் யிடையில் அம்
47. பலம் உம்பளம் யிந்த நாலுவகை
48. ப்புரையர் ஆண்டு கொள்ளுவது யிப்
49. படிக்கி குடுமிமலை கொத்தன் வலக்
50. குறிச்சிமலை கன்னிமலை பூவாலைக்
51. குடிமலை பூலாம்குறிச்சிமலை ஆன்டி
52. ரமடம் கல்வெட்டு தாம்பூர சா

53. தனம் குடுத்தபடி கல்லு புல்லு பூமி

54. சந்திரன் சூரியன் உள்ளவரை

55. யில் ஆள்வது யிப்படி 33 யூர் நாட்ட

56. டு கணக்கு ஆறுகாத வட்டகைமூ

57. வேந்திர வேளார் சொல்ப்படித் தி

58. ருப்பூ அளகிய நாயகி ஒலியவ

59. ள் துணை வ

# 32. திருவண்ணாமலைச் செப்பேடு

*24 மனைச் செட்டிகளின் மடம், நந்தவனம் பராமரிப்பு*

கார்த்திகைத் தீபத் திருவிழாவுக்குச் சிறப்புப் பெற்ற தலமான திருவண்ணாமலையில் 24 மனைத் தெலுங்குச் செட்டியார்கள் சங்கத்தலைவர் திரு பெ. கோவிந்தசாமி அவர்களிடம் இச்செப்பேடு உள்ளது.

37.5X20.2 செ.மீ. அளவும் 850 கிராம் எடையும் உள்ள இச்செப்பேட்டில் முன்பக்கத் தலைப்புப்பகுதியின் நடுவில் சிவலிங்கம், நந்தி உருவங்களும் அவற்றின் ஒருபுறம் விநாயகரும் மறுபுறம் முருகன் உருவமும் கோட்டுருவமாகப் பொறிக்கப்பட்டுள்ளன.

இச்செப்பேட்டில் சகவருடம் 1544ம் தமிழ்வருடம் 'ஜெய' வும் குறிக்கப்பட்டுள்ளன. இவை முறையே கி.பி.1622 மற்றும் கி.பி.1636 ஆகியவற்றை ஒன்றுக்கொன்று முரணாகக் குறிக்கின்றன. எழுத்தமைதி கொண்டு இச் செப்பேட்டைக் கி.பி 17 ஆம் நூற்றாண்டு சார்ந்ததாகக் குறிக்கலாம்.

தொடக்கத்தில் கிருதயுகம், த்ரேதாயுகம், த்வாபரயுகம், கலியுகம் ஆகிய நான்கு யுகங்களும் அவற்றின் கால எல்லையும் குறிக்கப்பட்டு அண்ணாமலையார் முறையே ஜோதியாகவும், ரத்ன கிரியாகவும், சொர்ண ரூபமாகவும், சிவரூபமாகவும் ஒவ்வொரு யுகத்திலும் இருந்தார் என்று சொல்லப்பட்டு அண்ணாமலைத் தலத்தின் சிறப்புகள் சொல்லப்படுகின்றன.

---

*கல்வெட்டு* இதழ் 35, பக் 5-10, திருவள்ளுவராண்டு 2023 ஆங்கீரச ஆவணித்திங்கள் (1992 ஆகஸ்ட்), 'திருவண்ணாமலைச் செப்பேடு' என்ற தலைப்பில் கட்டுரையாக எழுதியவர் திரு. கோ. முத்துச்சாமி, கல்வெட்டாய்வாளர்.

திருக்கோட்டு மகாரிஷியின் திருத் தொடையில் பிறந்தவர்களாக 24 மனைச் செட்டிகள் பெருமைபடச் சொல்லப்பட்டு அவர்கள் பெற்ற விருதுகளும். அவர்களது 24 மனைகளும் சொல்லப்பட்டுள்ளன. இவர்கள் ஒன்றிணைந்து திருவண்ணாமலையில் 24 மனையார் தேசங்கா தர்ம மடம், நந்தவனம் ஆகியவை ஏற்படுத்தி வசந்தராய பண்டாரம் என்பரை மடத் தலைவராக்கியுள்ளனர். மடத்தினை நிர்வகிக்கும் செட்டியார் பொறுப்பு வம்மிய கோத்திரம் அண்ணாமலை செட்டியாரிடம் ஒப்படைக்கப்பட்டது.

மடம், நந்தவனம் நிர்வாகச் செலவுகளுக்காக தலைக்கட்டுக்கு ஒரு பணம், கல்யாண முகூர்த்தத்துக்கு ஒரு பணம், பொதி ஒன்றுக்கு அள்ளுக்கால் படி, மகமை ஒரு பணம் வீதம் கொடுக்க ஒப்புக் கொண்டனர். மேலும் மடச் செட்டியார், சங்கீதக் காரன், மாணிக்கத்தாள் (நாட்டியமகள்) விடுதி மாணிக்கத்தாள் கலியானங்களுக்குப் பணமும், அள்ளு கால்படியும் கொடுக்கச் சம்மதித்துள்ளனர்.

## செப்பேடு

1. உ அறுணாசலேயீஷ்பரர் துணையாகவும் உண்ணாமலை அம்மன் து
2. ணை உ ஸ்ரீஅகிலாண்ட கோடி பிறமாண்ட னாயகறாகிய அ
3. றுணாசலயீஷ்பரரை அரியயன் அடியும் முடியும் தேடியும்
4. அரிதாகிய மனசுக்கெட்டாத அண்ணாமலையறாகிய கிரி
5. கெறையதா யுகத்திலே ௰அ லஷ்சத்து உயஅகூ முதல் வ
6. றைக்கு சோதி ரூபங்கொண்டெழுந்தறுளிய் தெறெதா
7. யுகத்தில் உ ௰உ லஷ்சத்து அ௰உகூ முதல் வரைக்கு நவ
8. றத்தினகிரி சுரூபங்கொண்டெழுந்தருளிய் துவாபு
9. ரி யுகத்தில் அ லஷ்சத்திய் சுஉ௰சகூ முதல் வரைக்கு சொற்
10. ன ரூபங் கொண்டெழுந்தருளிய் கலியுகத்தில் ச லஷ்
11. சத்து ரு௰கூ முதல்வரைக்கு சிவாரூபங் கொண்டெழுந்
12. தருளிய் யிப்படி யுகங்கண்ட தோறும் வேறுவேறாகிய சுரூப

13. ங் கொண்டெழுந்தருளி யிருக்கிண்ட மகிமையே. பிற
14. ம்மா விஷ்ண்ணு அடியும் முடியும் தேடுதர்க்கரிதா
15. கிய மகாலிங்கமாய் யெழுந்தருளிய அண்ணாம
16. லையார் ரெண்டும் பெயரெனை யுடைய ஷ்தலம் தொ
17. ன்னூத்தாரு பிறம்மா பூசை பண்ணிய ஷ்த்தலம் கெ
18. வுதம றிஷி ஆஷத்தினாங் பண்ணிய ஷத்தலம் அஷ்ட
19. திக்கு பாலகர் சந்திராதித்தர் பூசை பண்ணிய ஷ்த்த
20. லமாயுடைத்தாகிய தனியுரு திருவண்ணாமலை யென்
21. டும் பெயரெனையும் ஆதி அருபமாகிய சிதமாயி மத்திய
22. பூதமான தெய்வ ரூபமான பருவதராசன் புத்திரி ஆகி
23. ய யீசுபரிக்கி அற்த்த பாகம் அளித்த ஷத்தலம் துற்க்
24. கைனாயகி அம்மன் மயிடாசூரென வெண்ணு படிக்கு
25. லிங்கம் எடுத்து யீஸ்பரிக்கி அளித்த ஷ்த்தலம் வச்சிராங்
26. கித பாண்டியனுக்கு அனுக்கிறகம் பண்ணிய ஷ்த்த
27. லம் நசையிலே யாவதும் வசையிலே யாவதும் ம
28. னப்பூறுவமாக அருணாசல மெண்டும் நினைக்க முத்தி
29. தருவோமெண்டு அபைய அஷ்த்தம் காட்டிய திருக்காற்
30. த்திகை தீபாறத்தினையில் தெரிசினம் பண்ணின எ
31. ன்பத்து னாங்கு லஷ்சம் யோனி பேதமான சீஷரா
32. சிகளுக்கும் மோஷ்சம் குடுக்கப்பட்ட ஷ்த்தலம் சாலி
33. யவாகன சம்வத்ஷத்தும் ௲௫௱௬௰௪ ௳ வறுஷத்து
34. க்கு மேல் செல்லா நிண்ட செய ௵ பிறட்டாசி ௴ ௫ உ
35. ரோகனி நஷ்த்திரம் சதுர்த்தெசி சொக்கிறவாற னாள் தி
36. ருக்காஞ்சிபுரம் யேகாம்பரனாதர் திருக்கோட்டு மகா
37. றிஷி தேவி தேவர் யிருவர் காமாஷ்சி கமலைபதி காமா
38. ஷி சிவத்தினால் வந்த கன்னாலத்தார் திருக்கோட்டு கத
39. வறைகள் குலத்தினுயர்ந்ததோர் திருக்கோட்டு ம
40. காறிஷி திருத்தொடையில் பிறந்தோர் சமைய ஏகா

41. லாகலன் சங்கீத லோலா சமைய உத்தநன்டா சமை
42. ய தும்ம பிறமத்தார் சமைய ணாளியணள் சமைய கோ
43. லாகலா உத்தமறக்ள் உச்சித வீரப்பண்ணர் சத்தியஅரி
44. ச்சந்திரன் அவதாரக் குடையிலும் கணக்கிலும் வெத்தி
45. லும் பெரியோர் குணமுடைய மனயதயிரிய தேவனுகா

பின் பக்கம்

46. தேவனி கேசர சமையத்தோர் கண்ட கணக்கத்தார் மாலை
47. மார்பர் சிங்க கொடித்தலைவர் யொங்காளி பட்டவற்
48. த்தனர் குஞ்சரம் வெண்ண வர் ராயசமுக்கம் வெண்
49. ணவர் சக்கரைக் கோட்டை கெளிச்சவர் வெள்ளை
50. வட்டக்குடை வெ(ண்)ங்கரி வெண்ங் கொடி வெள்ளை வெ
51. ன்ஞ் சாமரம் விசைய கோலாகலர் தச்சுருட்டி ஆல
52. வட்டம் பகல் தீவட்டி பஞ்சவிருது விருதுகள் பிடித்தவர்
53. மது பானை பால் பானை ஆனதும் மாட்டுத் தலை மான் தலை
54. ஆனதும் திருக்காஞ்சிபுரம் காமாச்சி அம்மன் வரப்பிறசா
55. தத்தினால் வந்த மும்முடியவன் வழமையவன் வரசிவன்
56. கெஞ்சி வங்கிஷவன் மக்கிடவன் சொற்பனவன் எடு
57. க்கவயன் தரிச்சுவன் கையிறவன் குதிரை வல்லவன்
58. தவிலையவன் நெட்டையவன் கவிலவன் கொலவன்
59. வெலிவங்கிஷவன் யக்கவன்னந் தவன் பலிதயவ
60. ன் கெந்தியவன் வருமயவன் கொறகவன் கோட்டை
61. யவன் சூரியவன் கெடிகிரியவன் யிவர்கள் யிரு
62. வத்துனாலு மனையார் பூலோக கயிலாசம் திருவண்ணா
63. மலை அறுணாசலீஷ்பரர் உண்ணாமுலை அம்மன்
64. சன்னிதானத்திலெ யிருவத்து னாலு மனையார்
65. தெலுங்கர் தற்ம மடம் ணந்தவானம் இயிதுதற்ம
66. மங்களுக்கு னாங்கள் அனவரும் கூடி வசந்தராய

67. பண்டாறத்தை நிற்ன்னையம் பன்னி வச்சோம்
68. யிதுக்கு மடம் நந்தவானம் உள்பட தலைக்கட்டு
69. ஒன்னுக்கு ஹ்ப பணம் வ கலியாணத்துக்கு முகுற்த்த
70. ம் ஒன்னுக்கு பணம் வ பொதி ஒன்னுக்கு அள்ளுகால்
71. படி வ மகமை பணம் அரைக்கால் வ செட்டியாற்கு பொதி
72. ஒன்னுக்கு வ பணம் மா வ கலியாணத்துக்கு பணம் க வ
73. சங்கீதக்காறனுக்கு கலியாணத்துக்கு பணம் க வ கட்டு காணி
74. க்கை பணம் கவ மாணிக்கத்தாளுக்கு கலியாணத்துக்கு பணம் க வ
75. விடுதி மாணிக்கத்தாளுக்கு கலியாணத்துக்கு பணம் அரை வ
76. பொதி ஒண்ணுக்கு அள்ளு கால்படி யிந்த படிக்கி
77. னாலு சமுத்திரம் உள்பட யிருக்கப்பட்ட யிருவத்துனா
78. லு மனையாரும் சந்திர சூரியாள் உளமட்டுக்கும்
79. தற்மம் பண்ணிகுடுத்தது யிதுக்கு ஆதாமொருத்தர்
80. கன்னாலே பாத்து காதினாலே கேட்டு யிந்த தற்மத்து
81. க்கு யாதமொருத்தர் ஆத்தா குத்தம் ஆகாத்தியம் பண்ணி
82. னால் காசியிலே கெங்கைக் கறையிலே காறாம் பசுவை
83. கழுத்தறுத்த பாவத்திலேப் போகவும் கோவத்தி பிறம
84. மத்தி செய்த பாவத்திலே போக கடவேனாகவும் அன்
85. ணாமலையார் உண்ணமுலை அம்மன் துணை ஆகவும்
86. உ யிந்ததற்மம் நடபிக்குவார்கள் உத்திர கோத்திரமாயி
87. யிருக்க வேணும் சிவமயம் உ ராம செயம் உஉஉ
88. யிந்ததற்மம் நம்ப வயிச மனை க்கு செட்டியாறாகிய வம்மிய கோ
89. த்திறம் அண்ணாமலை செட்டியார் வசம் ஒப்பிச்சோம் அவக யி
90. ந்த தற்ம விசாறணை பாற்க்குறது அவருக்கு வரத்தினை பனமு
91. ம் அள்ளுபடிவும் வெகுமதியும் நடவிக்குறதுக்கு செயம்.

# 33. சேடப்பட்டி செப்பேடு

*அம்பலக்காரர் மடம் ஏற்படுத்தி அதன் பண்டாரத்துக்குக் கொடுத்த பட்டயம்*

இச்செப்பேடு மதுரை மாவட்டம் சேடப்பட்டியில் உள்ள அம்பலகாரர் மடத்தில் உள்ளது.

32 x 10.5 செ.மீ அளவும் 626 கிராம் எடையும் உள்ளது. செப்பேட்டின் மேல்பகுதி மூன்று வளைவுகள் உடைய இதழமைப்பும் நடுவிதழில் துளையுமுள்ளன. முன்பக்கம் செப்பேடு ஐந்து கட்டங்களாகப் பிரிக்கப்பட்டு அதனில் புடைப்புச் சிற்பங்கள், வார்க்கப்பட்டுள்ளன. பின்பக்கத்தில் தொடங்கி 19 வரிகளும் உருவங்கள் இட மின்மையால் மீண்டும் முன்பக்கத்தில் உருவங்களிடையே 9 வரிகளுமாக வாசகம் 28 வரிகளில் உள்ளது. மேலும் இடமின்மையால் செப்பேடு முற்றுப்பெறவில்லை.

முன்புறம் உள்ள உருவங்களின் விவரம்: முதற் கட்டத்தில் சூரியர் சந்திரன் உருவங்களின் இடையே இடம்புரி விநாயகர் உருவம் உள்ளது. இரண்டாவது கட்டத்தில் வலது பகுதியில் மயில் மீதமர்ந்த முருகன் உருவமும், இடது புறத்தில் பத்மாசன மிட்டு அமர்ந்த தேவியின் உருவமும் அதன் கீழ் காளாஞ்சி, பணிக்கம் முதலிய பரிகலன்கள் உள்ளன. மூன்றாவது கட்டத்தில் குதிரையின் மீது வீசும் நிலையில் ஈட்டியுடன் விரைந்து செல்லும் மன்னன் உருவமும், அதன்பின் பணியாள் இடையில் வளைதடியுடன் மன்னனுக்கு குடை பிடித்த நிலையிலும் காட்டப்பட்டுள்ளது. நான்காவது கட்டத்தில் வீரன் இடுப்பிலும் வலது கரத்திலும் வளைதடி கொண்டும் இடதுகையில் வீசும் நிலையில் ஈட்டிகொண்டும் காட்டப்பட்டுள்ளான். அவனது பின்னபுரம் ஒருவீரனும் முன்னதாக வளைதடிகள் இரண்டு பறந்துவரும்

---

*கல்வெட்டு* இதழ் எண்.49. தாது ஆண்டு தை-மாசித் திங்கள் (1997 ஜனவரித் திங்கள்) பக்.27-30. 'சேடப்பட்டி செப்பேடு' என்ற தலைப்பில் கட்டுரையாக எழுதியவர் திரு. மா. சந்திரமூர்த்தி, பதிவு அலுவலர், சென்னை.

நிலையிலும் உள்ளன. ஐந்தாவது கட்டத்தில் இருகாளைகள் பூட்டிய ஏர்கொண்டு உழும் உழவனின் உருவம் உள்ளது.

செப்பேட்டில் கலிவருடம் 4788ம் (கி.பி.1687) தமிழ் வருடம் 'யுவ' (கி.பி.1695) வும் உள்ளன. ஒன்றுக் கொன்று பொருந்தி வராத நிலையில் இச்செப்பேடு கி.பி.17ஆம் நூற்றாண்டின் இறுதியில் வார்த்து எழுத்துப் பொறிக்கப்பட்டது எனலாம்.

நெடுங்குள நாட்டு ஆலங்குளமான, பெரியகுளத்தைச் சேர்ந்த தாமரைக்குளம், சேடப்பட்டி, மேல்மங்கலம், வடுகர்பட்டி, அழகிரி நாயக்கன்பட்டி ஆகிய ஊர்களில் உள்ள காத்தான் அம்பலம், தம்பான் அம்பலம், குஞ்சாய அம்பலம் ஆகியோர் வழிவந்தவர்கள் ஒன்று கூடி, மடம் ஒன்று ஏற்படுத்தினர். அம்மடத்தலைவராக பாணி பார்த்திப அரையன் மகன் சங்கரமூர்த்தியை அமர்த்தி அவருக்கு வருவாயாக வர்த்தனை தானியம், ஏழு கலம், கலியாணம் ஒன்றுக்கு நாலுபடி அரிசி, அன்னிக் குடிக்கு மூன்று பணம் ஆகியவை வழங்குவதாகப் பட்டயம் எழு-திக் கொடுத்துள்ளனர். செப்பேட்டின் முதல் 12 வரிகளில் அம்பலக்காரரின் சிறப்பு சொல்லப்பட்டுள்ளது.

## செப்பேடு

### பின் பக்கம்

1. சுபத்திசிறீமன் தாலிக்கு வேலி தளந்தவர் தாபரம் அஞ்சனங் காற்கும் அடை
2. கலங் காத்தான் செங்காவிக் கொடியுடையோன் காவிக் குடையுடையே
3. ான் காவிச் சிவிகையுடையோன் அரவணியரனார் ரகத்தில் வேர்வை கரமது
4. வாங்கி காசி மேலுட னிலவணிச்சடை யுள்ளானித்த புத்திரராகிய ச
5. ங்கு சேர்படை வெண்சாமரையுடன் துலங்க யிவர் சுரூபமாய் வந்த வ
6. ரிகல் மிகத் தோன்றி யிலமுகிலெனுங் கச்சியர் நகரி காவலராகிய காவல

7. ரீட்டிக்கு மாலை யெதுத்தே யிட்டவர் மட்டில்லாச் சேனையை சோட்

8. டையால் வென்றவர் வேளமும் பரியிமிகுந்திடு முன்னாள் சோழனை

9. அன்று துலங்கக் கட்டி முறைப்பாடு வெட்டி முறியக் குத்தி பிற்ப்பாடு வெ

10. ட்டிப் பேர் பாடிய தராசுரவனை யுதுரம் படையற வெட்டும் தரவிட்டிகமுள்ள சஹா

11. ய வீரர் வெள்ளைக் குடைக்கும் வெண் சாமரைக்கும் கள்ளவே வாய்த்த பெருமான் வா

12. ழி வாழி வையகம் வாழி ஊழிகாலம் உகந்திட வாழியே என்ற கலியுக சகார்த்தம் சகூ

13. எா அய அ ன் மேல் செல்லா நின்ற யுப ஹூ அனி மீ யரு உ நெடுங்குள நாட்டாலங்குளமா

14. ன பெரியகுளத்திற் சேர்ந்த தாமரைக்குளம் சேடர்பட்டி மேல்மங்கலம் வடுகர்பட்

15. டி அழகிரினாயக்கன்பட்டி இவடத்திலுண்டாகிய அம்பலகாறரில் காத்தானம்பலகாற

16. ன் தாம்பான(ா)ம்பலகாறன் குஞ்சாயம் பலகாறன் காரனம்பலகாறன் இவர்கள் (உ)

17. ண்டாகிய உறவின்முறை பவன அம்பலகாறனை வோரும் இன சம்மதமாய் மடவா(லைய)

18. முண்டு செய்து பாணி பார்த்திபவனரைய னவர்கள்ப் புத்திரன் சங்கரமூர்த்திப் பண்டாரத்து

19. க்குப் பட்டையங் கொடுத்தபடி இற்றைனாளிந்த மடபதிக்கு வருத்தினை எருக

முன்பக்கம்

20. தவசம் க ஹூ அன்னிக்குடிக்கு ரூ பணமும் கலியா

21. ணத்துக்கு னாலு படியரிசியுமென்று

22. உறவின் முரையாரனைவே
23. ஆருங் கூடி கையெழுத்திட்டு பட்டையமு
24. குடுத்தோம் அந்தப்ப
25. டிக்கு வாங்கி கொண்டு மடவாலையம்
26. வளம் பண்ணிக் கொண்டு சுகதிலே
27. இருக்கவும் இந்தத் தன்மத்துக்கு யா
28. தாமொருவனகுதம் நினைச்ச பெயர் கெங்கை*

* செப்பேடு முற்றுப்பெறவில்லை



சேடப்பட்டி செப்பேடு

# 34. ஆழ்வார் பேட்டை செப்பேடு -1

*பஞ்சவாத்யக்காரரின் தலைவருக்கு மரியாதைச் சிறப்புக்கள்*

சென்னை ஆழ்வார்பேட்டையில் உள்ள திருமதி லில்லி விஜயராகவன் சேகரிப்பில் உள்ளது.

33 X 16 செ.மீ அளவும் 790 கிராம் எடையும் உள்ளது. முன்பக்கத்தில் 5.5.செ.மீ அளவு வரை கோட்டுருவமாகச் சிவலிங்கம், அதன் முன்னதாக தீபம் ஒரு கையிலும், மணி ஒருகையிலும் கொண்டு வழிபாடு செய்யும் அர்ச்சகர், அவரது பின்புறமாக ஐந்து வகை இசைக்கருவிகளான தோல்கருவி, துளைக்கருவி, மிடற்றுக்கருவி, நரம்புக் கருவி, கஞ்சக்கருவி ஆகியவை கோட்டுருவமாகப் பொறிக்கப்பட்டுள்ளன.செப்பேட்டின் ஒரு சிறு பகுதி உடைந்துள்ளது.

இச் செப்பேட்டில் சக வருடம் 1655 (கி.பி.1733) கொல்லம் 908 (கி.பி.1732-33) தமிழ் வருடம் பிரமாதீச (கி.பி.1733) ஆகியவை குறிப்பிடப்பட்டுள்ளன. அரசர் பெயர் ஏதுமில்லை. இச்செப்பேடு கி.பி.1733ல் வழங்கப்பட்டது எனலாம்.

செப்பேட்டில் முள்ளிநாடு, பாபநாசம் ஆகியவை குறிக்கப்படுகின்றன. முள்ளிநாடு திருநெல்வேலிமாவட்டம் அம்பாசமுத்திரம் பகுதியாகும். பாபநாசம் அங்கு உள்ள நீர்வீழ்ச்சிக்குப் பெயர் பெற்ற இடமாகும். கொல்லம் ஆண்டு குறிப்பிடும் மரபு தென்பாண்டி நாட்டு மரபாகும்.

பாபநாசம் இறைவன் முன்பாக நாலு திசையைச் சேர்ந்த நாகபாசத்தூர் ஆகிய பஞ்சவாத்யக்காரர்கள் அனைவரும் கூடி வழிபடவந்தோர், தலத்தார், ஸ்தானத்தார், தலைவர்கள் முன்னிலையில்

---

*கல்வெட்டு* இதழ் 60-61. சுபானு ஆண்டு ஆனித்திங்கள் (2003 ஏப்ரல்) பக்கம் 38-41. "நாலுமுகநாக பாசத்தூர் செப்பேடு' என்ற தலைப்பில் கட்டுரையாக எழுதியவர் திருமா. சந்திரமூர்த்தி. துணை இயக்குநர். சென்னை.

அத்தாளநல்லூரைச்சேர்ந்த மாதவன் பிள்ளை மகன் வீரபத்ர வினோதியார்க்கு 'நாகபாசநரலங்கராயன்' என்ற பட்டம் கொடுத்துச் சிறப்பித்துள்ளனர். பெரிய ஊர்களில் உள்ள நாக பாசத்தார் வருடந்தோறும் பத்து பணமும், சிறிய ஊர்களில் உள்ளோர் ஐந்து பணமும், தங்களிடையே நிகழும் கலியாணங்களுக்கு ஒரு பணமும், பிற சில சலுகைகளும் கொடுப்பதாக முடிவு செய்து இச்செப்புப் பட்டயம் பாபநாசம் இறைவன் சன்னதியில் எழுதிக் கொடுத்துள்ளனர்.

பஞ்சமா சப்த்தமான கருவிகள் என்று முன்சொன்ன ஐந்து வாத்தியக் கருவிகளும் இச்செப்பேட்டில் பெயர் குறிப்பிடப்படுகின்றன.

## செப்பேடு வாசகம்

1. சுபமெற்கீற்றி சுபத்திறி சாலிவாகன சகார்த்தம் ௲
2. ௬௰௫-ன் மேல் செல்லா நிண்ற கொல்லம் ௲அக்கு பிறமாதிட்
3. சத ௵ உத்திராய்யனத்தில் வசந்திருதுவால சித்திரைமா
4. தம் ௬ௗ பூறுவ பட்சத்தில் திறிதிகையும் சுக்கிற வாரமு
5. ம் ரோகிணி நச்செத்திரமும் சுபயோக சுபகரணமும்
6. பெற்ற இற்றனாள்ச் செய்த நாகபாசத்தார் சாதன
7. மாவது முள்ளிநாட்டு அத்தாளநல்லுரிலிருக்
8. கும் மாதவன் பிள்ளை மகன் வீரபத்திர வினோதியாருக்
9. கு நாலு முகத்திலே யிருக்கிற நாகபாசத்தாரும்
10. சாதனம் யெளுதிக் குடுத்த பரிசாவது இற்றனாள் பா
11. வனாசத்திலே கத்தாக்கள் எளுந்தருளியிருக்கிற
12. போது நாலு முகத்திலே நாகபாசத்தாரும் கத்தா
13. க்கள் ஏவினவாரு சுவாமியைக் காணவந்த பெரும் கத்
14. தாக்களு சமுகத்திலே காத்திருக்கிற நாகபாசத்தாரும் சகல
15. ருங் கூடி பாவனாச சுவாமி சன்னிதானத்திலே தான
16. த்தார் தலத்தார் முன்பாக வீரபத்திர வினோதியார் தொளி
17. லும் பார்த்து பஞ்சமா சத்தமான தோறக் கருவி துளைக்கரு
18. வி மிடற்றுக் கருவி நரம்புக் கருவி கஞ்சக் கருவிக்குள்ப்பட்ட

19. நாக பாசத்தாரும் நாகபாச நரலங்கராயனென்றுப் பேரும்
20. குடுத்து பட்டம் தரிபட்டமும் கட்டி வெகுமானமும் பண்ணிவி
21. த்து கொலிசம் போடுவிச்சு பட்டணப் பிறவேசமும் பண்ணி
22. விச்சு பேரூர் நாகபாசத்தார் வருஷத்துக்குப் பத்துப் பத்து பண
23. மும் சிற்றூர் நாகபாசத்தார் வருஷத்துக்கு அஞ்சுபணமும்
24. நாகபாசத்தார் (கலி) கலியாணத்துக்கு ஒரு பண. . .
25. ண்ணுக்கு ஒரு பணமும் பேர் கொண்ட. . .
26. மாணிக்க மிரண்டு பணமும் மற்றபாக. . .
27. கு ஒரு பணமும் அரங்கேத்தத்துக்கு. . .
28. ணமும் பேர் குடுத்த போது ஒரு. . . .
29. வந்திருந்த னாளைக்கு வரை. . .
30. க்கும் சாப்பாடு பாக்கு வெற்றிலையும் இந்த
31. ப்படிக்கு நாகபாசத்தார் சகலரும் கூடி பா
32. வனாசத்திலே பட்டையம் எழுதி குடுக்க கட்
33. டளையிட்டோம் நாகபாச நரலங் கராயனு
34. க்கு இந்தப் படிக்கு பஞ்சமா சத்தமான தே
35. ாறக் கருவி துளைக் கருவி மிடற்றுக் கருவி
36. நரம்புக் கருவி கஞ்சக் கருவிக்குள்ப் பட்ட
37. நாகபாசத்தாரும் பாத்திரபேணங்கமு
38. ம் அபிமாணிச்சுக் கொண்டு மாதா பிதாக் குருவு
39. க்கு புண்ணியமாக தியாகம் குடுத்து வருவாராகவு
40. ம் இந்தக் காரியத்துக்கு விக்கினம் பண்ணினவர்கள்
41. கெங்கை கரையிலே காராம் பசுவைக் கொன்ற
42. தோசத்திலே சிறிசத்தி பிறமசத்தி பண்ணின தோ
43. சத்திலே போவாராகவும் இந்த காரியத்து
44. க்கு அனுகூலம் பண்ணினபேர் அசுவமே
45. த யாகம் பண்ணின பலத்தை யடைவாராகவும் இந்

46. தப் படிக்கு வடமுகம் தென்முகங் கீள்முகம் மேல்
47. முகம் நாலுமுகத்திலே யிருக்கிற நாகபாசத்தாரு
48. ம் தானத்தார் தலத்தார் சகலரும் கத்தாக்கள் மு
49. ன்ம்பாக சொல்ல இந்தப் பட்டையம் எழுதினே
50. ன் கலியுகத்து மெய்ய வாத்தியார் மகன் சொக்க
51. னாதன் எழுத்து உ பாபனாச்சுவாமி உலகம்மன்
52. துணை உ.

---

செப்பேட்டின். வலது கீழ்ப்பகுதி சற்றே உடைந்துள்ளது. எனவே அவ்வரிகள் புள்ளியிடப்பட்டுள்ளன.

# 35. கோடியக்காடு செப்பேடு

*பூசைக்காணி, தேவதானம், தேவர்பணி உரிமைகள் கொடுத்தது*

நாகப்பட்டினம் மாவட்டம் வேதாரண்யம் வட்டம் கோடியக்காட்டில் உள்ள திரு டி.ஆர் ஆர்.வி. சாமி என்ற திரு வேதநாயகம் முதலியாரிடம் இச்செப்பேடு உள்ளது.

20 x 33 செ.மீ அளவுடைய இச்செப்பேட்டில் முன்பக்கம் 46 வரிகளும் பின்பக்கம் 39 வரிகளுமாக 85 வரிகளில் வாசகம் உள்ளது.

செப்பேட்டில் சகவருடம் 1208 (கி.பி.1286) கலி ஆண்டு 4374 (கி.பி.1273) தமிழ் வருடம் 'ஜய' ஆகியவை குறிக்கப்பட்டுள்ளன. கோயில் திருப்பணி செய்ததாகப் பொதுவாக ஸ்ரீராஜராஜேந்திர சோழ ராஜாக்கள் குறிப்பிடப்படுவது தவிர செப்பேட்டின் காலத்திய மன்னர் பெயர் இல்லை. செப்பேட்டின் எழுத்தமைதி 18ஆம் நூற்றாண்டினதாகக் கொள்ளலாம். இந்நூற்றாண்டில் 'ஜெய'வருடம் 1714 மற்றும் 1774 ல் வருகிறது. இவ்விரு ஆண்டுகளில் ஒன்றாக இச்செப்பேட்டின் காலத்தைச் சொல்லலாம்.

இச்செப்பேடு திருக்காளஹஸ்தியைச் சேர்ந்த சைவசிகாமணியான வயிரவநம்பியாபிள்ளை பொன்னம்பியார்க்கு திருவாசி என்ற கிராமமும் திருக்கோடீஸ்வரர் கொழக கோயில் பூசை உரிமையும், தேவதானம், தேவர் பணிகளும் அக்கோயில் ஆதிசண்டேஸ்வரர் பெயரால் பட்டயமாகக் கொடுக்கப்பட்டதைக் குறிக்கிறது. ஆதிசேது மடத்து முதலிகள், மாகேஸ்வரர், கோயிலார்,

---

*கல்வெட்டு* இதழ் எண்.47. தாது ஆண்டு ஆனி - ஆடித்திங்கள் (1996 ஜூலைத் திங்கள்) பக்கம் 1-8. 'கோடியக்காடு செப்பேடு' என்ற தலைப்பில் கட்டுரையாக எழுதியவர் திரு. நடன காசிநாதன், இயக்குநர், தொல்பொருள் ஆய்வுத்துறை. சேகரித்தவர் திரு. ஆர். நாராயணன், இளநிலைப் பொறியாளர், தஞ்சாவூர்.

அரசினர் (ராசகரம்), அஞ்சுதேசத்து பரிகல சனங்கள் ஆகியோர் கோடீஸ்வரர் கோயிலில் கூடி எடுத்த முடிவாக இவ்வுரிமை சொல்லப் படுகிறது. கடற்கரைப் பகுதி ஆதலால் தீவுகள் திட்டுகள் உப்பளங்கள், சேதுசாலை சேதுமடம் முதலியவை சொல்லப்படுகின்றன.

## செப்பேடு

1: ஸ்வஸ்தி ஸ்ரீசாலிவாகன சகாப்புதம் 1208 கலியுகாத்தம் 4374 இதின்மேல் செல்ல

2. ா நிண்ட ஜய ஹூ வ்ருஷபமாகிய வைய்யாசி மாதம் 18உ பூர்வபக்ஷத்து ஆதிவாரமும் த்ரி

3. தியெயும் ரேவதி நக்ஷத்திரமும் பெத்த புண்ணிய தினத்திலே ஸ்ரீராஜராஜேந்த்ர சே

4. ாஷராஜாகள் சுபஸ்ரீ சக்ரவத்திகள் திருப்பணி கொண்டருளிய ஸ்வ

5. ஸ்திஸ்ரீ திருகோடீச்வாக் கொழக கோவில் ஆதிசண்டேரசுர

6. தேவர் திருவாயி மலருந்தருளிட்ட செயிதபடித் திரு ஆதி சேது

7. மடத்து முதலிகளும் மாகேசுரரும் தானந்தாரும் ராசகர

8. மும் அஞ்சு தேசத்து பரிகல செனங்களும் நிறைவற நினந்து கு

9. றைவரக் கூடி ஆதிசேது கோடீசுரசுவாமி சன்னி

10. தியில் தீற்த்த மண்டபத்திலேக் கூடி இருந்து

11. திருவாசி கிறாமம் சையிவரில் அளித்த திருக்காள

12. ஹஸ்தி ஊர்உடைய சைவாராயார் சைவேத்

13. திர சைவ சிகாமணி ஆகிய ஸூத்ரர் அதிகா

14. ரி கெவுதம கோத்திரர் ஆகிய வயிரவ நம்பி

15. யார் பிள்ளை பொன்னம்பியாருக்கு

16. உதக தான பூர்வமாக பண்ணிக்குடு

17. த்த திருவாசிக் கிறாம்மத்துக்கு திருமுகப் ப

18. ட்டையம் தாங்களித்து தாங்கள் இதுவை

19. ரயும் தரணி முழுதுடைய உம்ப வளனா

20. ட்டு குண்ணூர் னாட்டு சுவாமியார் திருக்கோ
21. டீசுரன் கொழககோவிலுடைய னாயனார்
22. கோவிலில் எங்களிதான பூசைக் காணியு
23. ம் தேவதான தேவகற்மமும் தங்களுக்குக் கட்டளை
24. யிட்டபடியினாலேத் திருக்காமிநம்பி முன்னாண்
25. டபடிக்கி ராட்டகேசடந்த மூனுவட்டத்து பூசை காணிய்
26. யி தமக்கு தானபூறுவமமாக குடுத்தபடியினாலே கொத்து
27. க்கு நடந்து வரும்படி ஆலையத்துக்கு மேற்கு னாற் கெ(ா)ல்
28. லைக்கு உள்ப்பட்ட நிலமும் தீவுதிட்டுக்களும் கொ
29. ழக கோவிலுக்கு காற்புவனத்தில் ஆலையத்துகு தெ
30. க்கு சேதுசாலைக்கு மேற்க்கு காத்தானோடை வய்க்கா
31. லுக்கு வடக்கு மேற்க்கு அஞ்சதாட்சி பெண்பிள்ளை
32. திடலுக்கு கெழக்கு வடக்கு அய்யனார் கோவில் சன்ன
33. திக்கு தெக்கு னாங்கெல்லைக்கு உள்ப்பட்ட நிலமும்
34. தோப்பு துரவும் இதின் மேற்க்கு சிறுதலைக்காட்டுத் தீவும்
35. முதலாகிய அளத்தி குள பலதீவும் இதின் கிழக்கு சீராம
36. ன் தீவும் இதின் வடக்கு கொழகர் கட்டளை நிலமும் தே
37. ாட்டத் துரவும் இந்தக் கிறாமங்களில் உள்பட்ட நஞ்சை
38. ச பிஞ்சை நிலமும் தோட்ட தொரவும் அரமனை ரொ
39. க்க மோகினி னூறு பொன்னும் உச்சவ மோகின்
40. னி அன்பது பொன்னும் ஆகனூத்தன்பது பொன்
41. மோகினியும் நிலமோகினியும் தாமே அனுப
42. வித்துக் கொண்டு முன்னாள் னாங்கள் ஆண்டு நடத்
43. தி வந்தபடிக்கி கோ(ழ)வில்த்துறை சேதுராயர் முத
44. லியார் கணக்குபடிக்கு மோகினி திட்டம் நடப்
45. ப்பித்துக் கொண்டுக் கொத்துக் குண்டாகிய பரிகல
46. செனங்களையும் முன்னாட்படிக்கு நடப்பித்து கொ

பின்பக்கம்

47. ண்டு இந்த தர்மத்தை பரிபாலனம் பண்ணிக் கொண்டு சந்தி

48. றாதித்திய வரையும் ஆண்டு அனுபவித்துக் கொண்டு சுகத்தி
49. லே இருக்க கடவறாகவும் நம்பியாருக்கு மனை மான்யம் ராசகரமும்
50. நாங்களும் பண்ணிக் குடுத்தபடிக்கி காற்புவனமாகிய கொ
51. ழுகர் கோவிலில் முன் திருக்காமி நம்பி மனை மாளிகையும் அ
52. ா சந்திக் காளமும் ஆலை[ய]த்துக்கு தெற்கு அஞ்சு வேலி நிலமும் சறுவ
53. மானியமும் அவ்மாணியத்துக்கு எல்லை ஆவன சன்னதி சாலைக்கு தெ
54. ற்கு கோனான்னோடைக்கு மேற்கு காத்தானோடை வடக்காலுக்கு வடக்கு சேது
55. சாலைக்கு கிழக்கு னாங்கெல்லைக்கு உள்ப்பட்ட நிலம் நஞ்சையி பிஞ்சையி நில
56. மும் மேல்நோக்கிய மரமும் கீனோக்கிய குளமும் அனுபவித்துக் கொண்
57. டு கோவில் பூசைக்கு கும்ப றெத்தினம் சொற்ன புழ்ப்பம் முதலான
58. சாறுவ சுவந்திரமும் சம்வரிசி உண்டானது எட்டு லொரு பங்கும் சமயல்
59. அன்ன முதலான சகலத்துக்கும் மூனுலொரு பங்கும் பத்திக் கொண்டு ஸ்வஸ்தி
60. ஸ்ரீ வுத்தமா பூறுமா [தமாரமடாதம்] பூசைக்கு மோகின ஆன நிலமானியம்
61. கழுக்கு சீராமன் தீவு னாங்கொல்லைக்கு உள்ப்பட்ட நிலம் வேலி ௩ இந்த மூனு
62. வேலி நிலமும் அனுபவித்துக் கொண்டு (இகஇ) காவிதம் ராம பாதத்துக்கு
63. பூசை பண்ணிக்கொண்டு அதில் உண்டாகிய லாபங்களும் [ராமபாத]
64. தேவராகிய பலதெளிக் கோவில்களும் அதுகள் உண்டாகிய [லாபங்]

65. களும் அனுபவித்துக்கொண்டு புத்திர பவுத்திரா பார[ம்] பரியமாக சந்திராதி

66. த்தவரையும் செல்லச் சறுவமானியமாக அனுபவித்துக் கொண்டு இந்

67. த காணிய்யித்தனாகி வித்து ஒத்துவச்சு ஆண்டு அனுபவித்துக் கொ

68. ள்ளக் கடவராகவும் பூசைக்கு லேகைப்படிக்கு உண்டானது திரு[முத

69. ல்] பத்திக் கொண்டு பூசை பண்ணி கொண்டு சுகத்திலே இருக்க கடவ

70. ராகவும் இந்த திருமுகப் பட்டையத்துக்கு எழுத்துக் குத்தம் வாசகப் பி

71. ழை வரிமறாட்டம் வெட்டுச் செதுக்கு சொலப்பட்ட எக்குத்த

72. மும் குத்தமென்று-சொல்லக் கடவதல்ல இப்படிக்கி திருமுக

73. பட்டயம் எழுதி குடுத்தோம் பொன்னம்பியாருக்கு இந்த பட்ட

74. யத்துக்கு ஹஸ்தலிகிதம் இந்த படிக்கி வயிரவ தம்பி வேளா

75. டியார் எழுத்து இந்தபடிக்கி பல்லவராயவாடியார் இந்

76. தபடிக்கி திருக்காமி நம்பி எழுத்து இந்தபடிக்கு சிதம்பரனாதவே

77. லனா சித்தர் எழுத்து இந்தபடிக்கு கோவில் அதிகாரம் சேதுரா[ம] மு

78. தலியார் எழுத்து இந்தபடிக்கு கங்கணம் ஆறு முகத்தா முதலிய

79. ார் எழுத்து இந்தபடிக்கி கோவில் கொத்து சங்கர பிள்ளை

80. எழுத்து இந்தபடிக்கி அறிவோம் வேதவனம் பூசை

81. (பூசை) சூரியமூர்த்தி நம்பியார் எழுத்து இந்த பட்ட

82. (ட)யம் எழுதினம்மைக்கு மேல்படி குழக கே

83. ாவில் சதாசிவர் கயில் முதல் எழுத்து இந்த திருமு

84. க பட்டயம் எழுதி முகிந்தது முத்தும் கோடி

85. வினாயகன் துணை உ

# 36. நந்தனூர் செப்பேடு

*வேட்டுவர் - கவுண்டர் பட்டயம்*

கரூர் மாவட்டம் கரூர் வட்டம் நந்நனூர் கிராமம் திரு ப. திருமலைசாமி கவுண்டரிடம் இச்செப்பேடு உளளது.

27x10 செ.மீ அளவுடைய இச் செப்பேடு முன்பக்கம் 24 வரிகளும் பின்பக்கம் 27 வரிகளும் கொண்டுள்ளது. முற்றுப் பெறவில்லை. 'அஞ்சூர் பிரவேசம்' என்று இச்செப்பேடு தொடங்குகின்றது.

செப்பேட்டில் அடுத்தடுத்து மூன்று இடங்களில், ஏவிளம்பி, மன்மத, விசைய ஆகிய தமிழாண்டுகள் குறிக்கப்படுகின்றன. இச்செப்பேட்டின் காலம் கி.பி 18 ஆம் நூற்றாண்டு என எழுத்தமைதி கொண்டு முடிவு செய்தால் இவ்வாண்டுகள் முறையே கி.பி 1777, 1775, 1773 ஆகிய ஆண்டுகளில் வந்தவையாகும்.

அஞ்சூருக் கவுண்டர்கள் எனக் குறிப்பிட்டு ஆட்பெயர்கள் வேட்டுவன், கவுண்டன் என்ற பின்னொட்டுச் சொற்களுடன் கலந்து மாறி மாறி வருகின்றன.

செப்பேட்டின் நோக்கம் என்ன? என்பது தெளிவாக இல்லை. பல்வேறு பெயர்களில் நிலப் பெயர்களும் அவற்றின் அளவு ஏலை/ ஏலகுழி 1,2,3 என்ற எண்களில் ஒவ்வொரு திசையிலும் குறிக்கப்பட்டுள்ளன. ஒரு இடத்தில் 'எல்லை தீருமானம் பண்ணித்தந்த படி' என்றும் மற்றொரு இடத்தில் 'மொஞ்சனூர்' தஞ்சமநெல்லூர் எல்லைகொல்லை தீர்ந்த பிரகாரம்' என்றும் மற்றொரு இடத்தில் 'மூன்று

---

*கல்வெட்டு* இதழ் எண்.33 பிரஜோற்பத்தி ஆண்டு மாசித்திங்கள் (1992 பிப்ரவரித் திங்கள்) பக் 13-19. 'நந்தனூர் செப்பேடு' என்ற தலைப்பில் கட்டுரையாக எழுதியவர்கள் திரு கோ. அர்ச்சுணன் காப்பாட்சியர், கரூர், திரு இரா. ஜெயராமன் இளநிலைக் கல்வெட்டாய்வாளர், தஞ்சை.

பேருங்கூடி அவசர அவசர நிமித்தியமாக வாங்கினது மூவாயிரம் பொன் வாங்கிக் கொண்டு' ..'சம்மதிச்சு விட்டகாணி' என்றும் சொற்றொடர்கள் உள்ளன.

## செப்பேடு

### முதல் பக்கம்

1. அஞ்சூரு பிரவேசம் - சேரன் சோளன் பாண்டியன் செட்டி சிவப்பிராமணன் காலத்திலே ஏர்விளம்
2. பி ஸூ சித்திரை மீ உ௰ தேதி அஞ்சூரு கவுண்டர்கள் பாண்டி வேட்டுவன் சின்னபய்யக் கவுண்டன் காசிய
3. கண்டி கவுண்டன் சம்மந்த நாராயண புல்ல வேட்டுவன் அந்துவ வேட்டுவன் சின்னபய்யக் கவுண்டன் காசிய
4. ப்ப கவுண்டன் மோக்காளி வேடுவன் க்ஷ கவுண்டன் முன்னை வேடுவன் அல்லாளிக் கவுண்டன் யி
5. துக்கு எல்லை கொல்லைச் சாறை எடப்பாழி கிளக்கு நெட்டு ஏலைக்குழி - உ பெரும்பரப்புக்கு மோர்கா
6. லே ஏலை குளி - க - அதுக்கு தெர்கே ஏலை குளி - க - அதுக்கு மோர்க்கு அதைனோடே சேர்த்து அதுக்கு கிளக்கு வெங்
7. கம்புனோடே சேர்ந்து அந்த ஏலைக்குளிக்குத் தெற்கு ஆமைக் கல்லு - பாழிக்கு கிளக்கு அதுக்கு வடக்கு ஏலைக்குழி
8. உ - அதுக்கு கிளக்கு கருங்கல்லுலே ஏலைக்குளி - உ - அதுக்குத் தெர்க்கு கரும்பாரையிலே ஏலைக்குளி - க -
9. அதுக்கு தெர்காலே ஏலை குளி - க - கீள் பிரமதானத்து கீள்ம் - மேற்குபுரம் அஞ்சுனோடே சேர்ந்து அ
10. துக்கு தெர்காலே ஏலை குளி - உ - அதுக்கு தெர்காலே மாவலிங்கம் பரப்புக்கு மோர்க்காலே ஏல குளி - - அதுக்கு
11. தெர்க்காலே ஏல குளி - உ - மேர்க்கு நெட்டு சம்பங்கனார்க்கு தெர்காலே ஏலகுளி - க - அதுக்கு மோர்காலே பண்ணிகல்லு
12. க்கி தெர்காலே பரப்பிலே ஏலை குளி - க - அதுக்கு மோர்கு மயிலாடி பாறையிலே ஏலை குழி - உ - அதுக்கு

13. மேல ஏல குளி - க - அதுக்கு மேர்காலே கரடிக் காட்டிலே ஏல குளி - உ - அதுக்கு மேர்க்காலே கிடாத்தலை பாளி

14. வெங்களத்து பள்ளம் ஏலை குளி - க - அதுக்கு மேற்கு யுமை காழி கோயிலுக்கு வடக்கு புரம் எல கு

15. ளி - க- அதுக்கு மேர்க்கு கண்ணுலி சேந்தான் பாழியிலே ஏல குளி - உ - அதுக்கு மேர்கு புரச பாழியிலே

16. ஏல குளி - க - அதுக்கு மேர்க்காலே சென்னய கல்லுலே ஏலகுளி ங அதுக்கு மேர்க்கு நெட்டு வடக்குபிரம்

17. வளுக்குப் பாறையிலே ஏல குளி - க - அதுக்கு ஏணி பாளியிலே உல குளி - உ - அதுக்கு வடக்காட

18. கரட்டுக்கு மேற்கு உலகுளி - உ - அதுக்கு வடக்காலே குளி - உ - அதுக்கு வடக்குபுரம் கருங் கல்லுலே உல குளி- · -

19. அதுக்கு கிளக்கு நெட்டு ஏல குளி - உ - அதுக்கு கிளக்கு வட்டப் பாரையிலே கல்லு சாதநம் போட்டிருந்து அதுக்கு கிளக்கு வெ

20. டி சரம்பாளியிலே ஏல குளி - உ - அதுக்கு கிளக்கு புரச பாளியிலே ஏல குளி - உ - அதுக்கு மூக்கு பாலியிலே ஏல குளி

21. உ சேரன் சோளன் பாண்டியன் செட்டி சிவபிராமணன் காலத்திலே அஞ்சூர் கவுண்டரும் எல்லை தீருமாந

22. ம் பண்ணி தந்த படினாலே புல்லை வெள்ள முன்மலயாரங்கி ரெங்கக் கவுண்டன் வெம்பனூக் கவுண்டன்

23. வெம்ப வேடுவன் யுத்தமலிங்க கவுண்டன் முளை வேடுவன் றாசாகவுண்டன் கூடலூரு மாந்ை

24. த படை வேடுவன் வண்டி கவுண்டன் வெங்கல னாட்ட சல்வி காளத்தி கவுண்டன் குடையூ

பின் பக்கம்

25. ர் புரைகிலா கவுண்டன் கிளங்க நாடுத் தஷ கவுண்டன் புன்னம் பூவாநி வேடுவன் சேசுவராயன் வெங்

26. கிராமத்து சம்மந்த நாராயன புல்லை வேடுவன் காரைகுலம் சாமிநாத கவுண்டன் கூரை காளி கவுண்டன் கோல

27. ன் கோயில் சொன்னை வேடுவன் பதரை வேடுவன் முத்தூர் மணிய வேடுவன் அஞ்சூர் கட்டு கல்லனை

28. கள்ள பிரவி பிள்ளை பிராமணன் மலையம்மன் கோவில் அண்ணாமலைப் பண்டாரம் அம்மன் கோவில்

29. சின்ன (செட்டி) நோட்டகால பிரமநாசாரி நாரி துலி சமன் பரப்பிச் சாத்தான் சங்கிடுவான் தன்குலத்துபாயன்ம

30. ாட்டயான் சாமன் சாத்தான் அஞ்சூர் கவுண்டரும் எல்லை கொல்லை தீர்த்த பண்ணி கடதினக்கு யித்
தினை பேரும் சா

31. ட்சி-சேரன் சோளன் பாண்டியன் காலத்திலே செட்டி சிவ பிராமணன் காலத்திலே மன்மத ஸ்ரீ ஆவ

32. ணி மீ உயச தேதி செங்குடனாட்டுக்கு தெற்காம் ஏலகுளி-க-அதுக்கு தெற்கு ஏலகுளி-க-அதுக்கு தெற்கு ஏல குளி

33. -க-அதுக்கு தெற்கு ஏல குளி-உ-அதுக்கு தெற்கு புல்லை கல்லுலே ஏலகுளி ௩ அதுக்கு தெற்கு குளி-க-வயி

34. ரமடையிலே ஏலகுளி-௩-அதுக்கு மேற்கு மலையிலே ஏலகுளி-உ-அதுக்கு தெற்கு ஏலகுளி-உ-அதுக்கு

35. மேற்கு நெட்றிலே ஏல குளி-உ-அதற்கு மேற்கு ஏல குளி-க- அதுக்கு தெற்கு வடக்கு நெட்றிலே ஏலகுளி- -அதுக்கு வடக்

36. கே ஏல குளி-க-தஞ்சம நெல்லூருக்கு மேற்கு புல்லைக்கல்லிலே ஏலகுளி-உ-அதுக்கு வடக்கு ஏல குளி-உ- அதுக்கு வட

37. க்கு ஏல குளி-க-அதுக்கு வடக்கு ஏலகுளி-உ-அதுக்கு வடக் காலே ஏலகுளி-க-பாப்பான் பரப்பிலே ஏலகுளி

38. - -வெம்ப வேடுவன் யுத்தமலிங்க கவுண்டன் கீனார் வேடுவன் லட்சும கவுண்டன் வெங்காட்சி வே

39. வடுவன் கூடறாய கவுண்டன் சேரன் சோளன் பாண்டியன் செட்டி சிவப்பிராமணன் காலத்திலே

40. யிந்த மூன்று பேரும் கூடி மொஞ்சனூர் தஞ்சம நெல்லூர் எல்லை கொல்லை தீர்ந்த பிரகாரம் யிதுக்கு சாட்சி

41. கொடந்தூர் மன்றாடி வேடுவன் ராச கவுண்டன் தென்னிலை கிராம மோக்காளி வேடுவன் சின்னா

42. கவுண்டன் காரவிளி புல்லை வேடுவன் சம்மந்தராய கவுண்டன் முத்தார் மணியன் முத்த கவுண்டன்

43. மணிய வேடுவன் மணிய கவுண்டன் சாட்சி யித்தன பேர் கூடி யிதுக்கு கட்டு கல்லணை சிவப்பிராமண அ

44. னந்தயன் நல்ல ஆசாரி காளியான கோயிலொன் வெங்கிச்சி வேடுவன் கீனார் வேடுவன் வெம்

45. ப வேடுவன் யிந்த மூன்று பேர் வரகு திண்ணப் பெருங் குடியாந் மொளை வாங்கியப்ப கவுண்டன் தன

46. சு வெள்ளாழன் புறவியா கவுண்டன் யிவர்கள் [கை]கயிலே யிந்த மூன்று பேருங் கூடி அவசர நிமித்தி

47. யமாக வாங்கினது மூவாயிரம் பொன் வாங்கி கொண்டு யிது வின்பெரு நாட்டார் யார் சம்மதிச்

48. சு விட்ட காணி . . .

49. சேரன் சோளன் பாண்டியன் காலத்திலே செட்டி சிவ பிராமணன் காலத்திலே வி

50. சையா ஸ்ரீ வைய்யாசி மீ -யஅ தேதி காரவினி எல்லை கொல்லையும் காழி கோவில்

51. க்கு மேற்கு ஏல குளி-உ-அதுக்கு தெற்கு ஏல குளி-உ-அதுக்கு தெற்கு ஏல குளி-க-அதுக்கு

(செப்பேடு முடிவு பெறவில்லை)

# 37. மானூர் செப்பேடு

*கோயில் வழிபாட்டுக்கு விசுவகர்ம ஆசாரிகள், மள்ளர், குடும்பர்/பள்ளு கொடுத்தப்பட்டயம்*

இச்செப்பேடு விருதுநகர் மாவட்டம் திருச்சுழியல் வட்டம் நரிக்குடிக்கு அருகில் உள்ள மானூர் சுப்பிரமணிய சுவாமி கோயில் குருக்களிடத்தில் உள்ளது.

முன்பக்கம் 51 வரிகளும் பின்பக்கம் 48 வரிகளும் ஆக 99 வரிகளில் செப்பேட்டு வாசகம் பொறிக்கப்பட்டுள்ளது.

செப்பேட்டின் 84வது வரியில் சகவருடம் 1681 (கி.பி.1759) கலிவருடம் 4860 (கி.பி.1759) தமிழ் வருடம் பிரமாதிச (கி.பி. 1754) ஆகியவை குறிப்பிடப்பட்டுள்ளன. மன்னர் பெயர் எதுவும் குறிப்பிடப்படவில்லை.

மானூரில் வேலாயுதசாமியார் ஏற்படுத்திய சுப்பிரமணிய சுவாமி கோயிலுக்கு அபிஷேகம், நெய்வேத்தியம், திருவிளக்கு, 16 உபசாரம முதலிய வழிபாடுகள் தொடர்ந்து நடப்பதற்காகப் பலபகுதிகளில் உள்ள விசுவகர்ம ஆசாரிமார்களும், பலபகுதிகளில் உள்ள பள்ளுகளும், குடும்பர்களும் வருடந்தோறும் ஒவ்வொரு குடிக்கு 1 பணம் வீதம் கொடுப்பது என்று நிறைவேற்றிய தீர்மானம் இச்செப்பேட்டில் சொல்லப்பட்டுள்ளது. இத்தீர்மானம் சிவெங்கை அக்காசாலைப் பிள்ளையார்கோயிலில் கூடி நிறைவேற்றப்பட்டது.

விசுவகர்மாக்களின் தோற்றம், வளர்ச்சி செயல்பாடுகள் குறித்த புராணம் ஏறத்தாழ 60 வரிகளில் சொல்லப்பட்டுள்ளது. பல திசை, பலசாதி, பலகுழு ஆசாரிமார்கள், பள்ளுகள், குடும்பன்களும் தீர்மானம் நிறைவேற்றியமை குறித்துச் சொல்லப்பட்டுள்ளனர்.

---

இச்செப்பேட்டினை அறிந்து படியெடுத்து 'மானூர் பள்ளர் கம்மாளர்' செப்பேடு என்ற தலைப்பில் கட்டுரை வழங்கியவர் முனைவர் வெ. வேதாசலம் கல்வெட்டாய்வாளர், மதுரை.

செப்பேடு

முன் பக்கம்

1. சுபமஸ்து ஆதித்தனெங்கே அயன்மூவர் தாமெங்கே வேதச் சொல்லெங்கே. விளைவெங்கே நீதிக்குள் மண்ணாாளலெங்கே

2. வாமபுதானெங்கே கண்ணாளா கைவிலகினால் உ பிரிதிவி யில்லாத காலத்தில்த் தண்ணீரில்லாத காலத்தில் வாயுவில்லாத காலத்தில்

3. அக்கினியில்லாத காலத்தில் ஆகாசமில்லாத காலத்தில் சந்திரனுந் சூரியனுமில்லாத காலத்தில் நட்செத்திரமுந் திதியும் வாரமும்

4. யோகமுங் கரணமுமில்லாத காலத்தில் பூவும் வாசமு மில்லாமல் ஆணும் பெண்ணு மில்லாமல் னாணீ யென்னும் ஆணுமில்லாமல்

5. ச்சறுவநளியமாய் நிராயமான காலத்தில் ஆதிவிசுவேசுரன் அருவமாய் தோன்றினாரதில் ஆரென்னில் அடிவினும் முடிவினும் அங்

6. கெங்கும் ஏகமாய் விடியும் உதையம்போல விளங்கியவாறு போலாகி விசுவேசுரன் அருவ உருவமாய்த் தோன்றின காலத்தில் சு

7. ரூப விளக்கத்தில் உலகமெல்லாம் தோன்றி அதில் குளுமை தோன்றி அதில் அக்கினி தோன்றி இதுரெண்டுங்கூடி இயக்கமான கா

8. லத்தில் நாதந்தோன்றி நாதத்தில் விசுவந் தோன்றி அதில் ஓங்காரந் தோன்றி ஓங்காரத்தில் விந்துத் தோன்றி விந்துவால் ஆகாசந்

9. தோன்றி ஆகாசத்தில் அக்கினிதோன்றி அக்கினியில் அப்புத் தோன்றி அப்புவினிடமாய் வாய்வுத் தோன்றி வாய்வுனிடமாய்ப் பி

10. றிதியி தோன்றி இப்படியான அஞ்சும் விசுவமாகிய இல்லிடம் இந்த இல்லிடம் அஞ்சுக்கு மஞ்செழுத்து உணடாச்சுது இந்த அ

11. ஞ்செளுந்தும் நகாரம் மகாரம் சிகாரம் வகாரம யகாரம் உண்டாச்சுது இந்த அஞ்செளுத்துக்கு முயிரெளுத்து யேதன்னில்

12. அ-இ-ஊ-எ-ஏ. வென்ற அஞ்சம் விசுவமாச்சுது விசுவந்தானே உருவெடுத்த திறம் யெப்படி யென்னில் நகராமென்ற மண்ணும்

13. மகார மென்ற தண்ணீரும் சிகாரமென்ற தீயும் வகாரமென்ற வாய்வும் யகார மென்ற ஆகாசமுங்கூடி இந்தச் செகத்துக்கா

14. சு அஞ்சும் பஞ்சறத்த தவ்வியமாச்சுது அதில் விசுவப்பிறம்மா யுருவெடுத்துத்தா(ர்) பாசங்களுண்டாக்க வேணுமென்ற நா

15. க கோணமாகிய பூமியிலே யெட்டுத்திக்குப் பதினாறு கோணமும் திட்டித்து இது நடுவே மயினாக்கிரி மந்தாகிரி வடவித்நதகிரி

16. கயிலையங்கிரி நிடதகிரி இயம்கூடகிரி கந்தமாதனகிரி நீலகிரி இந்தக்கிரியெட்டும் திட்டித்து அட்டதிக்குப் பாலகாள் எட்டு

17. ப்பேரையும் திட்டித்து அனந்தன் வாசுகி தறகன் பறமன் குளிகன் சங்கன் சங்கபாலன் காற்கோடகனிப்படி அஷ்டமானாகங்களு

18. ந்திப்படித்து தானாகிய பிறம்மா விஷ்ணு ருத்திரன் மயேசுரன் சதாசிவ மென்கிற அஞ்சும் பஞ்சாசாடசரத்திலடைந்த போது அய்வரும் மூ

19. வரானார்கள் மூவரில் ஆரென்னில் பிறம்மா விஷ்ணு ருத்திரன் இந்த மூன்றுபேரும் சூலம் போலுட லொன்றால் காலொன்றாய்க் கை

20. வொன்றாய்ச் சிரசொன்றா யுரவெடுத்தார்கள் அந்த வேளையிலே விஷ்ணுவானவர் ருத்திரனையும் பிரம்மாவையும் மெடுத்து முளுங்

21. கவேணுமென்று முளுங்கச்சே பிரம்மா அகப்பட்டு ருத்திரர் பிறம்பே போனார் பிர்மா விஷ்ணுவினுடைய உந்தியிலகப் பட்டுக் கொண்டு

22. பத்து யுகந் திருவுந்திக் கமலத்திலிருந்து முதிரவிளைந்த முட்டைக்குஞ்சு போலிருந்த பிர்மதேவர் ஈசுவரனை நோக்கி வெகு

23. கால் தவசு பண்ணினார் அப்போது ஈசுரன் பிறசித்தமாய்த் தோன்றி வாரும் பிரம்மாவே நமக்கும் உமக்கும் பூமியந்தர சொற்கத்துக்

24. மே குருவாகி யிருக்கிற ஆதிவிசுவ பிரம்மாவை நோக்கி தவசு செய்தால் அவர் கிறுபையினாலே விமோசனம் வருமென்றார் அப்

25. படியே அவரைநோக்கித் தவசு செய்தார் அப்படியே விசுவபிரம்மாப் பிறசித்தமாய்க் தோன்றிச் சூரியயென்கிற கண்ணை

26. விளித்துப் பார்ததார் பார்த்தவுடனே பிரம்மதேவரிருந்த தாமரை விரிந்து அப்போது ஒரு கருவி நேமித்துத் தாமரை தண்டைய

27. றுக்கப்பண்ணிப் பிரம்மாவைப் பிறப்பித்து அந்த தாமரை நூலாலே யெக்கிய பவீதமும் மந்திர குறுகையும் பண்ணித் த

28. ரித்த அவருக்கு விசுவப்பிரமமே நமாவென்று உபதேசம் போதித்தார் அந்தப் பிரம்மாவானவர் விசுவப்பிரம்மத்தைப்

29. பிறதெக்ஷணம் வந்து யென்குருசாமியே யெனக்கு நடக்க வேண்டிய பணியிடை யென்னவென்று கேட்க அப்போ

30. து செகத்துக்குப் பஞ்சபூதசராசரங்கள் நேமிக்க யென்று சொல்ல அப்போது பிரம்மாவானவர் யெனக்கு இது தெரியுமோ

31. வென்று கேட்க அப்போது சராசரங்கள் நாம் முடிக்கிறோம் நீயாண் பெண் ணென்று உண்டு பண்ணி விடுமென்று சொல்

32. ல அப்போது அதுக்குப் பதில்ச் சூத்திரமுடிச்சுத் தந்தாலந் தப்படிக்கு நடப்பிவிக்கிறே னென்று கேட்க அப்படியே ஆவிடை

33. யாரும் லிங்கமும் செய்து கொடுத்து சுருபம்யென்னை போலேயும் அவள் கண்ணைப் போலேயும் படையுமென்று சொன்னாரப்

